# KARṆAṈ THE MUNIFICENT
# கர்ணன் போர்

*General Editor*
G. JOHN SAMUEL

*Editor*
R. JAYALAKSHMI

*English Rendering*
Prof. K.G. SESHADRI




**INSTITUTE OF ASIAN STUDIES**
Chemmancherry, Chennai-600 119
India

KARNAN THE MUNIFICENT
கர்ணன் போர்

First Edition 1999, pp. xc+496

Publication No. 80



Price Rs. 500 US $ 50

**Published under the financial assistance received from the Directorate of Tamil Development of the Government of Tamil Nadu for good translations.**

**Copies can be had from**

Publications Division,
Institute of Asian Studies,
Chemmancherry,
Chennai-600 119.
India.

Phone: (Off.) 4961662, 4960831
(Res.) 4960085
Fax : 91-44-4960959
E-mail: ias@xlweb.com
world wide web site : http//xlweb.com/heritage/asian

Composed by

Institute of Asian Studies, Chennai - 600 119.

Printed by

STUDENTS OFFSET SERVICES, Chennai - 600 017. Ph. 4343862

# CONTENTS

# பதிப்புரை

அச்சுயுகம் வந்து ஆண்டுகள் பல ஆன பின்பும், இன்னமும் வெளிவராத பல நூல்கள் ஓலைச்சுவடி வடிவில் உள்ளன. அவற்றை உலகுக்கு அறிமுகம் செய்யும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது ஆசியவியல் நிறுவனம்.

நிறுவனச் சுவடித்துறை இதுவரை பதினைந்து கதைப் பாடல்களையும், மூன்று யட்சகான நாடகங்களையும், மூன்று சிற்றிலக்கியங்களையும், சகுந்தலை நாடகம் என்னும் ஒரு நாடக நூலையும், வர்மசூத்திரம், கணிதநூல், மத்தளவியல் என்னும் மூன்று நுண்கலை நூல்களையும் வெளியிட்டுள்ளது. அன்றியும் தமிழ்நாடு முழுவதிலுமுள்ள சுவடிகளைத் திரட்டி, தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணைகளாகப் (Discriptive catalauge of palm-leaf manuscripts) பத்துத் தொகுதிகளையும் வெளியிட்டுள்ளது.

இவ்வெளியீடுகளை அடுத்து, கதைப்பாடல் வரிசையில் **கர்ணன் போர்** என்னும் இம் மகாபாரதக் கதைப்பாடல் வெளிவருகிறது.

## பதிப்பு நோக்கம்

மகாபாரதக் கதை பெரும்பாலோரால் அறியப்பட்டும், பல்வேறு ஆசிரியர்களால் பல்வேறு வகையாகச் சொல்லப்பட்டும் வந்த போதிலும் மக்களுக்கு இதன்மீது சலிப்பு ஏற்படுவது கிடையாது. எனவே இப்பாரதக் கதையும், இதன் கிளைக் கதைகளும் கூத்துவடிவிலும், நாடக வடிவிலும் காலட்சேப வடிவிலும் வில்லுப்பாட்டு வடிவிலும், திரைப்பட வடிவிலும் பல்கிப் பெருகி மக்களை ஈர்த்து வருகின்றன. இக்கதையைக் கையாளும் ஆசிரியர்கள் அவரவர் மரபிற்கேற்ப ஆங்காங்கே சிற்சில மாற்றங்களைச் செய்து வருகின்றனர். வியாச பாரதத்தில் ஒருவகையாகப் படைக்கப்பட்ட பாத்திரம் வில்லியால் மற்றொரு வகையாகப் படைக்கப்பட்டு, நாட்டுப்புறக் கலைஞர்களால் வேறொரு வகையாகப் படைக்கப்படுகிறது. கர்ணன் பாத்திரமும் இவ்வாறே வியாசரால் ஒருவகையாகக் காட்டப்பட்டு வில்லியால் சிறிது மேம்படுத்தப்பட்டுப் பாமர மக்களிடையே வேறு வகையாக உலா வருகிறது செஞ்சோற்றுக் கடனுக்காக உடன்பிறப்புகளுடன் போர் செய்து மாண்டதுதான் கர்ணனின் படைப்பில் சிறந்த இடம். 'இறப்போம்' என்று தெரிந்தும் எல்லாவற்றையும் தானமாக அளித்த பகுதி கர்ணன் போர் செய்யும் பகுதி. எனவே கர்ணனின் பதினேழாம் நாள் போர் **கர்ண மகாராஜன்** சண்டை என்ற பெயரிலும் **கர்ணன் கதை போர்** என்னும் பெயரிலும் இரண்டு வகையாக எழுதப்பட்டுள்ளது. **கர்ண**

**மகாராஜன் சண்டை** முன்னரே அச்சாகியுள்ளது. தற்போது பதிப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட **கர்ணன் போர்** என்னும் இந்நூல் மகாபாரதக் கதை நிகழ்வுகளோடும், மேலே கூறப்பட்ட **கர்ண மகாராஜன் சண்டை** கதை நிகழ்வுகளோடும் மாறுபட்டு இருப்பதால் பதிப்புக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

**சுவடி பற்றிய செய்திகள்**

**கர்ணன் போர்** என்னும் இந்நூல், ஆசியவியல் நிறுவனச் சுவடிப் புலத்தில், 247 ஆம் எண்ணில், பாதுகாத்து வைக்கப்பட்டுள்ள சுவடியிலிருந்து பெயர்த்து எழுதப்பட்டது. இதன் நீளம் 38.5 செ.மீ. அகலம் 2.5 செ.மீ. மொத்த ஏடுகளின் எண்ணிக்கை 113. ஏடுகள் நன்னிலையில் உள்ளன. இறுதியில் ஒரு வெற்றேடு வைத்து மேலும் கீழும் மரச்சட்டத்துடன் இடையே ஒரு துளையிட்டுக் கயிறு கோத்துக் கட்டப்பட்டுள்ளது.

**எழுத்தமைதி**

எழுத்துக்கள் விளங்கும்படி எழுதப்பட்டுள்ளன. எல்லா ஏடுகளையும் போலவே எகர, ஒகரக்குறில் நெடில் வேறுபாடு இன்றியும், புள்ளியில்லாமலும் எழுதப்பட்டுள்ளன. ஆனால் பாடல்கள் அடிபிரித்து எழுதப்பட்டுள்ளன. ஓலை இரண்டாகப் பகுக்கப்பட்டு ஒரு பகுதி எழுதியபின் அடுத்த பகுதி எழுதப்பட்டுள்ளது ஒவ்வோர் அடியிலும் இறுதி எழுத்து சற்று விலகியுள்ளது.

**சான்று:-**

அரவக கொடியொ னானதிரி யொதனனு ம

மாபாவி செயித வஞ்சினைக ளாலெதா ன

கானமை படுமநதுயறங் காசினியொர கெட்பார காண

செனம பகையாலெ செருவில புகுந்தகை த

ரகரம், றகரமாகவும் (துயரம் > துயறம்), ழகரம் ளகரமாகவும் (குழலாள் > குளலாள்) எழுதப்பட்டுள்ளது. சொல்ப்பெரிய, கர்ணன்ம்படுந்துயரம், கர்ணன்ங்கதை, நான்ந்தருவேன் என ஒற்று மிக வேண்டாத இடங்களில் மிகுந்துள்ளது. துரியோதனன் > திரியோதனன், செய்த > செயித, வஞ்சனை > வஞ்சினை, நிற்க > நிக்க, வயிற்றோனே > வயத்தோனே, கொடை > குடை,

கேட்கும் > கேள்க்கும், பார்த்தன் > பாத்தன், என்று > எண்டு, கொற்றவர் > கொத்தவர், கை > கையி என்பன போன்று பலசொற்கள் பேச்சு வழக்கில் எழுதப்பட்டுள்ளன. னகரம் ணகரமாக (மன்னர் > மண்ணர்) எழுதப்பட்டுள்ளது கிரந்த எழுத்தாகிய ஸ, ஷ வாக மாற்றம் பெற்றுள்ளது. (அஸ்திரம் > அஷ்திரம்) இவ்வாறு நூல் முழுவதும் பல மாறுபாடுகள் காணப்படுகின்றன.

## சுவடியின் காலமும் படியெடுத்தவரும்

இறுதியேட்டில் நூலின் முடிவில் "விசு வருஷம் மாசி மாதம் முதல் தேதி சனிக்கிழமை அனுச நெட்சத்திரமும் சிங்க லெக்கினமும் கூடிய சுபயோக சுபதினத்தில் கர்ணன் படைபோர் எழுதி முகிந்தது முத்தும் இந்தக்கதை எழுதினேன் மேற்படியூர் வண்ணாங்குண்டுயில் இருக்கும் தவசி வீரபத்திரன் செல்வக்குமாரன் பேரன் முத்திருளாண்டி முகுந்தன் கை அட்சரம்" என்ற குறிப்பு காணப்படுகிறது விசு வருஷம் மாசிமாதம் முதல்தேதி சனிக்கிழமை அநுச நட்சத்திரத்திற்குச் சரியான ஆங்கிலத் தேதி 11.2.1882. எனவே இச்சுவடி எழுதிய நாள் 11.2.1882 என்பதும், வண்ணான்குண்டைச் சேர்ந்த வீரபத்திரன் என்பவரின் பேரனாகிய முத்திருளாண்டி இதை எழுதியவர் என்பதும் தெரிய வருகின்றன. வண்ணான் குண்டு என்பது ராமநாதபுரம் மாவட்டம், ராமநாதபுரம் தாலுகாவைச் சார்ந்த கிராமம். இது திருப்புல்லாணிக்கு அருகில் உள்ளது

நூலின் ஆசிரியர் பற்றிய எந்தக் குறிப்பும் சுவடியில் காணப்படவில்லை.

## யாப்பமைதி

ஓரிடத்தில் கூட பிழையின்றி தூய கலிவெண்பா யாப்பில் நூல் அமைந்துள்ளது.

## பதிப்பின்போது செய்யப் பட்ட மாற்றங்கள்

1 எழுத்துப் பிழைகள் நீக்கப்பட்டு உரிய எழுத்துக்கள் இடப்பட்டுள்ளன.

2. கொச்சைச் சொற்கள் இலக்கணப்படி எழுதப்பட்டுக் கீழே சுவடிச் சொற்கள் தரப்பட்டுள்ளன.

3. கதையை விளக்க ஆங்காங்கே சிறு தலைப்புகள் அடைப்புக் குறிக்குள் தரப்பட்டுள்ளன.

4. அருஞ்சொற்களுக்குப் பொருளும் தேவைப்பட்ட இடங்களில் சிறு விளக்கங்களும் ஆங்காங்கே தரப்பட்டுள்ளன.

5. காணனஙகதை யதனை என்பது போல் வரும் இடங்களில் கர்ணன் அம் கதை (அழகிய கதை) என்று பிரித்து எழுதவும் வாய்ப்புள்ளது. மாமுன் நிரை வருவது சிறப்புடைத்து என்னும் யாப்பு கருதி கர்ணன் கதையதனை என எழுதப்பட்டுள்ளது.

6 தமிழ் தெரியாதவர் மூலத்தை அறிய எழுத்துப் பெயர்ப்பு தரப்பட்டுள்ளது.

7. நூலின் இறுதியில் மகாபாரதத் தொடர்பான கதைப்பாடல்களும், 'போர்' என்னும் தலைப்பில் வரும் கதைப்பாடல்களும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

8 கர்ணன் போரோடு தொடர்புடைய பொன்னுருவி புலம்பல் என்னும் கதைப்பாடல் இதுவரை வெளிவராமையால் அதுவும் இறுதியில் எழுத்துப்பெயர்ப்புடன் கொடுக்கப்பட்டுள்ளது. இச்சுவடி ஆசியவியல் நிறுவனச் சுவடிப் புலத்தில் எண் 1A ல் உள்ளது. நீளம் 40 செ.மீ. அகலம் 3.5. செ.மீ. மொத்த ஏடுகள் 15. இதுவும் இரண்டு பிரிவாக எழுதப்பட்டுள்ளது.

9. நூலுள் புகுமுன் நூலை அறிமுகப்படுத்தும் வாயிலாக பாரதம் பற்றியும் கதை வேறுபாடுகள் பற்றியும் ஒரு சிறிய ஆய்வுரை தரப்பட்டுள்ளது.

10. சுவடியின் முதல் ஏட்டில் **கர்ணன் கதை சண்டை** என்று தலைப்பிடப்பட்டுள்ளது. ஆனால் இறுதியில் **கர்ணன் கதை போர்** எழுதி முகிந்தது என்று உள்ளது. முன்னரே ஒரு **கர்ணமகாராஜன் சண்டை** வெளிவந்திருப்பதால் **கர்ணன் கதை சண்டை** என்னும் தலைப்பை விடுத்து **கர்ணன் போர்** என்றே நூலுக்குத் தலைப்பு தரப்பட்டுள்ளது.

# A System of Transliteration of Tamil

## VOWELS

| Short | | Long | |
|---|---|---|---|
| அ | a | ஆ | ā |
| இ | i | ஈ | ī |
| உ | u | ஊ | ū |
| எ | e | ஏ | ē |
| ஒ | o | ஓ | ō |

| | |
|---|---|
| ஐ | ai |
| ஔ | au |

## CONSONANTS

| Hard | | Soft | | Medial | |
|---|---|---|---|---|---|
| க் | k | ங் | ṅ | ய் | y |
| ச் | c | ஞ் | ñ | ர் | r |
| ட் | ṭ | ண் | ṇ | ல் | l |
| த் | t | ந் | n | வ் | v |
| ப் | p | ம் | m | ழ் | ḻ |
| ற் | ṟ | ன் | ṉ | ள் | ḷ |
| ஸ் | s | ஷ் | ṣ | ஹ் | h |
| | | ஜ் | j | | |

ĀYTAM

ஃ ḵ

## நன்றியுரை

இச்சுவடியைப் பதிப்புக்கு எடுத்துக் கொள்ள ஒப்புதல் அளித்து அவ்வப்போது ஊக்கமும் அளித்த நிறுவன இயக்குநர் முனைவர் **ஜி. ஜான் சாமுவேல்** அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு சுவடியைப் பதிப்பிக்க வேண்டும் என்னும் கருத்தை முன்வைத்து, சுவடியைப் படியெடுக்கும்போது ஐயங்களைத் தெளிவுபடுத்தியும், பதிப்புரை, ஆய்வுரைகளைச் செம்மைப்படுத்தியும் நிறுவன சுவடித்துறை வெளியீடுகள் அனைத்தும் செவ்வனே அமைய உறுதுணையாக விளங்குகின்ற சுவடித் துறைத்தலைவர் முனைவர் **பூ. சுப்பிரமணியம்** அவர்களுக்கு என்றும் நன்றிகூறக் கடப்பாடுடையேன்.

சுவடியை நிறுவனத்துக்கு அளித்துதவிய திருப்புல்லாணி **பி. கோவிந்தசாமி** அவர்களுக்கும், அதனைப் பெற்றுத் தந்த திரு. **மு.கோ. ராமன்** அவர்களுக்கும், இச்சுவடி கர்ண மகாராஜன் சண்டையினின்றும் வேறுபட்டது என்று கூறிப் பதிப்புக்கு வழி காட்டிய திரு. **மொ. மருதமுத்து** அவர்களுக்கும் என் நன்றி.

**கர்ணன் போர்** என்னும் இந்நூல் முழுமையும் மிக விரைவில் மிக அழகாக மொழி பெயர்த்துதவிய பேராசிரியர் **கே. ஜி. சேஷாத்திரி** அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றி.

**கர்ணன் போர், பொன்னுருவி புலம்பல்** இரண்டையும் எழுத்துப் பெயர்ப்பு செய்து கொடுத்த திருமதி. **ஜி. செல்வலட்சுமி**, சொல்லடைவில் உதவிய திரு. **ய. அந்தோனிசாமி**, திரு. **கோ. உத்திராடம்**, திரு. **கி. பன்னீர் செல்வம்**, பாரதம் தொடர்பான நூல்களை உதவிய திரு. **கி. ஜெயகுமார்**, அட்டைப்படம் வரைந்துதவிய திரு. **அ.செ. நடராசன்**, கணிப்பொறியில் கட்டமைத்துக் கொடுத்த திரு. செல்வி. **எஸ். தேவி**, செல்வி. **ஜி. அனிதா**, மற்றும் ஆசியவியல் நிறுவன கணிப்பொறித் துறையினர், அழகாக அச்சிட்டு உதவிய **மாணவர் மறுதோன்றி அச்சகத்தினர்** ஆகிய அத்துணை நல்ல உள்ளங்களுக்கும் என் நன்றி.

**ஆர். ஜயலட்சுமி**

# Editorial Preface

Long years after the advent of printing, still there are many writings which remain as palmleaf manuscripts only. The Institute of Asian Studies is actively engaged in introducing these works to the world of readers. The Manuscripts Department of the Institute has so far published 15 folk balleds 3 *Yaṭcakāṉa* plays, 3 minor literary pieces, a drama by name *Cakuntalai nāṭkam*, and 3 works on rare fine arts named *Varma Cūttiram*, *kaṇitanūl* ( a book of mathematics), *Mattaḷaviyal* (a work on percussion instruments). Beside these, the department has collected palmleaf manuscripts from all over Tamilnadu and published 5 volumes (10 parts) of Descriptive Catalogue of palmleaf manuscripts. Now in the list of folk song, a ballad based on *Mahāpāratam* entitled *Karṇaṉ pōr* is being published now.

## The Motivation for this edition

The story of *MahāPāratam* continues to certain and instruct people. Though it is widely known to most of them and narrated in different ways by many authors from time to time, custom has not staled its endless variety of treatment because of the enduring appeal of this epic. Therefore its various sub stories and themes, still attract and fascinate the common people, either in the form of *Kūttu* ( folk theatre ) or drama or religious discourse or bow-songs, or even in modern times in the form of the cinema. The writers handling the story have modified it here and there according to their local tradition and culture. A character delineated in a certain way in the original epic of Viyācar, undergoes a change at the hands of Villiputtūrār. At the hands of folk-writers, it may be presented in a still different way. The character of Karṇaṉ as portrayed by Viyācar is ennobled by Villi and appears in yet another way as depicted by the folk-writers and understood by the common people at large differently. The climax in the characterisation of Karṇaṉ occurs when he fights valiantly against his own uterine brothers, by way of discharging his dept of gratitude to his friend Turiyōtaṉaṉ. On the 17th day of the *MahāPāratam* war when Karṇaṉ dons the mantle of the commander-in-chief of the Kaurava army he dies in the noblest way possible

for a warrior, giving away all he has including all the merit earned by him till then as a munificent donor, minutes before life leaves his body. The 17th day battle has been the subject of two different folk songs :

1. The fight of Karṇa Mahārājaṉ

2. The story of Karṇaṉ's battle

The first has already been printed. This particular work *Karṇaṉ* pōr is taken up for editing and publishing as it is different in many places from the earlier ballad *Karṇa Mahārājaṉ caṇṭai* and also from the original *Mahā Pāratam* story.

**The manuscript**

*Karṇaṉ Pōr* has been transcribed from the palmleaf manuscripts preserved in the Institute of Asian Studies as manuscript No.247. It is 38.5.cm long and 2.5.cm wide. The total number of palmleaves is 113 and they are kept in good condition. Wooden strips keep them in place, tied together with a string running through a hole.

**Orthography**

The words in the manuscript are clearly written. As in any other such manuscripts the letter 'e' and 'o' are written without any changes also for the long vowels and there are no dots over the letters. But the songs are clearly written in seperate lines in two halves of the manuscript with space in between. There is a space between the last letter and other letters in each and every line.

aravak koṭiyō nāṉatiri yōtaṉaṉu m

The date of the manuscript and the details of first transcription are given at the end of the manuscript where there is a note which goes as follows :

" I completed this story of *Karṇaṉ Pōr* on the auspicious day, the first of the month of *Māci* in the year *Vicu* on a saturday with the star *Anuṣam* and Simma laknam̱. Given by the hand of Muttirulāṇṭi grandson of Vīrapatiran belonging to Vaṇṇāṉkuṇṭu."The exact english equivalent of this day is 11.2.1882. *Vaṇṇāṉkuṇṭu* is a village near *Tiruppullāṇi* in *Ramnad* district. Authors name is not available. The entire work is written is in faultlessly pure *Kalivenpā* metre.

**Changes made in the editing**

1. Errors in lettering have been corrected and correct letters have been substituted.

2. Slang words have been rendered grammatically and the original words given in the footnotes in each page.

3. Subheadings are provided as a guide to the story in the relevant places.

4. Meaning of rare words and brief explanations given wherever nec essary as footnotes.

5. An English transliteration has been given for non Tamil readers.

6. Folk ballads songs connected with the *Mahāpāratam* epic and bal lads related to war are listed at the end.

7. As the ballad The lament of Poṉṉuruvi has not been published so far it is also given at the end of the work along with the transliteration. This manuscript is kept in the manuscript department of the Institute under No. lA; Length 40 cm. Width 3.5.cm.; total number of palmleaves 15. This is also written in two halves in each leaf.

8. A brief critical introduction dealing with the *Mahāpāratam* and the relevent variations has been given to introduce the work to the reader.

9. The first leaf of the manuscript has a title *Karṇaṉ katai caṇṭai* but at the end of the title *Karṇaṉ katai pōr* is mentioned. As already a work under the title *Karna Mahārājaṉ caṇṭai* has been published, this work has been given in title *Karṇaṉ pōr.*

## Acknowledgements

My heartfelt thanks are due to Dr. G. **John Samuel**, Director of the Institute who gave me permission take up this manuscript for editing and his constant encouragement.

I am grateful to Dr.**P.Subramaniam** the Head of the Department of Manuscripts who is of great help to all editors in the department whenever a manuscript is taken for editing, at every stage of the work like transcription, preparing the critical introduction etc.

Thanks are due to Tiruppullāṉi **P. Govindasamy** who gave the manuscript to the Institute, to **M.K. Raman** who enabled us to get and to **M. Maruthamuthu** who showed that this work is different from *Karṇa Mahārājaṉ Caṇṭai* and deserves a seperate editing and publishing as a work by itself.

My hearty thanks to all the good-hearted colleagues such as Mrs. **G. Selva Lakshmi** who translitrated *Karṇan Pōr* and the *Lament of Poṉṉuruvi*, **Y. Anthonisamy, G. Utiradam**, and **K. Panneerselvam** who helped in the glossary and many other things; **K. Jeyakumar** who helped me with his collection of relevant materials; A.S. Natarajan for his fine wrapper design; **S. Devi, G. Anitha,** all staff members of the computer section of Institute of Asian Studies, who composed in the computer; and to the Students Xerox Offset Printers for the good work.

Above all, I thank prof. **K.G. Seshadri** for translating the entir work beautifully in record time.

**R. Jayalakshmi.**

# Translator's Note

The art of translation is one of the most essential of the modern faculties and resources, in a rapidly shrinking world with hundreds of languages being spoken in different parts of the globe. Thinkers and writers, whatever their categories, express themselves more perfectly and truely in their own tongues than in second or third languages they known in order to extend to others the benefit of their thoughts . It is necessary to translate them into a common *lingua franca* known to the majority of the people of the world. This happens to be English and hence the relevance of English translations of works from other languages. If the original is the *mūlavar* available only to the locality of the mother-tongue speakers, the *utcavar* who goes in procession outside, is the English translation presented for *darsan* by a larger number outside the boundaries of the original language territory. It is in this spirit and a desire to make them available to discerning readers abroad that the Institute of Asian Studies is engaged in bringing out English translations of Tamil works remaining hidden and hither to unknown in the form of palmleaf manuscripts. Most of the folk-lore literature embodying the traditions and social mores of the Tamil people, written in the contemporary dialect and orthography at the time of writing, are still in the form of palmleaf manuscripts hidden in the attics and storerooms of ancient houses . Research scholars bring them out into the light of day and give them the sanctity and respectability of the printed book. But still they are available only to the Tamil knowing reader. To make it available to non-Tamil reader they have to be translated into English, the foremost international language of the world, along with the transliteration. It redounds to the credit of the Institute and its Director Dr. John Samuel, that all such manuscripts are brought out in the form of printed books by competent Tamil editors and English translators.

The ballad is a literary form found in all literatures of the world. In English literature it was prevalent from the 14th century onwards. It was an oral tradition existing even without being written down in the beginning, and thriving because of its popularity among the common people. It was freshly created from memory at each performance and therefore subject to constant variation in text and treatment. The themes were taken from the supernatural and from history and legend. It was mainly about gods and heroes living in popular culture. The ballads also sang of romantic heroes like king Arthur or Robin Hood, larger -than-life figures who actually lived .

The ballad tells a story in a narrative form. It is sung before an audience with frequent repetitions of certain key-words or lines or phrases to reinforce the emotional atmosphere.

While the ballad is the simplest form of writing, the epic is the most complicated. But both are related through one aspect -- they speak about extraordinary characters or heroes. While the former belongs to popular poetry, the latter belongs to the heroic. In the ballad, *'Karṇaṉ pōr '* the theme is taken from the great epic, the *Mahāpāratam* in which Karṇañ is one of the important protagonists.

*Karṇaṉ Pōr* which may be rendered as Karnaṉ the munificent is one such work. The title is only partly apt, for it deals also with the other qualities of Karṇaṉ besides his valour. The work is in the form of a long story poem narrated in *ammāṉai* form by a native singer before a rural or a rustic audience with free use of words of local dialect. In that sense it may be treated as a ballad narrating the last day in the life of the hero and the events of the seventeenth day of the eighteen - day *Mahāpāratam*War between the pāṇṭavas and Kauravas.

The events described in the poem can be listed as follows: Turiyōtaṉaṉ becomes despondent after the death of his great commanders like Pīṣmar and Turōṇar and many of his brothers. He decides to appoint Karṇaṉ, his bosom friend and king of the Aṅkas as the commander in chief of the Kaurava army. The preparation of Karṇaṉ before going to battle are described in detail; his bathing, putting on his dress, donning his armour etc.,; the march of his troops and auxiliary kings under his command; his taking leave of his wife, her dream and request to Karṇaṉ not to proceed because of the evil omens in her dream; Karṇaṉ convincing her and taking leave of her; the confrontation between Karṇaṉ and Aruccuṉaṉ; the entry of his son Vicakarṇaṉ into the battlefield; his heroic battle against the pāṇṭavas who beg him to go back; Vicakarṇaṉ's death at the hands of Aruccuṉaṉ; Karṇaṉ's wrath at his son's death; his battle with Aruccuṉaṉ; the shooting of the serpent-dart; Kriṣṇaṉ's ruse to save Aruccuṉaṉ; from the invincible dart; Karṇaṉ refusing to shoot it again as promised by him to his mother; the removal of the protective armour and the ear-rings of invincible Karṇaṉ by Kriṣṇaṉ disguised as a brahmin and also Intiraṉ; the taking away of his merit earned by him by Kriṣṇaṉ again; Karṇaṉ's death by an arrow of Aruccuṉaṉ; the laments of the Pāṇṭavas; of Kunti, of Turiyōtaṉaṉ, his wife Peruntiru and of Poṉṉuruvi his

queen; her prayers to the Gods for restoring her husband; the revival of Karṇaṉ and his consoling his wife and brothers before returning to Vaikuntam .

A number of variations of the story and characterisation have been exhaustively dealt with in the critical introduction by the editor. However, the overall picture we get of Karṇaṉ, is that of a noble hero who dies to keep his promises to his friend and his mother. Loyalty and gratitude are the dominent virtues of Karṇaṉ, in spite of his occasional acts of wickedness, and unkind words to Pāṇṭavas and Tiraupati. Good and bad coexist in the same character. This dichotomy is found practically in all great heroes in epic literature, for otherwise they will not be human but become superhuman. In a way, this is comparable to Aristotle's theory of tragedy. The tragic hero must be an extraordinary personage, a commander or a king so that the reversal of fortune will become more terrible and pathetic to behold. There is no tragedy in the fall of a sparrow or a beggar. Karṇaṉ like Achilles in the *Illiad*, is the greatest hero is the Kaurava army after Pīṣmar and Turōṇar; but like Achilles in the Trojan War, he also sulks for sixteen days in the war and he swears that he will not fight till Pīṣmar falls, as ha was slighted by the Grandsire. But once he takes over as generalissimo of the army he fights valiantly and dies nobly, a heroic sacrifice on the altar of friendship and fidelity and honour.

The munificence of Karṇaṉ and his bounty are proverbial in Tamilnadu. In fact he prays for a boon from Kriṣṇaṉ before he dies that he must be blessed with a heart that never says ' no ' to solicitors of gifts, whatsoever the number of births he may take in future. In fact he is the supreme embodiment of the Vedic stipulation for a true human being as laid down by the *Pruhatāraṇyaka Upaniṣat*. A bodyless voice gives a message to the Devas, Asuras and men with the same thunder - clap syllable of DA, DA, DA! To the Devas the message is, *Damyata* or self-control; to the Asuras, it is *Dayatvam*, pity or sympathy ; to men the message is *Datta* or giving. The highest good of a human being is therefore, giving. And Karṇaṉ in the *Mahāpāratam* stands out as the noblest character as he gives without caring for the fatal consequences of his gifts; fully aware of his impending death, he gives away his protective armour and ear-rings with which he was born, which makes him vulnerable to attack by Aruccuṉaṉ. He gives away all his *Puṇṇiyam*, the merit earned by giving gifts throughout his life. Greater glory has no man than that he died to keep his word and thereby, save an enemy ! Karṇaṉ, the valient, is also the Karṇaṉ, the munificent.

Though many parallels from English literature spring to mind when reading the ballad an interesting one may be mentioned through it may not be completely on all fours with the original context. This invites comparison with English ballads like *Clerk Saunders* and *The Daemon Lover* where the hero is brought back to life for a short while. In *Karṇaṉ's Pōr* also, he is shown as coming back to his queen Poṉṉuruvi by the intervention of the Gods only to go back to Vaikuntam after consoling his wife and brothers and Turiyōtaṉaṉ, his friend. Yet another parallel, through slightly distant is Wordsworth's poem, *Laodamia*, where the greek hero protesilaus is killed on stepping on the Trojan shore from his ship as ordained by a prophesy; ( somewhat similar to the first battle-sacrifice of Aruccuṉaṉ's son Aravāṉ before the commencement of the *Mahāpāratam* War ). Laodamia refuses to allow her husband to go back after the appointed time granted by Jove; protesilaus advice to his wife to sublimate her passion and to control it, is in a way similar to Karṇaṉ's advice to Poṉṉuruvi in the same context.

Krisṇaṉ's characterisation by the author, lays emphasis on his resourcefulness and stratagems on behalf of his cousins, the Pāṇṭavas, which do not reflect any glory on Krisṇan, the God, Adjectives like *vile, treacherors, cunning* etc., are freely applied by the poet while referring to the episode of the serpent- dart. Turiyōtaṉaṉ is represented as a wicked and vile character through his friendship for Karṇaṉ presents him in a noble light . Aruccuṉaṉ comes off very well with his heroism in battle and his affection for Karṇaṉ's son and his admiration for Karṇaṉ whom he knows as his brother. Queen Peruntiru is represented as a noble matron who has great love for Karṇaṉ, whom she has brought up. Karṇaṉ 's wife Poṉṉuruvi is depicted as a passionate and devoted wife who has learnt to love her husband after repulsing him in the beginning because of his base birth . The passages where she laments over the death of Karṇaṉ are very powerfully presented by the poet , bringing tears to the readers eyes.

I am thankful to Dr. John Samuel, Director of Institute of Asian Studies for giving me this opportunity to translate this powerful ballad culled from the great epic *Mahāpāratam*.

K.G. Seshadri

# ஆய்வுரை

## நாட்டுப்புற இலக்கியம்

வாழ்க்கையை, மக்கள் மனநிலையை, அப்படியே எதிரொலிக்கும் இலக்கியம் நாட்டுப்புற இலக்கியம். இந்நாட்டுப்புற இலக்கியம், 1. நாட்டுப்புறப் பாடல்கள் 2. நாட்டுப்புறக் கதைகள் 3. நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் என்ற மூன்று பெரும் பிரிவுகளை உள்ளடக்கியது. உழவர் பாட்டு, ஏற்றப்பாட்டு, வண்டிக்காரன் பாட்டு, ஓடப்பாட்டு, சுண்ணம் இடிப்போர் பாட்டு, தாலாட்டு, ஒப்பாரி, திருமணப்பாட்டு என மக்கள் தொழிலிலும், வாழ்விலும் தாழ்விலும் பாடப்படும் பாடல்களை நாட்டுப்புறப் பாடல்கள் என்கிறோம். தொன்று தொட்டுக் கர்ண பரம்பரையாகச் சொல்லப்பட்டு வரும் கதைகளை நாட்டுப்புறக் கதைகள் என்கிறோம். வரலாறு, புராணம், இதிகாசம், சமூகம் தொடர்பான பல கதைகளை நீண்ட நெடும் பாடல் வடிவில் பாடுவது கதைப்பாடல் எனப்படும். இக்கதைப் பாடலை ஆங்கிலத்தில் 'Ballad' என்பர்.

## கதை - சொற்பொருள்

கதை என்ற சொல்லுக்குச் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி, பெரியசரிதம், இதிகாச புராணங்கள், பெருங்கதை, பொய்வார்த்தை, விசித்திரக் கதை, கட்டுக் கதை, சொல், சம்பாஷணை ஆகிய பொருள்களைத் தருகிறது.[1] இவையனைத்தும் கதைப்பாடலுக்குப் பொருந்தும்.

## கதையின் தொன்மை.

'கதைகள் எப்பொழுது தோன்றின என்றே சொல்ல முடியாது. ஆதிமனிதன் காட்டுக்குச் சென்று திரும்பியவுடன், தன் அனுபவங்களைச் சொல்லும்போதே கதை தொடங்கிவிட்டது'[2] என்பதிலிருந்தும்

"தொன்மை தானே சொல்லுங் காலை
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே"[3]

என்னும் தொல்காப்பிய நூற்பாவுக்கு உரையெழுதிய இளம்பூரணர், "தொன்மையாவது உரையொடு பொருந்தப்பெற்ற பழமைத்தாகிய பொருள்மேல் வருவன அவை இராமசரிதம், பாண்டவ சரிதம் முதலியவற்றின் மேல் வரும் செய்யுள்"[4] என்றும், பேராசிரியர், "தொன்மை யென்பது

உரைவிராஅய்ப் பழமையவாகிய கதைப்பொருளாகச் செய்யப்படுவது"[5] என்றும் கூறும் உரைகளிலிருந்தும் கதையின் தொன்மை புலப்படும்.

**கதைப்பாடல்**

கதைகளை உள்ளடக்கிய நெடும்பாடல் கதைப்பாடல்[6] என்பதில் மாறுபட்ட கருத்துகள் இல்லை. அது வாய் மொழியாக வந்ததா? எழுதப்பட்டு வந்ததா என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. 'குறிப்பிட்டதொரு பண்பாட்டில், குறிப்பிட்டதொரு சூழலில் **வாய்மொழி**யாக ஒரு பாடகனோ அல்லது குழுவினரோ சேர்ந்து நாட்டார் முன் எடுத்துரைத்து இசையுடன் நிகழ்த்திய ஒரு கதை தழுவிய பாடல் கதைப்பாடல்'[7] என்பது ஒரு கருத்து. "புகழேந்தியை ஒட்டக் கூத்தர் சிறையில் அடைத்தபோது உணவில்லாமல் துன்புற்றவர், சாளரம் வழியே வெளியே பார்த்த போது அருகில் ஒரு நீர்ப் பொய்கையில் பெண்கள் நீர் எடுப்பதைப் பார்த்து, பாரதக் கதைகளை நீண்ட அம்மானைப் பாடல்களாகப் பாடினார். இவற்றை விரும்பிக் கேட்ட பெண்கள் புலவருக்கு வேண்டியதைக் கொடுத்தனர்"[8] என்பது மற்றொரு கருத்து.

இவ்விரு கருத்துக்களும் ஆய்வுக்குரியவை. 'வாய்மொழிக்குப் பின்னரே இலக்கிய இலக்கணங்கள் தோன்றின' என்பது உண்மையாயினும், கதைப் பாடல்களைப் பொறுத்தவரை ஒரு புலவரால் எழுதப்பட்டுக் காலப்போக்கில் அவை வாய்மொழியாக வந்திருக்க வேண்டும் என்பதே பொருந்தும். காரணம் 1. கதைப்பாடல்கள் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப் பின்னரே வளர்ச்சியடைந்துள்ளன. ஆனால் முதற்சங்க காலத்திலேயே நாம் வாய் மொழியிலிருந்து வளர்ச்சியடைந்து பண்பட்ட இலக்கிய இலக்கணங்களுக்கு அறிமுகமாகி விட்டோம். பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கு முன்பே சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரியபுராணம், சீவக சிந்தாமணி போன்ற கதைக் காப்பியங்கள் வழக்கில் வந்து விட்டன. இவ்வளவு கதை இலக்கியங்கள் தோன்றியபின் கதைப்பாடல்கள் வாய்மொழியாகத்தான் வந்திருக்க வேண்டும் என்பதில்லை.

2. கதைப்பாடல்கள் பெரும்பான்மையும் 'கலிவெண்பா' அமைப்பில் இடையிடையே 'விருத்தம்' கலந்து பாடப்பட்டுள்ளன. அவை யாப்பறிந்த புலவராலேயே பாடப்பட்டிருக்க வேண்டும். அல்லி அரசாணி மாலை, பவளக்கொடி மாலை போன்ற பல கதைப்பாடல்கள் புகழேந்தியார் பெயரில் அமைந்துள்ளன. அவற்றைச் செய்தவர் புகழேந்தியார் இல்லை என மறுப்பவரும் உளர். எனினும் பாடல்களின் யாப்பமைதியை நோக்கப் புலவரால் பாடப்பட்டவையே என்பது புலனாகும். இப்பொழுது கூட ஒரு கதையைச்

சொன்னால் அதை யாப்பமைதி கெடாமல் பாடக் கூடியவர்கள் இருக்கிறார்கள் என்பது கள ஆய்வு செய்த நண்பரொருவர் கூற்று. பல கதைப்பாடல்களைப் படித்துப் படித்துப் பாடிப்பாடி கேட்டுக் கேட்டு அந்த ஓசை மனத்தில் பதிந்து பாடியிருக்க வேண்டும் என்பதே உண்மை. "கதைப்பாடல் வாய்மொழியால் வாழ்கிறது. வாய் மொழியாலேயே பரவுகிறது. இயற்றியவர் யாராயினும் பாடியவர் உரிமையாகவே அது மாறி விடுகிறது"[9] என்னும் கூற்றும் இவ்வுண்மைக்கு அரண் சேர்க்கிறது. யாப்பறிவில்லாத சிலர் முன்னோர் பாடிவைத்ததைச் செவிவழியாகக் கேட்டுப் பாடி வரும்போது சில சொற்கள் கூடியோ குறைந்தோ, அடிகள் விடுபட்டோ, சேர்க்கப்பட்டோ யாப்பமைதி சிதைந்த சில கதைப்பாடல்களையும் ஆங்காங்கே காணமுடிகிறது.

**கதைப்பாடலின் வகைகள்**

கதைப்பாடல்களை, நாட்டுப்புற ஆய்வாளர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையாகப் பிரிக்கின்றனர்.மு. அருணாசலம் அவர்கள்,

1. வரலாற்றுக் கதைப்பாடல்கள் அவ்வக் காலத்தில் பாடப் பட்டவை (இராமப்பய்யன் அம்மானை, இரவிக்குட்டிப் பிள்ளை போர், தேசிங்குராசன் கதை போன்றவை),

2. வரலாற்றுக் கதைப்பாடல்கள் அவ்வக் காலத்துக்குப் பின் பாடப்பட்டவை. (கட்டபொம்மன் கதை, கான்சாகிப் கதை போன்றவை),

3. புராணக் கதைப்பாடல்கள் என்று மூவகையாகப் பிரிக்கிறார்.[10]

நா. வானமாமலை அவர்கள் 1. இதிகாசத் துணுக்குகள் 2. சமூகக் கதை 3. வரலாற்றுக் கதை 4. கிராம தேவதைகளின் கதை என நான்கு வகையாகப் பிரிக்கிறார்.[11] இவரே இன்னோரிடத்தில் 1 புராணக்கதை 2. வரலாற்றுக்கதை 3. சமூகக்கதை என மூவகையாகப் பிரிக்கிறார்[12].

செ. அன்னகாமு அவர்கள் வரலாறு, புராணம், காதல், வீரம் என நான்கு வகையாகப் பிரிக்கிறார்.[13] சோம லெ. அவர்கள் சமூகக் கதைப்பாடல், காவியக் கதைப்பாடல், வரலாற்றுக் கதைப்பாடல் என மூவகையாகப் பிரிக்கிறார்.[14]

காதல், வீரம் என்பன சமூகத்திலும் உண்டு; புராணத்திலும் உண்டு; காவியத்திலும் உண்டு. தெய்வப் புனைகதைகள் புராணத்தில் அடங்கும். எனவே இதிகாசக் கதைப்பாடல், புராணக் கதைப்பாடல், வரலாற்றுக் கதைப்பாடல், சமூகக் கதைப்பாடல் எனப் பிரிப்பது பொருந்தும். மகாபாரதம், இராமாயணம் தொடர்பான கதைகள் மட்டுமே இதிகாசத்தில் அடங்கும்.

### கதைப்பாடலின் வடிவங்கள்

கதைப்பாடல்கள்,

1. அம்மானை (இராமப்பய்யன் அம்மானை, வைகுந்த அம்மானை, ஆமையர் அம்மானை),
2. மாலை (பவளக்கொடி மாலை, அல்லியரசாணி மாலை),
3. கதை (தேசிங்குராசன் கதை, சித்திர புத்திர நயினார் கதை),
4 கும்மி (கட்டபொம்மு கும்மிப் பாடல், சின்னமலைக்கும்மி),
5. வாசகப் பா (சாரங்கதரன் வாசகப்பா),
6 குறம் (மின்னொளியாள் குறம், திரௌபதை குறம்),
7 சிந்து (பூலித்தேவன் சிந்து),
8. போர் (கன்னடியன் போர், காசிம் படைப்போர்),

9. சண்டை (கர்ண மகாராஜன் சண்டை, கான்சாகிப் சண்டை) ஆகிய வடிவங்களில் அமைந்துள்ளன. கதை, போர், சண்டை என்ற வடிவில் உள்ளவையும் அம்மானை, மாலை ஆகிய இலக்கிய வடிவங்களிலேயே அமையக் காண்கிறோம்.

### பாரதக் கதைகளின் செல்வாக்கு

புராணக் கதைகள், சமூகக் கதைகள், வரலாற்றுக் கதைகள் பல இருப்பினும், இதிகாசக் கதைகள் மக்களிடையே பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தமையைக் காணுகிறோம். குறிப்பாக இராமாயணத்தை விட பாரதக் கதைகள் செல்வாக்குப் பெற்றிருந்தமையை, பாரதத்தின் ஒவ்வொரு நிகழ்ச்சியும், ஒவ்வொரு கதைப்பாடலாகப் பாடப்பட்டிருப்பதன் மூலம் அறியலாம். நீண்ட நெடுங்காலமாகப் பாரதக் கதை இந்தியா மட்டுமன்றித் தொலைதூர நாடுகளிலும் பரவியிருந்தமையே இதற்குக் காரணம்.

பாரதக் கதை 5000 ஆண்டுகளாக வழக்கில் இருந்து வருகிறது. பாரதப் போர் நடந்த காலம் கி.மு. 3139 என்று கிருஷ்ணமாச்சாரியாரும்[15] கி.மு. 3100-2000 ஆகியவற்றுக்கு இடைப்பட்ட காலம் என்று அறிஞர் சி.வி. வைத்தியாவும்,[16] கி.மு. 1530-1430 ஆகியவற்றுக்கு இடைப்பட்ட காலம் என்று ஆய்வாளர் மக்கன்லால் சென்னும்[17], கி.மு. 1430க்கு முன்னர் என்று வி.எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகளும்[18], 3128 ஆண்டுகளுக்கு முன்னர் என்று ரா. ராகவையங்காரும்[19], 5000 ஆண்டுகட்கு முற்பட்டது என்று அ. விசுவநாதனும்[20] கூறுகின்றனர். இக்கருத்துக்களை ஒப்புநோக்க பாரதப் போர் 5000 ஆண்டுகட்கு முன்னர் நடைபெற்றிருக்க வேண்டும் என்று தெரிகிறது. பாண்டவர்கள் சுவர்க்கம் செல்லுமுன் கலி பிறந்துவிட்டது என்னும் கருத்தும் இதற்கு அரண் செய்கிறது. கலி பிறந்து இன்றைக்கு 5100 ஆண்டுகள் ஆகிவிட்டன. அதற்கு முன்பே பாரதப் போர் நடைபெற்று விட்டது.

பாரதம் புனைகதையன்று. உண்மையில் நடந்த நிகழ்ச்சி காலந்தோறும் சில புனைவுகளை உள்ளடக்கி வளர்ச்சி பெற்றுள்ளது. "கிறித்துவுக்குப் பதின்மூன்று அல்லது பதினான்கு நூற்றாண்டுகளுக்கு முன்னர் குருகுலத்தார்க்கும் அவர்கள் அண்மையில் வாழ்ந்த பாஞ்சாலர்களுக்கும் இடையே நடந்த போரே காப்பியத்தின் கரு. இதுவே வரலாற்றுண்மை" என்கிறார் ரமேஷ் சி. தத்.[21] "யசுர் வேதம், குரு பாஞ்சாலர் இவ்விரு கூட்டத்தாரும் ஏற்கெனவே இணைந்து இருந்ததாகக் குறிப்பிடுகிறது. கதகசம்ஹிதை திருதராட்டிரனையும், விசித்திர வீரியனையும் குறிப்பிடுகிறது. எனவே பாரதக் காப்பியத்தின் வரலாற்று மூலம் கி.மு. பத்தாம் நூற்றாண்டுக்கு முன்பே இருந்திருக்க வேண்டும் என்று மக்டோனல் என்னும் இலக்கிய வரலாற்றறிஞர் குறிப்பிடுகிறார்.[22] இன்றைய வியாச பாரத நூலுள் ஐயம், பாரத சம்ஹிதை, மகாபாரதம் என்னும் மூன்று நூல்கள் சுட்டப்படுகின்றன. அவற்றுள் 'ஐயம்' 8800 சுலோகங்களையும், 'பாரத சம்ஹிதை' 24000 சுலோகங்களையும், 'மகாபாரதம்' 1 லட்சம் சுலோகங்களையும் உடையவை.[23] ஐயம் என்னும் பாரதத்தின் காலம் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு.[24]

பாரத சம்ஹிதை, மகாபாரதம் ஆகிய இரண்டும் கி.மு. 300ல் ஏற்பட்டிருத்தல் வேண்டும்.[25] மூன்றாம் நிலையாகத்தான் இன்றைய பாரதம் ஏற்பட்டது. இதன் காலம் கி.பி. நான்காம் நூற்றாண்டு என்பர்.[26] "பலரால் பல நூற்றாண்டுகளாகச் செய்யப்பட்ட கதம்பம் பாரதம்" என்பர் கா அப்பாதுரை.[27] "உலக இலக்கியங்களில் நீண்ட காப்பியம் மகாபாரதமே. நூறாயிரம் பாடல்களைக் கொண்ட இந்நூல் உலகப் பேரிலக்கியங்களாகிய இலியட், ஓடிசி ஆகியவற்றைச் சேர்த்தால் வரும் அளவின் எட்டு பங்கு" என்று குறிப்பிடுகிறார் ஆய்வாளர் கிருஷ்ண சைதன்யா.[28] மேலும் இது ஐந்தாம் வேதமாகவும் கருதப்படுகின்றது. மகாபாரதம் சமுதாயத்தில் குன்றிய நிலையில் இருந்தவர்க்கும் அறம் போதிக்க வந்தமையாலேயே ஐந்தாம் வேதம் எனப்பட்டது'' என்கிறார் டாக்டர். ராதாகிருஷ்ணன்.[29] இவ்வாறு நீண்டகாலமாக அறியப்பட்டதாலும், அளவாலும் செல்வாக்குப் பெற்றதால் எல்லா மொழிகளிலும் செல்வாக்குப் பெற்றது பாரதம். வியாச பாரதத்துக்குப் பின் பால பாரதம் என்ற பாரதமும் சமஸ்கிருதத்தில் அமைந்துள்ளது. இதனை எழுதியவர் அகத்தியபட்டர். தமிழில் சங்க இலக்கியங்களாகிய சிறுபாணாற்றுப்படை,[30] பெரும்பாணாற்றுப்படை,[31] பதிற்றுப்பத்து,[32] பரிபாடல்,[33] கலித்தொகை,[34] அகநானூறு,[35] புறநானூறு,[36] ஆகியவற்றிலும், காப்பியங்களான சிலப்பதிகாரம்,[37] மணிமேகலை,[38] சீவகசிந்தாமணியிலும்[39], திவ்வியப்பிரபந்தத்திலும்,[40] தேவார,[41] திருவாசகத்திலும்,[42] பதினோராம் திருமுறையிலும்,[43] கலிங்கத்துப்பரணி,[44] முத்தொள்ளாயிரம்,[45] போன்ற இலக்கியங்களிலும் திவாகரம்,[46] பிங்கலம்,[47] போன்ற நிகண்டுகளிலும், நச்சினார்க்கினியர்,[48] பேராசிரியர்,[49] பரிமேலழகர்,[50] உரைகளிலும், யாப்பருங்கல,[51] வீரசோழிய[52] உரையிலும் பாரதக் கதைக் குறிப்புகள் உள்ளன. அருச்சுனன் தீர்த்தயாத்திரையில் பாண்டியன் மகளை மணந்ததாக அறிகிறோம். அல்லி, பவளக்கொடி ஆகியோர் பாண்டிய நாட்டைச் சேர நாட்டைச்

சேர்ந்தவர்களே. பாரதப் போரோடு தமிழ் மன்னருக்கு இருந்த தொடர்பெண்ணமே சங்க இலக்கியத்தில் கூடுதலான பாரதக் கதைக் குறிப்பிற்குக் காரணம்" என்று டாக்டர் அ. விசுவநாதன் குறிப்பிடுகிறார்.[53]

தமிழ்ச் சாசனங்களிலும் பாரதம் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. 'மாபாரதம் பொருது மன்னவர்க்குத் தூது சென்று' என்று வீரபாண்டியன் மெய்க்கீர்த்தியிலும்,[54] 'மாரதர் மலை களத்து அவிய பாரதத்தில் பகடு ஓட்டியும்' என்று இராசசிங்கப் பாண்டியன் மெய்க்கீர்த்தியிலும்[55] பாரதம் பற்றிய குறிப்பு வருகிறது. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் சம்பா என்னும் இடத்தில் வியாசருக்குக் கோயில் கட்டியமையும், ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் காம்போஜ நாட்டில் பாரதம் படிக்க ஏற்பாடு செய்திருந்தமையும் சாசனங்களால் அறியப்படுகின்றன.[56]

இலக்கியங்களிலும் சாசனங்களிலும் இடம்பெற்றது மட்டுமின்றி பாரதக் கதை தனியாகவே பலமுறை பாடப்பட்டுள்ளது. தொல்காப்பிய உரையில் மேற்கோளாகக் காட்டப்படும் பெருந்தேவனார் பாரதம்[57] தவிர கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிலும் ஒரு பெருந்தேவனார் பாரதம் பாடப்பட்டது.[58] இது பாரத வெண்பா எனப்படும். இதற்குப் பின்னர் மாவிந்தம் என்னும் பாரத வெண்பாவும் தோன்றியுள்ளது. அருள்நிலை விசாகன் திரைலோக்கிய மல்லன் வத்ஸராசன் என்பவரால் பாடப்பட்ட பாரதம் ஒன்றைத் திருவாலங்காட்டுச் சாசனம் குறிப்பிடுகிறது.[59] இராசசிங்கப் பாண்டியன் மெய்க்கீர்த்தியில் 'மாபாரதம் தமிழ்ப்படுத்து மதுராபுரிச் சங்கம் வைத்து' என்று கூறப்படுகிறது.[60] இப்பாரதம் பற்றிய செய்தி தெரியவில்லை. இதற்குப் பின்னர் வில்லி பாரதம் தோன்றியது.

வில்லி பாரதத்துக்குப் பின்னர் அவர் பாடாது விடுத்த ஆதி பருவத்துக்கு முந்தின செய்திகள் ஆதிபருவத்தாதி பருவம் என 566 பாடல்களாக அம்பலத் தாடுமையர் என்பவரால் 16-17ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டுள்ளது. 18ஆம் நூற்றாண்டில் அரங்கநாத கவிராயர் என்பவரால் ஒரு பாரதம் பாடப்பட்டது. இதன் பின் நல்லாப்பிள்ளை பாரதமும், பெருமாள் சுவாமிகள் என்பவரால் பாரத சார வெண்பா என்பதும் இயற்றப்பட்டன.

புகழேந்தியின் நளவெண்பாவும், அதிவீரராம பாண்டியரின் நைடதமும், பாரதியாரின் பாஞ்சாலி சபதமும், சோமசுந்தர பாரதியாரின் மாரிவாயிலும், பாரதக் கதைகளை அடியொற்றி எழுந்தவையே.

மேற்கண்டவாறு நீண்ட நெடுங்காலமாக மக்களிடையே இக்கதைகள் பரவி வந்ததால் பாரதக் கதைமாந்தர் பெயர்கள் மக்களுக்கும் வைக்கப்பட்டன. வஞ்சகனைச் சகுனி என்று அழைப்பதும் வழக்கமாகி விட்டது. வீர தீரச்

செயல்களும், 'தருமம் வெல்லும் பாவந் தோற்கும்' என்ற கருத்தும் மக்கள் மனத்தைக் கவர்ந்தமையால் மகாபாரதக் கதைகள் பலவும் கதைப்பாடல்களாக உருவெடுத்ததில் வியப்பொன்றுமில்லை. அல்லி அரசாணி மாலை, பவளக்கொடிமாலை, புலந்தரன் களவு கண்ணி மாலை, அபிமன்யு சுந்தரி அம்மானை, தருமர் அசுவமேத யாகம், கிருஷ்ணசாமி தூது, ஏணியேற்றம், ஆரவல்லி, சூரவல்லி கதை, அபிமன்னன் போர், கர்ணன் போர், திரௌபதி குறம் எனப் பாரத நிகழ்ச்சிகள் மீண்டும் மீண்டும் கதைப்பாடலாகப் பாடப்பட்டுள்ளன இவையனைத்திலும் வீரமும், இயற்கை இகந்த நிகழ்வுகளும், தெய்வத்தன்மையும், காதலும் இழையோடுவதால் சமூகக் கதைகள், வரலாற்றுக் கதைகளை விட ஆர்வம் ஊட்டுவனவாக அமைகின்றன. மேலும் விழாக்காலங்களில் வில்லுப்பாட்டாகவோ, கதையாகவோ சொல்வதற்கு ஏற்றபடி தெய்வத் தொடர்பு உள்ளமையாலும் பாரதக் கதைப்பாடல்கள் செல்வாக்குப் பெற்றன எனலாம்.

உதாரணமாக, மாரியம்மன்கோயில் விழாக்களில் காத்தவராயன் கதையும், இராமர் கோயில் விழா, கம்ப சேர்வை விழாக்களில் இராமாயணக் கதையும், சிவன் கோயில் விழாக்களில் சிறுத்தொண்டர் கதை, மார்க்கண்டன் கதை போன்றவையும் சொல்லப்படுகின்றன, திருமால் கோயில்களில், இரண்யன், ருக்மாங்கதன், குசேலர், கதைகளோடு சீதா கல்யாணம், ருக்மணி கல்யாணம், பாமா பரிணயம் (திருமணம்), பாரிஜாதாபகரணம் போன்ற கதா காலட்சேபங்கள், நாடகங்கள் நடைபெறுவதைக் காண்கிறோம். அவ்வகையில் திரௌபதியம்மன் கோயில் விழாக்களில் பாடப்படுவதற்கு ஏற்றவையாகப் பாரதக் கதைகள் அமைந்துள்ளமையால் தனித்தனிக் கதைப் பாடல்களாகப் பாடப்பட்டிருக்கலாம்

## போர்க்கதைகளின் செல்வாக்கு

மனிதனின் இரத்தத்தில் இயற்கையாகவே போருணர்வு கலந்துள்ளது. மிருகங்களுக்குக் கூட இவ்வுணர்வு அடிப்படையிலே அமைந்துள்ளது. ஆளுமை உணர்வும், எப்படியாவது முன்னேற வேண்டும் என்ற வெறியுமே இதற்குக் காரணங்கள். ஆட்டுக் கிடாய்களை மோதவிட்டுப் பார்ப்பதும், சேவல்களை மோதவிட்டுப் பார்ப்பதும், மனிதனோடு மனிதனை மோதவிட்டுப் பார்ப்பதும், மனிதனுக்கு வேடிக்கை (கேளிக்கை) நிகழ்ச்சிகளாக விளங்குகின்றன. எனவே போர் நிகழ்ச்சிகளைப் படிப்பதிலும், கேட்பதிலும் ஆர்வம் காட்டுகின்றனர். தேவாசுரப் போர் 18 ஆண்டுகளும், இராமாயணப்போர் 18 மாதங்களும், பாரதப்போர் 18 நாட்களும் நடைபெற்றன என்று அறிகிறோம். எனவே இராமாயணத்தில் யுத்த காண்டம் மற்ற காண்டங்களை விடப்பெரிதாக உள்ளது. பாரதத்திலும், ஆதி பருவம், ஆரண்ய பருவம், விராட பருவம், உத்தியோக பருவம் போலன்றி யுத்தத்துக்கு மட்டுமே பீஷ்ம பருவம் துரோண

பருவம், கன்ன பருவம், சல்லிய பருவம் எனப் பல பருவங்கள் எழுதப்பட்டுள்ளன. இதனாலேயே, கதைப் பாடல்களிலும், சக்கூன் படைப்போர், இந்திராயன் படைப்போர், இபுனியந்தன் படைப்போர், காசிம்படைப்போர், இறவு சுல்கூல் படைப்போர், மலுக்கு முலுக்கின் படைப்போர், ஐந்து படைப்போர், உச்சிப் படைப் போர், கன்னடியன் போர், மேல்பர்மா சண்டை எனப் பல போர்க்கதைப் பாடல்களைக் காணுகிறோம்.

### கர்ணன் போர்

'கர்ணன் போர்' என்னும் இந்நூல் 'பாரதக் கதை' 'போர்க்கதை' என்னும் இருநிலையிலும் செல்வாக்கு பெறுவதோடு, கர்ணன் என்னும் பாத்திரத்தின் மீதுள்ள அநுதாபத்தினாலும், பற்றினாலும் கூட செல்வாக்கு பெறும் கதைப் பாடலாக அமைந்துள்ளது. கர்ணன் நீராடுவது கூட ஒரு தனிக் கதைப்பாடலாக விளங்கக் காண்கிறோம்.

### யாப்பும் இலக்கிய வகையும்

'கர்ணன் போர்' என்னும் இக்கதைப் பாடல் கலிவெண்பா யாப்பில் சீர், தளை சிதையாமல் .ஏறத்தாழ 3000 வரிகளுடன் 'அம்மானை' என்னும் இலக்கிய வகையில் அமைந்துள்ளது.*

### அமைப்பு

எல்லாக் கதைப் பாடல்களையும் போலவே இக்கர்ணன் கதையும் கடவுள் வாழ்த்து (விநாயகர் வணக்கம், சரசுவதி வணக்கம்), பாடுபொருள் கூறுதல், நூலின் பயன், கதை, வாழ்த்து என்னும் வைப்பு முறையில் உள்ளது. அவையடக்கம் இல்லை.

### கதைச்சுருக்கம்

பதினேழாம் நாள் போருக்குக் கர்ணன் செல்லுதல், சல்லியன் தேரோட்டுதல், பாண்டவருடன் பொருதல் கர்ணன் மகன் விசகர்ணன்

---

* குறிப்பு-அம்மானை என்பது மகளிர் ஆடும் ஒரு விளையாட்டு மூவர் சேர்ந்து இவ்விளையாட்டை ஆடும்போது முதலாமவள் ஒரு செய்தி சொல்ல, இரண்டாமவள் அதையொட்டி வினா ஒன்றைக் கேட்க, மூன்றாமவள் அதற்கு விடை சொல்வதாக அமையும் பாடல் அம்மானைப் பாடல். சிலப்பதிகாரத்தில் ஒருத்தி வினா கேட்க ஒருத்தி விடை சொல்வது போலவும் அமைந்துள்ளது திருவாசகத்துள் சிவனின் பெருமை கூறிச் சிவனைப் பாடுதுங் காண் அம்மானாய் என்ற அமைப்பில் உள்ளது பெரும்பாலும் இப்பாடல் ஐந்து அல்லது ஆறு அடிகளே இருக்கும் ஆனால் அம்மானை என்னும் இலக்கிய வகை நீண்ட நெடும் பாடலாக ஆங்காங்கே அம்மானை என்ற முத்தாய்ப்புடன் இருக்கும்

பாண்டவரிடம் போர் செய்து மடிதல், கர்ணனும் இறத்தல், கர்ணன் மனைவி பொன்னுருவி, துரியோதனன் மனைவி பெருந்திரு ஆகியோர் புலம்புதல், கர்ணன் மனைவி தீப்புக முடிவு செய்து சப்த கன்னிகைகள், சப்த ரிஷிகள்,சிவன், பார்வதி, பிரம்மன் ஆகிய எல்லாத் தெய்வங்களிடமும் முறையிடுதல், லட்சுமி, சரஸ்வதி, பார்வதி ஆகியோர் வேண்டுதலுக் கிணங்க சிவன் கர்ணன் உடலைத் தைக்க ஊசியும் நூலும் தருதல், கர்ணன் மனைவி ஊசியால் கர்ணன் உடலைத் தைக்க அவன் பிழைத்து எழுந்து தம்பியர்க்கும் மனைவிக்கும் ஆறுதல் கூறி, மனைவியைத் தீப்புக வேண்டாமெனக் கேட்டுக் கொண்டு தையலை அவிழ்க்கச் செய்து வைகுண்டம் சேர்தல், அவன் உடலைப் பாண்டவர் எரியூட்டிப் பின் தங்கள் மனைக்குச் செல்லுதல் என்ற முறையில் கதை அமைந்துள்ளது.

### கர்ணன் பாத்திரப் படைப்பு ஒப்பாய்வு

கர்ணன் பாத்திரத்தின் பெருமை சிறுமைகளை ஒப்பிட்டுக் காணவேண்டுமெனில் மூல நூலான வியாச பாரதம், தமிழ் நூல்களான வில்லி பாரதம், நல்லாப் பிள்ளை பாரதம் ஆகியவை மட்டுமன்றி நாட்டுப்புறக் கதைப் பாடல்களாகிய பொன்னுருவி புலம்பல், பொன்னுருவி மசக்கை, கர்ண மகாராஜன் சண்டை, கர்ணன் போர் ஆகியவற்றோடு கர்ணமோட்சம் என்னும் கூத்தையும் தேரோட்டி மகன் என்னும் வானொலி நாடகத்தையும் கூட ஆய்வு செய்ய வேண்டியுள்ளது.

### வியாசரின் கர்ணன்

கன்னியா யிருந்த குந்தி தன் அரண்மனைக்கு வந்த துர்வாசருக்குப் பணிவிடை செய்ய, மனமகிழ்ந்த துர்வாசர், வேண்டிய போது, விரும்பிய தேவரை அழைத்துக் குழந்தை பெறக் கூடிய ஒரு மந்திரத்தை உபதேசிக்கிறார். குழந்தைத்தனமான, விபரீதமான ஆசையால் குந்தி அதனைப் பரிசோதிக்க எண்ணிக் கதிரவனை நினைத்து அம்மந்திரத்தை உச்சரிக்கக் கதிரவன் தோன்றுகிறான். அச்மடைந்த குந்தி மறுக்கிறாள். கதிரவனின் வற்புறுத்தலுக்குப் பின்பே இணைகிறாள். இவ்வாறு பிறக்கு முன்பே மறுக்கப் பட்டவன் கர்ணன்.[61]

கர்ணனின் இயல்பைக் கதிரவன் மூலமாக விளக்குகிறார் வியாசர். "என்னைப் போன்ற புதல்வன் உனக்கு உருவாக்கப்பட்டிருக்கிறான். என்னுடைய குண்டலங்களையும், கவசங்களையும் அணிந்தவனாக, பாணங்களாலும், அஸ்திரங்களாலும் பிளக்க முடியாதவனாக அவன் இருப்பான். அவனால் கொடுக்க இயலாதது ஒன்றுமிராது. நான் தடுத்தாலும் அவன் கொடுப்பான் மானமுள்ளவனாக இருப்பான்" என்று குந்தியிடம் கதிரவன் கூறி மறைகிறான்.[62] மேலும் கவிக் கூற்றாகவும் "எல்லோரினும் சிறந்தவனும், அழகும் ஒளியும்

உடையவனும், வீரனும், உடன் பிறந்த கவசத்தை யுடையவனும், குண்டலங்களால் விளக்கம் பெற்ற முகத்தை யுடையவனும் ஆகிய கர்ணன் பிறந்தான்"[63] என்று கர்ணனை வருணிக்கிறார். வீரனாகவும், வள்ளலாகவும், மானியாகவும் படைக்கப்பட்டுள்ளான் கர்ணன்.

பிறக்கும் முன்பே மறுக்கப்பட்ட அவன் பிறந்த பின்னரும் பெட்டியில் வைத்து எறியப்பட்டுத் தேரோட்டியால் வளர்க்கப்படுகிறான்.[64] அருச்சுனனுடன் போட்டியிட்டுத் தன் திறன் காட்ட வரும்போதும்,[65] திரௌபதி சுயம்வரத்தின் போதும் 'பெற்றவர் யார் எனத் தெரியாதவன்; சூதபுத்திரன்' என்று இகழப் பட்டுப் பரிதாபத்துக் குரியவனாகிறான்.[66]

சிறுவயதிலேயே துரியோதனன் நண்பனாகி, அவன் பாண்டு குமாரன் பீமனுக்கு நஞ்சை ஊட்டியபோதும், பீமனைக் கொடிகளால் கட்டி மடுவில் எறியும் போதும், அரக்கு மாளிகைக்குத் தீவைக்கத் திட்டம் தீட்டிய போதும் உடனிருந்து, 'கெட்டவன்' என்ற அவப்பெயர் பெறுகிறான்.[67] பரசுராமனிடம் பிரமாஸ்திரம் கற்பதற்காக, அந்தணன் என்று பொய் கூறிப் பொய்யனாகிறான்.[68] இதனாலேயே இவன் கற்ற வித்தைகள் அனைத்தும் பயன்படாமல் போயின.

பாண்டவர் சூதில் தோற்றபின் துச்சாதனனால் அவைக்கு இழுத்து வரப்பட்ட திரௌபதியைப் பார்த்து, "நீ பொருளில்லாத தாசன் மனைவி; தாசி. துரியோதனன் அந்தப்புரம் செல். இல்லையேல் சூதில் தோற்காத புருஷனைத் திருமணம் செய்து கொள். தாசிகள் வேறு புருஷனைத் திருமணம் செய்வது குற்றமாகாது" என்கிறான்.[69] விராட தேசத்தில் ஒளிந்து வாழ்ந்த பாண்டவரைக் கண்டுபிடித்து மீண்டும் காட்டுக்கு அனுப்புவதில் குறியாக இருக்கிறான். 'பரசுராமனாலும், இந்திரனாலும் என்னை வெல்ல முடியாது' என்று தற்புகழ்ச்சியாகப் பலமுறை கூறுகிறான்.[70] விராட தேசத்தில் அருச்சுனனிடம் தோற்று ஓடிவிடுகிறான். தூது வந்த கண்ணனைக் கொல்லவும் விழைகிறான்.[71] அபிமன்யுவை அறமற்ற வழியில் கொல்கிறான்.[72] இவ்வாறு பல இடங்களில் கர்ணன் தீயவனாகக் காட்டப் படுகிறான்.

கர்ணனின் பெருமையாகக் கூறப்படும் நிகழ்வுகள் இரண்டு மட்டுமே. செஞ்சோற்றுக் கடன் தீர்க்க உயிரையே கொடுப்பது ஒன்று. தன் உயிர் போகும் என்று தெரிந்தும் கவச குண்டலங்களை ஈதல் மற்றொன்று.

பீஷ்மரால் அர்த்தரதனாக்கப்பட்டதால் 'பீஷ்மர் இறக்கும் வரை போர்புரியேன்' என்று சபதம் எடுத்த கர்ணன் பீஷ்மர் அம்புப் படுக்கையில் இருக்கும்போது, 'நான் குற்றமற்றவன்; உங்களால் வெறுக்கப்பட்டேன்'

என்கிறான். 'நீ பாண்டவரைக் காரணமின்றி வெறுத்தாய்; துரியோதனனுடன் சேர்ந்து தர்மத்துக்கு எதிராக இருந்தாய் அதனால் உன்னைக் கடிந்தேன்' என்று பீஷ்மர் கூற, "துரியோதனனின் செல்வத்தை நான் அனுபவித்து விட்டேன். அதனால் செல்வம், புத்திரர், உடல், மனைவி, புகழ் அனைத்தையும் அவனுக்காக விட்டு விட்டேன்" என்கிறான்.[73] குந்தி வந்து அழைத்த போதும் "பிறந்த போது நீயும் விட்டு விட்டாய், சூரியனும் விட்டு விட்டான். ஆனால் இப்போது சுயநலத்துக்காக வந்துள்ளாய். துரியோதனன் அரசளிக்க 13 ஆண்டுகள் ஆண்டேன் ஆதரித்தவனுக்குத் தீங்கு செய்தால் இவ்வுலகுமில்லை மேலுலகுமில்லை" என்று மறுத்து விடுகிறான்.[74] இப்படி துரியோதனனுக்காகத் தம்பியரையே எதிர்க்கத் துணிந்தவன் தன் ஈகைத் தன்மையால் அவனுக்கும் வெற்றி தேடித் தர முடியாமல் அழிந்துபடுகிறான். "நாகக் கணையை ஒரு முறைக்குமேல் எய்யமாட்டேன், அருச்சுனன் ஒழிந்த நால்வரையும் கொல்ல மாட்டேன்' என்று குந்திக்கு வரமளித்ததாலும்,[75] கவச குண்டலங்களை ஈந்ததாலும் பாண்டவரை வெற்றி கொள்ளும் வாய்ப்பை இழந்து துரியோதனனுக்கும் வெற்றி தேடித்தர முடியாதவன் ஆகிறான். அவனுக்கு என்று இருந்த இரண்டு சிறந்த குணங்களே ஒன்றுக்கொன்று முரண்பட்டு ஒன்றினால் ஒன்று அழியக் காரணமாகின்றன.

### வில்லிபாரதக் கர்ணன்

வியாசரால் பிறக்கும் போதே வருணிக்கப்பட்ட கர்ணன், வில்லியால் திரௌபதி சுயம்வரத்திலேதான் வருணிக்கப்படுகிறான். பிறக்கும்போது மாசிலாமணி, கவசகுண்டலம் உடையவன் என அழகும் உருவமும் மட்டுமே குறிப்பிடப்படுகின்றன.[76] திரௌபதி சுயம்வரத்தில் தோழியின் வாயிலாக அறுமுகப் படுத்தும் போது தான் "உண்மைக்கும் வலிமைக்கும் உறவுக்கும், புகழுக்கும், உறுதிக்கும், ஒழுக்கத்திற்கும், ஒளிக்கும், விற்றொழிலுக்கும், வண்மைக்கும் இவன் ஒருவனே" என்று அறிமுகப்படுத்துகிறார் வில்லி.[77] கர்ணன் மானமுள்ளவனாக, வீரமுள்ளவனாக, ஈகையுள்ளவனாக புறவாழ்வில் புகழுக்குரியவனாக விளங்குகிறானே யன்றி உயிருக்கு உறுதி பயக்கும் செயல்களில் ஈடுபடவில்லை. தருமன் இராசசூய யாகம் வேட்டமை கண்டு திரும்பிய பின் துரியோதனன் மனத்தைக் கெடுப்பவனே கர்ணன்தான். "தருமன்பெற்ற செல்வம் யார் பெற்றார்? ஏது அளவு அவன் வாழ்க்கை? யார் இனி எதிர் உண்டு?" என்று துரியோதனன் பொறாமைக்குத் தூபமிட்டவனே அவன்தான்.[78] அதனால்தான் வில்லி அவனைச் சுவரின் உள்புறம் பழுதுபட்டிருக்க வெளிப்புறத்தை அழகாகக் காட்டுபவன் என்னும் பொருளில் "புறஞ்சுவர் கோலம் செய்வான்" என்ற தொடரால் குறிப்பிடுகிறார்[79]

இதன் பிறகுதான் சகுனி சூதாட்ட யோசனயைக் கூறுகிறான். "நான் ஓர் அம்பு விட்டால் எதிர்க்க வல்லவர் யார்? வஞ்சனை கொண்டு வெல்லல்

கூடாது" என்று கூறி வீரத்தை வெளிப்படுத்துகிறானே[80] யொழியப் பாண்டவரை அழிக்க வேண்டும் என்ற எண்ணம் சிறுவயது முதலே அவனிடம் குடிகொண்டு நின்றது. துரியோதனன் அங்க நாட்டை அளிக்கும் முன்பே பீமனைக் கொடிகளால் கட்டிக் கங்கையில் எறிந்தவன் கர்ணன்.[81] சகுனி சூதாட அழைக்கத் தருமன் மறுத்த போதும் கர்ணனின் இகழ்ச்சியுரைதான் தருமன் சூதாடக் காரணமாய் அமைந்தது.[82] தன்னால் அடைய முடியாத திரௌபதி அவமானப்பட்டு நிற்கும் போது விகருணன் அறம் பேச அவனைக் கடிந்து கூறி 'இல் எனப்பட்டவள் இல்லாள் அன்றோ! என்று அவளைப் பழிக்கிறான்.[83] இதனால்தான் டாக்டர் வி.எஸ். சுக்தங்கரும் 'கர்ணனின் உள்ளத்தில் உண்மையான பெருந்தன்மை இல்லை; ஏமாற்ற உணர்வால் ஏற்பட்ட துணிவற்ற உள்ளத்தால் அவனால் உண்மை அறத்தைச் செய்ய முடியவில்லை. கர்ணனுக்கு எந்த வகையிலும் தவறு செய்யாதவள் திரௌபதி. அவளை முறையற்று, இரக்கமில்லாது அத்தினபுரச் சூதாட்ட அவைக்களத்தார் இழிவுபடுத்தியபோது கர்ணன் மறைவாக மகிழ்ச்சி யுற்றான்' என்கிறார்.[84] கர்ணனும் திரௌபதியின் வேதனைக்குக் காரணம். இதனை அரசர் பலரும் அறிவர். அதனால்தான் அவர்கள் காமியகவனத்தில் சந்தித்த போது துரியோதனன் கொடுமைக்கு உரமிடுபவர் அவனது தம்பியரும் சகுனியும் மட்டுமல்லர். அவனது உயிர் அனைய நண்பனாகிய கர்ணனும் கூட என்பதால் "சூதன் மைந்தன் சுயோதனன் தோழனை உடற்றுவம்" என்று கூறுகின்றனர்.[85] முதலில் நேர்மையாகப் பாண்டவரைக் கொல்லக் கருதிய கர்ணன் தீயோனாக மாறியதை, பாண்டவரைக் கொல்ல யாரும் அறியாது துரியோதனன் அபிசார வேள்வி செய்வதற்கு உதவியதிலிருந்து அறியலாம். இதனால் வில்லி இவ்விடத்தில் அவனை "கொடுத்து மாநிலத்து இன்னிசை வளர்க்கும் கொடியபாவி" என்கிறார்.[86] விராடதேசத்தில் பாண்டவர் மறைந்துறையும்போது அவர்களை அழிக்க எண்ணி நிரை கவரச் சொன்னவனும் கர்ணனே.[87] நிரைகவரும் போரில் "தேரும் அங்கு ஒரு தேர்; தனித் தேரின்மேல் நின்று வீரச் சிலை வளைத்த வீரனும் பேடி; யாரும் நெஞ்சு அழிந்து அஞ்சுவது ஏன்? "என்று விதுரனையும் வீடுமனையும் இகழ்கிறான். இறுதியில் மூன்று முறை தோற்று அசுவத்தாமனால் இகழப்படுகிறான்.[88]

விதுரன் வில்லை முறித்து வெளியேறிய போது அவன் பெருமைகளை வீடுமர் பேச, தான் துணையிருக்கும் போது துரியோதனனுக்கு வேறு யாருமே தேவையில்லை என்று பேசுகிறான். கண்ணனையும் என் ஒரு அம்பால் அழிப்பேன் என்று இகழ்கிறான்.[89] ஆனால் கண்ணனின் விசுவரூபம் கண்ட பிறகு ஏனையவரோடு சேர்ந்து அவனும் கண்ணனை வணங்குகிறான்.[90]

இதன்பின் வரும் நிகழ்ச்சிகளாலேயே கர்ணன் உயர்ந்தவனாகக் காட்டப்படுகிறான். தன் பிறப்புணர்த்திய கண்ணனைத் துதிக்கிறான். "பாண்டவர் பக்கல் சேருக" என்று சொன்னதும், துரியோதனன் தனக்குச் செய்த

நன்மைகளைக் கூறி இன்று என் பிறப்புணர்ந்தமையால் அன்பின் வயப்பட்டுத் தம்பியரிடம் சென்றால் உலகம் இகழாதா? ஆர் எனத் தெரியாத என்னை அரசன் ஆக்கி, முடிசூட்டி, செல்வம் அளித்தவனுக்குச் செய்நன்றி போற்றாது பாண்டவர் பின் போவேனோ'' என மறுக்கிறான்.[91] இந்திரன் கவச குண்டலங்களை வாங்கவந்தபோது 'இந்திரனை அனுப்பியது கண்ணன் சூழ்ச்சி நீ வழங்காதே' என்று வானினின்று அசரீரி வந்தும் சிந்தையில் ஒரு சிறிதும் கலக்கம் அற்று அவற்றை வழங்குகிறான்.[92] குந்தி தான்தான் தாய் என நிரூபித்து, "நின் தம்பியர் ஐவரும் ஏவல் செய்ய அரசாள வா" என்று அழைக்கும்போது "அன்பில்லாமலோ பழி நாணியோ என்னைப் பேழையில் விட்டாய். ஆனால் அன்று முதல் இன்றளவும் தன் தம்பியர் அடி அணங்க எனக்கு ஏற்றம் அளித்த துரியோதனன் தன் மனைவியின் துகிலை நான் இழுத்து மணி அறுந்தபோது ' எடுக்கவோ? கோர்க்கவோ ' என்றான். அப்படிப்பட்டவனுக்குச் செஞ்சோற்றுக்கடன் கழிப்பதே புகழும், கருமமும், தருமமும் என்கிறான். "போரில் அர்ச்சுனன் தவிர ஏனையோரைக் கொல்ல மாட்டேன். நாகக் கணையை ஒருமுறைக்குமேல் எய்யமாட்டேன்" என்று இரு வரங்களை அளித்து, மாறாக இரண்டு வரம் பெறுகிறான். "நான் பாண்டவர்க்கு அண்ணன் என்பதை அவர்களுக்கு உரையாதீர். உரைத்தால் அவர்கள் நாட்டை எனக்கு அளிப்பர். நான் அதனைத் துரியோதனனுக்கே கொடுப்பேன்'' என்கிறான்." நான் அருச்சுனன் கையம்பால் இறந்ததும் என்னை மடியில் இருத்திப் பாலூட்டி என்னைத் தங்கள் மகன் என்று உலகறியச் செய்ய வேண்டும்" என்கிறான்[93] தான் இன்னான் என்று அறியாமல் பட்ட அவமானத்தினால் அவன் உள்ளம் எவ்வளவு நொந்து போயிருந்தது என்பதையும், தான் குந்தி மகன் என்று அறிந்து எவ்வளவு மகிழ்ந்தான் என்பதையும், அதை உலகுக்கு உணர்த்தித் தன் அவமானத்தைத் துடைக்க எவ்வளவு ஆர்வம் காட்டினான் என்பதையும், தன் தம்பியர் மேல் எவ்வளவு பாசம் வைத்தான் என்பதையும் வில்லி அருமையாக உணர்த்துகிறார்.

வியாச பாரதத்தில் இல்லாத ஒரு படைப்பைக் கர்ணன் இறக்கும் தருவாயில் காட்டுகிறார் வில்லி. நெஞ்சுக்கு நேரே குறிவைக்கச் சொன்ன சல்லியன் சொல்லை மதியாமல் கழுத்துக்குக் குறிவைத்ததாலும்,[94] நாகக் கணையை ஒரு முறைக்கு மேல் எய்யாது சொன்ன சொல்லைக் காத்ததாலும்[95] சல்லியன் தேரோட்டுவதிலிருந்து அகன்று விட,[96] பரசுராமர் சாபத்தால் கற்றவித்தை மறந்து தேர் பூமியில் புதைந்து இறக்கும் தருவாயில் இருந்த கர்ணனிடம் கண்ணன் வேதியன் வடிவில் வந்து கர்ணனைக் காத்து நின்ற புண்ணியத்தைத் தானமாகக்கேட்கக் கர்ணன் கொடுக்கிறான். அப்போது கண்ணன் வேண்டும் வரத்தைக் கேள் என "இன்னும் எத்தனை பிறவி எடுத்தாலும் இல்லையென்னாது கொடுக்கும் மனமும், செல்வமும் வேண்டும் எனக் கேட்கிறான். கண்ணன் தன் முழு வடிவைக் காட்ட, "நெருப்பில் நின்றும், நீரில் நின்றும் தவம் இயற்றினாலும் கிடைக்காத உன் தரிசனம் எனக்குக்

கிடைத்தது. நண்பனுக்காகச் செஞ்சோற்றுக் கடன் கழித்தேன். இந்திரனுக்குக் கவச குண்டலம் அளித்தேன். இறக்கும் நிலையிலும் உணர்வுடன் உன் திருநாமம் உரைக்கப் பெற்றேன். உனக்கே புண்ணியம் தரும் பாக்கியம் பெற்றேன். யான் பெற்ற பேறு யார் பெற்றார்" என மகிழ்ச்சியடைகிறான் கர்ணன். கண்ணன் தான் செய்த சூழ்ச்சிகளைக் கர்ணனிடம் சொல்லி விட்டு மீண்டும் விசயனுக்குச் சாரதியாகி, விசயன்மூலம் கர்ணனைக் கொல்கிறான். குந்தி போர்க்களம் வந்து அழுது புலம்பி அவன் தன் மகன் என அறிவிக்கத் தம்பியர் ஐவரும் வருந்துகின்றனர்.[97] இவ்விடத்தில் கர்ணன் ஒரு வீரனாக, தியாகியாக, கொடையாளியாக, நன்றிக்காக உயிர் விடுபவனாகக் காட்டப்படுகிறான்.

## நல்லாப் பிள்ளை பாரதத்தில் கர்ணன்

வில்லியால் விடப்பட்ட பகுதிகளை வியாச பாரதத்தின் மொழிபெயர்ப்பாகவே நல்லாப்பிள்ளை பாடியுள்ளார். வில்லி பாடல்களையும் அப்படியே எடுத்துக் கொண்டுள்ளார். கர்ணனைக் குஞ்சரத்திளங்கன்று, கோளரி என வில்லியின் சொல்வழியே வருணிக்கும் ஆசிரியர்[98] சிறுவயதிலேயே அவனைத் துரியோதனனுக்கு நண்பனாகவும்,[99] அருச்சுனன் பெருமையால் பொறாமை கொண்டவனாகவும் காட்டுகிறார்.[100] கீசகன் வதைக்குப் பின்னர், பாண்டவரின் கரந்துறை வாழ்வைக் கண்டு பிடித்து, மீண்டும் அவர்களைக் காட்டுக்கு அனுப்ப வேண்டும் என்ற எண்ணம் கொண்டு நிரை கவரும் யோசனையைக் கூறுபவனே கர்ணன்தான்.[101]

## கர்ண மகாராஜன் சண்டையில் கர்ணன்

இக்கதைப்பாடலில் மனைவியால் அவமதிக்கப்பட்டவனாகக் கர்ணன் அறிமுகப்படுத்தப்படுகிறான். போருக்கு விடைபெற அழைத்த போது, "இழிகுலத்தோன் வார்த்தையை, தேர்ப்பாகன் வார்த்தையை எனக்குச் சொல்ல வந்தாய்" என்று சேடியிடம் இகழ்கிறாள் பொன்னுருவி (ப. 7). தன் கணவன் குந்திமகன் என்று அறிந்தபின்பே உணவளித்துத் தாம்பூலம் அளித்து விடைதருகிறாள் (ப. 22). கர்ணன் 'செஞ்சோற்றுக் கடன் கழிக்க வேண்டும்' என்பதற்காகத்தான் துரியோதனன் பக்கல் இருக்கிறானே யன்றித் தான் குந்தி மைந்தன் என்று தெரிந்தவுடன் துரியோதனன் மீது அவனுக்கு அவ்வளவு அன்பில்லை. "நான் இறந்தால் துரியோதனனிடம் செல்லாதே. ஐவரிடம் செல்" என்று பொன்னுருவியிடம் கூறுகிறான். 'உத்தமரைப் பகைத்தேன்' என்று பாண்டவரைப் பெருமையாகக் கூறுகிறான் (ப. 12). கர்ணன் இருந்ததால்தான் பாண்டவரைப் பகைத்ததாகவும், முன்பே குந்தி மகன் என்று தெரிந்திருந்தால் பாதிராச்சியம் கொடுத்துப் பஞ்சவரும் நூற்றுவரும் பாருலகை ஆண்டிருக்கலாம் என்றும் துரியோதனன் கூறுவதன் மூலம் (ப. 51) கர்ணன்

துணை இல்லாவிட்டால் துரியோதனன் இவ்வளவு பகை கொண்டிருக்க மாட்டான் என்று தெளிவாகக் காட்டுகிறார் ஆசிரியர் (ப. 51). கண்ணனிடம் வரம் கேட்கும் போது கூட இல்லையென்று சொல்லாத வரமெல்லாம் கேட்கவில்லை. "மாணிக்க மேடையிலே வைத்து முடிசூட்ட வேண்டும்; மாதா வரும்வரை உயிர் இருக்க வேண்டும்" என்றே கேட்கிறான் (பக். 45, 46). தன் பிறப்பின் உயர்வை வெளிப்படுத்திச் சாக வேண்டும் என்ற உள்ளக்கிடக்கை தான் இங்கு மேலோங்கி நிற்கிறது. சிறு வயது முதலே தான் பெட்டியில் அநாதையாக வந்தவன், தேர்ப்பாகனால் வளர்க்கப்பட்டவன் என்ற தாழ்வு மனப்பான்மை உள்ளவனாகவே கர்ணனின் பாத்திரப் படைப்பு அமைந்துள்ளது.

### பொன்னுருவி மசக்கையில் கர்ணன்

இந்நூலில் தன்னை மதிக்காத மனைவியுடன் எப்படியும் வாழ்ந்துவிட வேண்டும் என்று, கண்ணனின் உதவியால் அவளை ஏழரை நாழிகை மயக்கி அவளோடு சேர்ந்து அவளைத் தாயாக்குபவனாகக் காட்டப் படுகிறான் கர்ணன் (ப. 8). நடந்தது அறிந்த பொன்னுருவி கருவைக் கலைக்கக் கற்பூரம் கேட்க எங்கும் கிடைக்காமல் செய்கிறான் (பக். 17, 18). மசக்கையாக இருக்கும்போது அவள் மாங்காய் கேட்க, தான் அனுப்பியதை அவள் உண்ணாமல் அவமதித்து வேறொரு தோட்டத்தில் மாங்காய் உண்ண மாங்காய் கொடுத்தவன் யார் என்று கேட்டு அவனை அடிக்கும் கொடுமையானவனாகச் சித்தரிக்கப் பட்டுள்ளான். இங்கும் இவன் இழிகுலத்தவன் என்று காயம்பட்டதால் ஏற்பட்ட காழ்ப்புணர்ச்சியே வெளிப்படுகிறது.

### கர்ண மோட்சத்தில் (கூத்து) கர்ணன்

இக்கூத்தில் யார் எது கேட்டாலும் இல்லையென்று சொல்லாமல் வாரி வழங்கக் கூடியவன் என்றும்" தன்னிடம் கேட்பவர் அவர் ஆயுள் உள்ளவரை வேறு எவரிடமும் சென்று கேட்காத அளவு கொடுக்கக் கூடியவன் என்றும், குந்திக்கும், சூரியனுக்கும் பிறந்தவன் என்றும் தெருக்கூத்து முறைப்படி உள்ளே நுழைந்ததும் தன்னைத்தானே அறிமுகப்படுத்திக் கொள்கிறான் கர்ணன் (பக். 21-23). மேலும் "இந்திரன் கவச குண்டலம் கேட்டபோது தந்தை தடுத்தும் இந்த மண்ணுலக வேந்தன் பொன்னுலக வேந்தனுக்கு அளிக்கும் பாக்யம் யாருக்குக் கிட்டும் என்று ரத்தம் சொட்டச்சொட்ட அறுத்துக் கொடுத்தேன். பதிலுக்குச் சந்தி ஆயுதம் கொடுத்தான். என் ரத்தம் பட்டதாலேயே இந்திரனுக்கும் கொடுக்கும் குணம் வந்தது" என்கிறான் (பக். 27,28). மற்ற நூல்களை விட இதில் கர்ணனின் கொடைத்தன்மை மிக உயர்வாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. தன் தாய்க்கு "அருச்சுனனைத்தவிர மற்றவரைக் கொல்ல மாட்டேன்" என்று வரம் கொடுத்ததால் பீமனைக் கொல்லும் வாய்ப்பைக் கை விட்டதாகக் கூறுகிறான் (ப. 29).

*இதிலும் இவன் இழிபிறப்பினன் என்று பழிக்கப்பட்டு அவமானமடைந்தவனாகவே காட்டப்படுகிறான். கலிங்கமன்னன் கீர்த்தி வர்மனின் மகள் பொன்னுருவியின் சுயம்வரத்துக்குச் சென்ற துரியோதனன் அவள் மாலையிடாததால் சினம்கொண்டு மற்ற மன்னர்களுடன் போரிட, அவனுக்காகக் கர்ணன் பொன்னுருவியைத் தூக்கிவந்ததாகவும் ஆனால் துரியோதனன் 'நீயே திருமணம் செய்து கொள்' என்று சொன்னதாகவும் கூறப்படுகிறது. இச்செய்தியைக் கூறும் கர்ணன் இழிகுலத்தவன் தொட்ட பெண்ணை நாம் ஏன் திருமணம் செய்ய வேண்டும் என்ற திருட்டு எண்ணம் துரியோதனனுக்கு வந்து விட்டதாகக் கூறுகிறான் (ப. 134). பொன்னுருவியின் பெற்றோர் அவன் இழிகுலத்தவன் என்பதால் திருமணத்துக்குக் கூட வராமல் அவனுக்குச் சேர வேண்டிய சீர் வரிசைகளைப் பணியாளர்களிடம் கொடுத்தனுப்பினார்கள் என்று மனம் வெதும்பிக் கூறுகிறான் (ப. 135). தேரோட்டி மகனைத் திருமணம் செய்ததால் வெறுப்படைந்த பொன்னுருவி தன்னோடு அவன் பேசக் கூடாதெனவும், தன்னை அவன் தொடக்கூடாது எனவும் இருவரம் பெறுகிறாள் (ப. 135). கொல்லையில் மாஞ்செடி முளைத்து அது மரமாகி ஒரே ஒரு கனி கொடுக்க அதை உண்டால் குலத்துக்குக் கேடு என்று தெரிந்தும் கர்ணன்குலம் எக்கேடு கெட்டால் என்ன? என்று அதை உண்கிறாள் (ப. 135). அதனால் காமவெறி ஏற்பட்டு மயக்கத்தில் அறியாமல் கர்ணனைச் சேர்ந்து குழந்தை பெறுகிறாள் (ப. 137). அக்குழந்தையைத் தன் கணவன் முத்தமிடவும் அனுமதிக்கவில்லை. தன் முந்தானை அவன் மீது பட முந்தானையை அறுத்தெறிகிறாள் (ப. 138). இவ்வளவு வெறுப்புக் காட்டுவதால் கணவன் போருக்குச் செல்ல விடைபெற அழைக்க வெளியேவரவும் மறுக்கிறாள் (ப. 64). "யாருடைய மகன் என்று சொன்னால்தான் வருவேன்" என்கிறாள். அவன் தான் குந்தி மகன் என்று கூறியதும் விருந்து சமைத்துத் தாம்பூலம் தந்து அவனுடன் மகிழ அழைக்கிறாள். பஞ்சவருடன் சேர்ந்து விடலாம் என்கிறாள் (ப. 88).*

*இக்கதையிலும் கர்ணன் வென்று வருவதாகக் கூறவில்லை. "இறந்து விடுவேன்; குந்தி என்னை மடியில் வைத்து நான் அவள் மகன் எனச் சொல்லுவாள்; பாண்டவரே என்னை அடக்கம் செய்வர்; நீ அஸ்தினாபுரம் போகாதே பாண்டவரிடமே இரு என் மகனுக்கு அவர்கள் பட்டம் அளிப்பார்கள்: ஒப்புக் கொள்ளாதே! ராஜ்ய ஆசையால்தான் போரே ஏற்படுகிறது; தருமரையே ஆளச்சொல்! என்றுதான் பொன்னுருவியிடம் கூறுகிறான் (ப. 100).*

*புண்ணியத்தைத் தானமாகப் பெற்ற பின்னர், கண்ணன் என்ன வரம் வேண்டும் என்று கேட்க, "துரியோதனனைச் சார்ந்து இறந்தவர் பிழைக்க வேண்டும், துரியோதனன் வெற்றி பெற வேண்டும் என்று கேட்டால் மாட்டேனென்றா சொல்வாய்? ஆனால் நான் அவ்வாறு கேட்க மாட்டேன்" என்கிறான் (ப. 133).*

*கர்ணனைக் கொல்ல அருச்சுனன் தயங்கும்போது, "தூரியன் நல்லவன்; இந்தக் கர்ணனும், சகுனியும் கூடியே அவனைக் கெடுத்தனர்; எனவே அம்பு விடு" எனக் கண்ணன் கூறுவதாக உள்ளது (ப. 124).*

*எனவே இக்கதையில்·*

*1. கர்ணன் வீரன் என்பதிலும் வள்ளல் என்பதிலும் ஐயமில்லை.*

*2. இழிகுலத்தவன் என்று அவமதிக்கப்பட்டதால் ஏற்பட்ட தாழ்வு மனப்பான்மையே அவனுடைய குரோதம், பொறாமைக்குக் காரணமாக விளங்கியது.*

*3. இழிநிலையிலும் துரியோதனன் ஆதரித்ததால் நன்றிக்காக அவன் பக்கம் இருந்தானே யொழிய தான் குந்திமகன் என்று தெரிந்ததும் தாழ்வு மனப்பான்மை நீங்கியதால் குரோதம் மாறி உண்மையான பாசம் தன் தம்பியர் மேல் ஏற்பட்டு விட்டது என்னும் கருத்துக்கள் முன்வைக்கப்படுகின்றன.*

**தேரோட்டி மகனில் கர்ணன்**

*தேரோட்டி மகன் என்னும் வானொலி நாடகத்தில் அதன் ஆசிரியர் பி.எஸ். இராமையா, கர்ணனின் மனைவியின் குணங்களும், தந்தை பாத்திரமும் கற்பனை எனக் கூறியுள்ளார் (ப ii). அவர் இந்நாட்டுப்புறப்பாடல்களையும் தெருக்கூத்தையும் அறிந்திருந்தால் இன்னும் சிறப்பாக எழுதியிருக்க முடியும். இந்நாடகத்தில் கர்ணனின் பாத்திரம் பரிதாபத்துக்குரிய பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளது. கர்ணனின் மணவாழ்க்கையே இதில் கருவாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. கர்ணனின் மனைவி காஞ்சனமாலா தன் தந்தை சார்த்த கேசி (கற்பனைப் பெயர்) துரியோதனனுக்கு அஞ்சியே தேர்ப்பாகன் மகனான கர்ணனுக்குத் தன்னை மணம் முடித்ததாகவும், தன் விருப்பத்தைக் கேட்கவில்லை என்றும் குற்றஞ் சாட்டுகிறாள் (ப. 10). கர்ணனின் இருபதாம் மணநாளில் கர்ணனும், காஞ்சனமாலாவும் நலங்கிடுவதைக் காண வேண்டும் என்று துரியோதனனும் அவன் மனைவி பானுமதியும் சந்தனப் பேலாவுடன் வருகின்றனர் (ப. 3). சந்தனப் பேலாவைத் தானமாகக் கேட்கும்படி ஓர் அந்தணனைத் தன் தந்தையின் மூலம் ஏற்பாடு செய்து அந்நிகழ்ச்சியைத் தடுக்கிறாள் காஞ்சனமாலா (பக். 5-7). இதற்கு முன்பே பல முறை பலநிகழ்ச்சிகளை அவள் தடுத்ததாகப் பின்னோக்கு உத்தியால் அறிய முடிகிறது. திருமணம் முடிந்து தேரிலிருந்து இறங்கும்போது கர்ணனின் நீட்டிய கையைப் பற்றாமல் தந்தையின் கையைப் பற்றினாள். வசந்த விளையாட்டுக்கு அழைத்த போது பூசை என்று பொய்சொன்னாள் (ப. 7). "இதெல்லாம் ஏன்?" என்று தந்தை கேட்க, "க்ஷத்திரிய குலத்தில் பிறந்த என்னை ராஜசூயமும்*

அஸ்வமேதமும் நடத்த உரிமை பெற்ற க்ஷத்திரியன் கையால் மணமாலை சூடப் பிறந்த என்னை, ஒரு கடைக்குலத் தேரோட்டி மகனுக்கு, நான் கால் வைத்து ஏறும் படியைத் துடைக்க மட்டுமே உரிமை பெற்ற ஒரு கீழ்மகனுக்கு அடிமையாக்கி விட்டீர்கள்" என்கிறாள் (ப. 9). மேலும் கர்ணன், குதிரையின் வியர்வை நாற்றமும், அதன் சேணத்தின் தோல் நாற்றமும் வீசுபவன் என இழித்தும் பழித்தும் பேசுகிறாள் (ப. 10). அவனைத் தீண்டிய வலக்கரத்தால் இருபது ஆண்டுகளாக உணவும் உண்ணவில்லை என்கிறாள் (ப. 11). பெட்டியில் கிடைத்தமை பொய்யான கூற்று என்கிறாள் (ப. 11). முதலிரவில் தன்னைத் தீண்டக் கூடாது என்று சொன்னபோது கர்ணன் விட்டுக் கொடுத்தது கருணையினால் அல்ல; அச்சத்தினால் என்கிறாள் (ப. 15). இவ்வளவையும் பொறுத்துக்கொண்டு மனவேதனையோடு வாழ்கிறான் கர்ணன். இதற்காகவே தன்தாய் யார் என அறியத் துடிக்கிறான். (ப. 19,23,24,31).

எட்டு திக்கும் செய்தி அனுப்புகிறான். குந்தி வந்து ஆடையை உடுத்தித் தான்தான் அவனை ஆடையில் பொதிந்து வைத்து அனுப்பிய தாய் என நிரூபிக்க முயன்றபோது "வேண்டாம் அம்மா வீண் ஆசை; உங்களுக்கு ஏன் துன்பம்"? என்று அவநம்பிக்கை அடைகிறான் (ப. 41). குந்தி நிரூபித்ததும் "இவரைப் பெற்ற குந்தியா என் தாய்" என்று பெருமையில் பூரிப்படைகிறான் (ப. 43). "மகனே! நீ இதுவரை துரியோதனனுடன் இருந்து விட்டாய்! இனியாகிலும் எங்களுடன் வா" என்று கெஞ்சுகிறாள் குந்தி (ப. 48). நினைவு தெரிந்த நாள் முதல் இழிகுலத்தோன் என்று வேதனையில் வெந்த கர்ணனுக்குக் குந்தியின் மகன் என்று தெரிந்தும் வெளிக்காட்ட முடியாத வேதனை. "கர்ணன் சாவுக்குப் பயந்து, அர்ச்சுனன் கணைக்குப் பயந்து பாண்டவருடன் சேர்ந்தான் என்ற அவப்பெயர் எனக்கு வேண்டாம் (ப. 49). பிறந்தது முதல் நான் யாருடைய மகன் என்று தெரியாமல் நெஞ்சில் ஒரு முள் குத்திய வேதனையை அநுபவித்தேன். அந்த முள்ளைக் களைந்து விடுதலை பெற நினைத்தேன். ஆனால் சாகும் வரை நான் அதை அநுபவிக்க வேண்டும் என்பது விதி" என வெதும்புகிறான் (ப. 52).

போருக்குப் புறப்படும் போது விடை கேட்க வருகையில் எண்ணெய்த் தலையோடு வழியனுப்புகிறாள் காஞ்சனமாலா (ப. 62). போர்க்களத்தில் நான் இறந்தபின் நீ இதற்காக வருந்தி என்னிடம் மன்னிப்பு கேட்பாய் என்று கர்ணன் கூற அப்படி ஒரு நாளும் நடக்காது என்கிறாள் காஞ்சனமாலா (ப. 62). ஆனால் இறக்கும் தருவாயில் குந்தி கர்ணனை மடியில் வைத்து அழ, குந்தியின் மகனைக் கணவனாகப் பெற்றும் எவ்வளவு பெரிய கொடுமை செய்து விட்டேன் என்னை மன்னித்து விடுங்கள் என்று கெஞ்சுகிறாள் (ப. 75). கர்ணன் மறுத்த போதிலும், கண்ணனுக்குப் புண்ணியம் ஈந்ததன் பயனாக இறக்குமுன் யார் எது கேட்டாலும் இல்லையென்று சொல்லாத வரத்தைக் கர்ணன் பெற்றதால் அதன் மூலம் மன்னிப்பு கிடைக்கிறது (ப. 76, 77 ).

இக்கதையில் கர்ணனின் கொடையும், நன்றி மறவாப் பண்பும் சுட்டப்படுவதோடு, இழிகுலத்தான் என்பதால் பட்ட அவமானமும், அதனால் ஏற்பட்ட வேதனையும், அதனைத் துடைக்க அவன் துடிக்கும் துடிப்பும், அது தீர்ந்ததும் அவன் அடையும் பெருமையுமே பாத்திரப் படைப்புகளாகப் பரிணமிக்கின்றன.

### கர்ணன் போரில் கர்ணன்

**கர்ணன் போர்** என்னும் இந்நூலில் கதையை அறிமுகப்படுத்தும் போதே ஆசிரியர், அரவக்கொடியோனான **துரியோதனன் செய்த வஞ்சனையால்** கர்ணன் படுந்துயரம் காசினியோர் கேட்பார் காண்? என்றே தொடங்குகிறார் (ப. 18,19). துரியோதனனைத்தான் கெட்டவனாகக் காட்டுகிறார். கர்ணனை அறிமுகப்படுத்தும் போது 'குந்தம்மா பெற்ற குலக்கொழுந்து; ஆதித்தன் புதல்வன் அங்கர்கோன்; குடைக்குச் சலியாத குணக்கடல், என்று அறிமுகப்படுத்துகிறார் (ப. 20-22). துரியோதனன் உண்கலத்தில் உணவெல்லாம் புழுக்களாய் மாற அவற்றை மாற்றியவன் என்னும் செய்தி பல இடங்களில் காணப்படுகிறது. தான் குந்தி மைந்தன் என்று அறிந்ததும் தம்பியர் மேல் போர் தொடுக்க மனம் வராமல் தவிக்கின்றவனாகக் கர்ணன் படைக்கப் பட்டிருக்கிறான். சல்லியன் கடிந்துரைக்கவே போர் புரிகிறான். போர்க்களத்தில் கண்ணனை வணங்கித் தம்பியரைக் காக்கும்படி வேண்டுகிறான் (ப. 180-183). கண்ணன் பாண்டவர் பக்கம் சேரும்படி அழைக்க அஃது அறமல்ல: சிவனார்க்கும் ஏலாது; வானோர்க்கும் ஏலாது என்று அறத்திற்காகவே துரியோதனன் பக்கம் இருக்கிறானே யொழியப் பாசம் குறையவில்லை (ப. 177, 178). தன்மகன் விசகர்ணன் இறந்த பிறகே ஐவரையும் மடிப்பேன் எனப் புறப்படுகிறான். அருச்சுனனிடம் என் மகனைக் கொன்று விட்டீர்களே! என்று கேட்க, (ப. 536) 'அண்ணன்மகன் என்பதால் கொல்ல மனம் வரவில்லை. மகன் 'திரும்பிப்போ' என்ற எங்கள் பேச்சைக் கேட்காததால் வேறுவழியின்றிக் கொன்றோம் அண்ணாவி, என்று பாண்டவர் கூற 'அங்குவந்த துரியோதனன்' உறவு பேசுகிறீர்களா? நன்றி இல்லையா?' எனக்கடிந்து கூற (ப. 542-550), அதன் பின்பே கர்ணனும் விசையனும் போரிடுகின்றனர். இறுதியில் கர்ணனிடம் கண்ணன் புண்ணியம் வாங்கிய பின்னரும் பாண்டவர் கர்ணனைக் கொல்லாமல் எங்களுடன் வந்து விடுங்கள் என்று கூறும் போது கர்ணன் துரியோதனின் மேன்மைகளை எடுத்துரைத்துத் தன்னைக் கொல்லும்படி வேண்டுகிறான் (ப. 695-717). இவ்வாறு கர்ணன் வள்ளலாகவும், செய்ந்நன்றி மறவாதவனாகவும், தம்பியர்மேல் பாசம் உள்ளவனாகவும், சொன்னசொல் தவறாதவனாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளான்.

### பொன்னுருவி புலம்பலில் கர்ணன்

இதிலும் கர்ணன் வாரி வழங்கும் வள்ளலாகவும், துரியோதனனின் கலத்துப் புழு மாற்றுபவனாகவும், வாய்மையாளனாகவும், மனைவியால் முதலில் அவமதிக்கப்பட்டு போருக்குச் சற்று முன்புதான் குந்தி மகன் என்று அறிந்து மதிக்கப்பட்ட பரிதாபத்துக்குரியவனாகவும் காட்டப்படுகிறான்.

### கதை வேறுபாடு

### குந்தி கர்ணனைத் தன் மகன் என அறிதல்

எல்லா பாரதத்திலும் மரபுக் கேற்ப சில இடங்களில் கதை நிகழ்ச்சிகளும் பெயர்களும் மாறுபடுகின்றன. (இவை இங்கே விளக்கமாகத் தரப்படுவதோடு ஆய்வுரையைத் தொடர்ந்து தனியே அட்டவணைப்படுத்தியும் காட்டப்பட்டுள்ளன). வியாச பாரதத்தில் முதன்முதல் அருச்சுனனுடன் போட்டியிடக் கர்ணன் வந்த போதே அவன் தன்மகன் என்பதைக் குந்தி அறிந்து விடுகிறாள். ஆனால் வில்லிபாரதத்தில் கிருஷ்ணன் தூது சென்று வந்த பிறகு சொல்லிய சொல்லால்தான் தெரிந்து கொள்கிறாள். தேரோட்டி மகனில் கர்ணன் தன் தாய் யார் என்பதை மனைவிக்கு உணர்த்த வேண்டி, தன்னைப் பொதிந்து வைத்த ஆடையை உடுத்துத் தன்தாய் யார் என நிரூபிக்க வேண்டும் என்ற செய்தியை நாலாபுறமும் அறிவிக்க அதைக் கண்ணன் வந்து கூற குந்தி தான்தான் அவன்தாய் என்று கூறியபின்தான் கர்ணன் தெரிந்து கொள்கிறான் (ப. 35,36).

### கர்ணன் மனைவி பெயர்

**வியாச பாரதத்திலோ வில்லி பாரதத்திலோ** கர்ணனின் மனைவி பற்றிய செய்திகள் இல்லை. **கர்ண மோட்சம்** கூத்தில் சுபாங்கனி, பொன்னுருவி, பொன்மாலை என்று மூன்று பெயர்கள் கர்ணனின் மனைவிக்கு உண்டு என்று கூறப்படுகிறது (ப. 134). **'தேரோட்டி மகன்'** ஆசிரியர் காஞ்சனமாலா என்று குறிப்பிடுகிறார். பொன்மாலை என்பதும் காஞ்சனமாலா என்பதும் ஒரே பொருள் தரும் தொடர்கள். அபிதான சிந்தாமணியில் இப்பெயர் உள்ளது (ப. 400). நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் அவள் பெயர் பொன்னுருவி என்றே குறிப்பிடப்படுகிறது.

### கர்ணன் புதல்வர்கள்

**வியாச பாரதத்திலும், வில்லி பாரதத்திலும்** கர்ணனுக்கு நான்கு புதல்வர்கள் குறிப்பிடப் படுகின்றனர். அவர்களுடைய பெயர்கள், சித்ரசேனன்,

சூரிய வன்மன், சித்ர கீர்த்தி, விருஷசேனன். முதல் மூவரும் நகுலனால் கொல்லப் படுகிறார்கள். விருஷ சேனன் அருச்சுனனால் கொல்லப்படுகிறான். விருஷ சேனன் வில்லியால் விடசேனன் என்று குறிப்பிடப்படுகிறான். முதல் மூவரும் கர்ணனுக்குப் பின்பும், விருஷ சேனன் கர்ணனுக்கு முன்பும் இறக்கின்றனர். ஏனைய நூல்களில் ஒரு மகனே சொல்லப்படுகிறான். அவனுடைய பெயர் **கர்ணன் போர், பொன்னுருவி புலம்பல்** ஆகியவற்றில் விசகர்ணன் என்றும், **கர்ண மோட்சத்தில்** விடசேனன் என்றும் குறிப்பிடப்படுகிறது. **கர்ணமகாராஜன் சண்டையில்,** சூரியபற்பன், சுந்தரபற்பன் என இருபுதல்வர்கள் இறக்கின்றனர். ஒரு புதல்வன் தருமனிடம் ஒப்படைக்கப்படுகிறான். தேரோட்டி மகனில் காஞ்சனமாலைக்குக் குழந்தையில்லை. மற்ற மனைவியர்க்குக் குழந்தைகள் உள்ளனர் (ப. 18).

### துரியோதனன் மனைவிக்கும் கர்ணனுக்கும் உள்ள உறவு

தேரோட்டி மகனில் துரியோதனின் மனைவி பானுமதி ( இப்பெயர் அபிதான சிந்தாமணியில் உள்ளது) (ப. 872). கர்ணனைத் தன் அண்ணனாக உறவு கொண்டாடுகிறாள். நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் பெருந்திரு என்ற பெயருடன் கர்ணனைத் தன் மகனாக நினைப்பவளாகக் காட்டப்படுகிறாள்.

### உறவினர் பெயர் வேறுபாடுகள்

**வியாச பாரதம், வில்லி பாரதம்** ஆகியவற்றில் துரியோதனன் மனைவி பெயர் இல்லை. **கர்ணமோட்சத்தில்,** பானுமதி, பெருந்திருவாள் என்ற இரு பெயர்களும் காணப்படுகின்றன (ப. 92). **வியாச, வில்லி** பாரதங்களில் துரியோதனன் தங்கை பெயர் துச்சலை, கணவன் பெயர் ஜெயத்ரதன். **கர்ண மோட்சத்தில்** ஜெயத்ரதன் பெயர் மட்டும் சயிந்தவன் என மாறுபடுகின்றது (ப. 116). நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் துரியோதனன் மனைவி பெருந்திரு என்றும், தங்கை சங்குபதி என்றும், சங்குபதி கணவன் தேத்தரசன் என்றும் அழைக்கப்படுகின்றனர். **பொன்னுருவி மசக்கையிலும் கர்ணமகாராஜன்** சண்டையிலும் தங்கை பெயர் துர்ச்சடை (ப. 62).

### கர்ணன் போருக்கு விடைபெறுதல்

கர்ணன் போருக்குப் போகுமுன் மனைவியிடம் விடைபெற்ற செய்தியை வில்லியோ வியாசரோ குறிப்பிடவில்லை. **கர்ண மோட்சம், கர்ண மகாராஜன் சண்டை** ஆகியவற்றில் அவன் யாரெனத் தெரியாததால் முதலி ல் மறுத்துப் பின் குந்திமகன் என்று தெரிந்ததும் உணவு சமைத்துக் கூடி மகிழ்ந்து, தாம்பூலம் கொடுத்து விடை தருவதாக உள்ளது. **கர்ணன் போரில்** தான் கண்ட கனவைக் கூறிப் போக வேண்டாமெனத் தடுத்துப் பின் திருநீறு

தருவதாக உள்ளது. **தேரோட்டி மகனில்** எண்ணெய்த்தலையோடு வெறுப்புடன் விடை கொடுக்கிறாள்.

**பாண்டவர் கர்ணனை அறிதல்**

**வியாச பாரதம், வில்லி பாரதம்,** ஆகியவற்றில் கர்ணன் இறந்த பின்பே பாண்டவர் அவனைத் தன் அண்ணன் என அறிகின்றனர். **கர்ண மகாராஜன் சண்டையிலும் தேரோட்டி மகனிலும்** கர்ணன் உயிர் பிரியு முன்பே அறிந்து, வந்து பார்க்கின்றனர் (ப. 47, ப. 67). **கர்ணன் போரில்.** போருக்கு முன்பே அண்ணன் என அறிந்து போர் செய்யத் தயங்குகின்றனர். கர்ணன் மகன் விசகர்ணன் போர் செய்ய வரும்போது "அண்ணன் மகனைக் கொல்ல மாட்டோம் திரும்பிப் போ" என்று சொல்லி ஐவரும் கெஞ்சுகின்றனர். அவன் கேட்காததாலும், கண்ணன் கடிந்துரையாலும் தான் அருச்சுனன் விசகர்ணனைக் கொல்லுகிறான் இவ்வாறே கர்ணனும் தம்பியரிடம் போர் செய்யத் தயங்கித் துரியோதனனின் கடிந்துரைக்குப் பின் போர் செய்கிறான்.

**கவசம், குண்டலம், புண்ணியம் ஆகியவற்றைத் தானம் வாங்குதல்**

கர்ணனைப் புண்ணியம் சூழ்ந்து காப்பதான செய்தி வியாச பாரதத்தில் இல்லை. வில்லிபாரதம், கர்ண மோட்சம், கர்ணன் போர், தேரோட்டி மகன் ஆகியவற்றில் உள்ளது. வில்லிபாரதம், கர்ண மோட்சம், தேரோட்டி மகன் ஆகியவற்றில் கவச குண்டலம் வாங்குபவன் இந்திரன், புண்ணியம் வாங்குபவன் கண்ணன் என்ற செய்தி உள்ளது ஆனால் கர்ணன் போரில் கவசம், குண்டலம், புண்ணியம் அனைத்தையும் கண்ணனே வாங்குகிறான். புண்ணியம் வாங்கிய பின்பே கவச குண்டலங்களை வாங்குகிறான் என்ற செய்தி புதியதாக உள்ளது (ப. 747-784). இந்திரன் வச்சிரமணி மாலையைத் தானமாக வாங்கினான் என்று குறிப்பிடப்படுகிறது இதைதவிர பொன்னுருவியின் கழுத்துத்தாலியை வாங்கியதாகக் கர்ணன் போரிலும், பொன்னுருவியின் புலம்பலிலும் காட்டப்படுகிறது.

**கர்ணன் கேட்ட வரங்கள்**

கர்ணன் கண்ணனிடம் கேட்ட இரண்டு வரங்கள் ஒவ்வொன்றிலும் வேறுபடுகின்றன. **வில்லிபாரதத்தில்** எத்தனை பிறவி எடுத்தாலும், அத்தனை பிறவியிலும் இல்லையென்று சொல்லாத மனமும், செல்வமும், முக்தியும் பெறுகிறான். **கர்ணன் போரில்** வில்லி பாரதப் பாடல்களே எடுத்தாளப் பட்டுள்ளன. **கர்ண மோட்சத்தில்** "குந்தி வந்து என் மகன் என்று ஊரறியச் சொல்லும்வரை உயிரோடிருக்க வேண்டும். 32 அறங்களில் அன்னதானம்

மட்டும் செய்யவில்லை. அதை அடுத்த பிறவியில் செய்ய வேண்டும்" என்று கேட்கிறான். இதனால் அடுத்த பிறவியில் கர்ணனே சிறுத்தொண்டராகப் பிறந்ததாகக் கூறப்படுகிறது (ப. 133). **கர்ண மகாராஜன் சண்டையில்** மாணிக்க மேடையில் வைத்து முடிசூட்டி ஐவரும் கைகட்டி நின்று மாதா வரும் வரை உயிர் இருக்க வேண்டும் எனக் கேட்கிறான் (ப. 37). **தேரோட்டி மகனில்** இறக்குமுன் யார் வந்து எதுகேட்டாலும் இல்லையென்று சொல்லாத வரம் கேட்கிறான் (ப. 67).

### நாகக்கணை பற்றிய செய்தி

நாகாஸ்திரம் வியாச பாரதத்தில் அருச்சுனன் ஆறு கணையால் துளைக்கப்படுகிறது (ப. 434, 435). வில்லியில் இரு கூறாக அறுபட்டுக் கர்ணனிடம் வந்து 'மீண்டும் என்னை விடு' என்று கெஞ்சி விடாமையால் நொந்து உயிர் விடுகிறது. **கர்ண மோட்சத்தில்** தேர்த்தட்டில் உயிர் விடுகிறது (ப. 130). **கர்ணன் போரில்** திருப்பாற்கடலில் தஞ்சம் புகுகிறது. **தேரோட்டி மகனில்** அருச்சுனன் முடியைப் பறித்துக்கொண்டு போய்விடுகிறது.

### கர்ணன் இறத்தல்

வியாச பாரதத்தில் இறக்கும் தருவாயில் கர்ணன் தேர் புதைய அதைத் தூக்கும் முயற்சியில் ஈடுபட்ட கர்ணன் அருச்சுனனைச் சற்று நேரம் பொறுத்திருக்கும்படி அறம் பேசுகிறான். "வீமனைக் கட்டியபோதும், அரக்கு மாளிகைக்குத் தீயிட்டபோதும், பாஞ்சாலியைத் துகிலுரிந்த போதும், அபிமனைக் கொன்ற போதும் அவ்வறம் எங்கே போயிற்று?" என்று கேட்ட கண்ணன் அருச்சுனனை அம்பு விடும்படி ஏவ, கர்ணனும் பதிலுக்கு அம்பு விடுகிறான். அர்ச்சுனன் மயங்கிய போது தேரைத் தூக்க முயன்றான் முடியவில்லை. மூர்ச்சை தெளிந்த அருச்சுனன் அச்சலிகம் என்னும் அம்பை விட கர்ணன் தலை துண்டிக்கப்பட்டு இறக்கிறான்.

**வில்லி பாரதத்தில்** மறுமுறை நாகக்கணை விடமாட்டேன் என்று கர்ணன் கூறியதால் சல்லியன் சினந்து தேரோட்டும் பணியை விடுத்துத் தேரிலி ருந்து இறங்கிப் போய்விட வேறு தேரில் ஏறிக் கர்ணன் போர் செய்கிறான். அருச்சுனன் அம்பு பட்டுக் கர்ணன் வலிமை குறைந்ததும் கண்ணன் வேதியன் உருவம் எடுத்துப் புண்ணியத்தைப் பெற்று வரம் அளித்து மீண்டும் வந்து அருச்சுனனுக்குச் சாரதியாக, அருச்சுனன் அஞ்சரீகம் என்னும் அம்பைக் கர்ணனின் மார்பில் எய்ய அம்பு துளைத்த மார்புடன் குற்றுயிராய்க் கிடக்கும் கர்ணனைக் குந்தி மடியில் ஏந்தி அழப் பாண்டவர் புலம்புகின்றனர். அதன்பின் இறக்கிறான்.

தேரோட்டி மகனில் கர்ணன் குந்தியின் மகன் என்று அறிந்த காஞ்சனமாலா அவன் இறக்கும் தருவாயில் தன்னை மன்னிக்கும்படி வேண்ட தாய்மீது ஆணையிட்டு அவளை விலக்கியிருந்த கர்ணன் தாய் ஆணையை விடுவித்ததாலும், கண்ணனிடம், இறக்குமுன் யார் எது கேட்டாலும் இல்லையென்னாத வரம் பெற்றதாலும் மனைவியை மன்னித்து அதன்பின் இறக்கிறான் (ப 69).

**கர்ணமகாராசன் சண்டையில்** இறக்கும் தருவாயில் அன்னை மடியில் இருந்து கொண்டு, மைந்தனைத் தருமரிடம் ஒப்படைத்து, தருமரால் பல்லக்கில் அரண்மனைக்கு எடுத்துச் செல்லப்பட்டு, முடிசூட்டப்பட்டு இறக்கிறான்.

**கர்ண மோட்சத்தில்** நிராயுத பாணியான கர்ணனுக்கு அருச்சுனன் ஆயுதம் தருவதாகக் கூற, கர்ணன் மறுத்து 'என் மேல் அம்பு விடு' என்று சொல்கிறான். அருச்சுனன் பாசுபதம் விட்டதும் மார்பில் அம்பு தைத்த நிலையில் கர்ணனுக்குப் புண்ணியம் ஈந்து மோட்சம் பெறுகிறான் (ப. 131).

**கர்ணன் போரில்** அருச்சுனன் பாசுபதம் விடுத்தும், கர்ணன் செய்த புண்ணியம் சூழ்ந்ததனால் கர்ணனை அம்பு துளைக்கவில்லை. எனவே கண்ணன் சென்று புண்ணியம் பெற்று வருகிறான். ஆனால் 'கவச குண்டலம் வாங்கிவந்தால்தான் கொல்ல முடியும்' என்று அருச்சுனன் சொல்ல மீண்டும் சென்று கவச குண்டலம் பெற அதன் பிறகே கர்ணன் இறக்கிறான். முதலில் பாண்டவர் புலம்ப, பின் துரியோதனன், அவன் மனைவி, தங்கை ஆகியோர் புலம்ப, பின் குந்தி வந்து புலம்ப இறுதியில்தான் பொன்னுருவி வந்து புலம்புகிறாள்.

**கர்ணன் உயிர் பெறுதல்**

பொன்னுருவி புலம்பலில் கர்ணன் இறந்ததும், கண்ணனிடம் பொன்னுருவி முறையிட, கண்ணன் எமனை அழைத்து, கர்ணனின் உயிரைத் திருப்பித் தருமாறு கூறுகிறான். எமனும் ஒப்புக் கொள்கிறான். ஆனால் பொன்னுருவி 'அது முறையாகாது' என மறுத்து விடுகிறாள்.

**கர்ணன் போரில்** பொன்னுருவி எல்லாத் தேவரிடமும் முறையிடுகிறாள். அவர்கள் சிவனிடம் முறையிடுகின்றனர். சிவன் கர்ணன் உடலைத் தைக்கக்கூடிய ஊசி நூல் தர, கர்ணன் உடலைப் பொன்னுருவி தைத்ததும் கர்ணன் உயிர் பெற்று எல்லோருக்கும் ஆறுதல் கூறி 'நான் வெள்ளி தோறும் வருவேன் நீ தீப்புக வேண்டாம்" என்று பொன்னுருவி தீப்பாய்வதைத் தடுத்துத் தையலை அவிழ்க்கச் சொல்லி வைகுண்டம் செல்கிறான்.

**தீப்பாய்தல்:**

**கர்ணமகாராஜன் சண்டையில்** கணவனை இழந்த எல்லாப் பெண்களும் போரின் இறுதியில் தீப்பாய்கின்றனர். பொன்னுருவி மட்டும் மகனுக்காக வாழ்கிறாள். இச்செய்தி ஏனையவற்றில் இல்லை.

**ஈமக்கடன்:**

**கர்ணன் போரில்** கர்ணன் இறந்ததும் அவனுக்கு ஈமக்கடன் செய்து எல்லோரும் அவரவர் இல்லம் சேர்கின்றனர். வியாச பாரதத்திலும், வில்லி பாரதத்திலும் எல்லோரும் இறந்தபின்பு இறுதியில் ஈமக்கடன் செய்து அஸ்தினாபுரம் செல்கின்றனர்.

**கர்ணன் போர், கர்ண மோட்சம் கனவு வேறுபாடு**

**கர்ணமோட்சத்தில்** கர்ணன் விடைபெறுவதற்கு வரும் முன்னரே பொன்னுருவி கனவு காணுகிறாள். தனக்குக் குங்குமம் இடுவதாகவும், மஞ்சள் பூசுவதாகவும், பூச்சூடுவதாகவும், சுற்றி உட்கார்ந்து கும்மி அடிப்பதாகவும் கன்னப் பல்லக்கில் (பாடை) ஏற்றி ஊர்வலம் விடுவதாகவும், சேலை, மாலை, பூ, சந்தனம் ஆகியவற்றை வைப்பது போலவும், கூரையில்லா வீட்டில் தீபம் வைக்காமல், எண்ணெயில்லாத வெறுந்தலையை வாருவது போலவும், தண்டு வாழை மரம் பூமியில் நட்டு, சூறை கொள்ளையிட்டு, ஒண்டிப் பந்தல் கொண்டு நலங்கிடுவது போலவும் வாழை, முருங்கை மண்ணோடு சாயவும், மைந்தனும் தொட்டிலில் மாளாத் துயிலில் முழ்கவும், சுருள் ஓலை வரவும், துட்டப் பன்னி(றி) முட்டவும் கனவு காண்கிறாள்(ப. 53-58 ).

**கர்ணன் போரில்** கர்ணன் விடைபெறுவதற்கு முன்பு கொடி, குதிரை, யானை ஆகியவை ஆகாயம் செல்லவும், தேர் மணிகள் பூமியில் சிந்திவிழ அவற்றை மற்றவர் பொறுக்கவும், பட்டத்து யானை பட்டு விழவும், வில் இரண்டாய் முறியவும், நாகம் நடுங்கி விழவும் கனவு காண்கிறாள். கர்ணன் இறக்கு முன்பு பொன்முடி ஆபரணம், அரைஞாண் இவற்றைக் கழற்றிப் பெட்டியில் வைக்கவும், மயிர் குலையவும், தாலி அவிழ்ந்து விழவும், பொன்னின் முடி பூமியில் விழவும் கனவு காண்கிறாள்.

**கர்ணன் போர் - கர்ண மகாராஜன் சண்டை - அமைப்பு வேறுபாடு:**

**கர்ணன் போரில்** பதினேழாம் நாள் போருக்கு யாரை அனுப்புவது என்று துரியோதனன் ஆலோசனை செய்து கர்ணனை அனுப்புதல், கர்ணன் பொன்னுருவியிடமும், பெருந்திருவிடமும் திருநீறு வாங்கிச் சென்று

போர்புரிதல், மைந்தன் விசகர்ணன் இறத்தல், போர் நிகழ்ச்சிகள், இறுதியில் கர்ணன் இறத்தல், பொன்னுருவி புலம்பல், கர்ணன் உயிர் பெற்று வந்து துரியோதனனிடம், 'நீ நாளை வீமன் கையால் இறப்பாய்' என்று கூறித் தருமரிடம் பொன்னுருவியையும், பெருந்திருவையும் ஒப்படைத்து வைகுண்டம் செல்லுதல், அவன் உடலுக்குத் தருமர் எரியூட்டி அவரவர் இல்லம் செல்லுதல் ஆகியவற்றுடன் கதை முடிகிறது. ஆனால் **கர்ண மகாராஜன் சண்டையில்** கர்ணன் போருக்குப் புறப்பட்டுத் தாதியரை அனுப்பிப் பொன்னுருவியை அழைத்துவரச் சொல்லுதல், அவள் மறுத்தல், அவன், தான் குந்தி மைந்தன் என்று சொன்னதும் அவனுக்கு உணவூட்டி விடை கொடுத்தல், கர்ணன் போர் செய்து வீழ்ந்ததும் குந்தி ஐவரையும் அழைத்துவரச் செய்தல், கர்ணனுக்குப் பட்டம் சூட்டுதல், கர்ணன் இறந்ததும் துரியோதனன் புலம்புதல் இவற்றுக்குப் பின் வீமன் சல்லியனோடு பொருதல், விசகர்ணன் மேல் அம்பு தொடுத்தல், வீமனும் துரியோதனனும் பொருதல், துரியோதனன் இறத்தல், அச்சுவத்தாமனும் அருச்சுனனும் பொருதல், பெண்கள் அமர்க்களம் வருதல், பெருந்திரு புலம்புதல் கிருஷ்ணன் எல்லாவிபரமும் திருதராட்டிரனுக்கு உரைத்தல், காந்தாரி புலம்பல், பஞ்சவர் காந்தாரியைத் தேற்றுதல், பெண்கள் தீப்பாய்தல், பொன்னுருவி மைந்தன் பொருட்டு உயிர் வாழ்தல் கிருஷ்ணர் தருமருக்குப் பட்டம் சூட்டுதல் ஆகிய செய்திகளும் இடம் பெறுகின்றன.

**கர்ணன் போர் – பொன்னுருவி புலம்பல் – புலம்பல் வேறுபாடு**

**கர்ணன் போரில்** பொன்னுருவி புலம்பும் போது கர்ணன் அழகைக் கூறிப் புலம்புகிறாள். "நான் அநாதையென்று இகழ்ந்தேனே! ஆபாத கேடன் அநியாயன் சோற்றை உண்டு நன்றி மறப்பதில்லை என்றீரே! உடன்பிறப்பென்று தெரிந்தும் விசயன் கொன்றானே! போகவேண்டாம் என்ற என்னுடைய பேச்சையும், சல்லியன் சொல்லையும் கேட்கவில்லையே!" எனப் புலம்புகிறாள். சிறு வயதில் கர்ணன் தன் கரம் பிடித்த திருமணச் செய்தியைக் கூறுகிறாள். நானும் இறப்பேன் என்று அணிமணிகள் பூணுகிறாள். பஞ்சவரிடம் தான் உடன் கட்டை ஏற உதவும்படி வேண்டுகிறாள். "என் கணவனுக்கு நான் வெற்றிலை பாக்கு தரவில்லை; பள்ளியறை சென்றதில்லை; கர்ணனுடன் முகம்பார்த்துப் பேசவில்லை; உணவு படைக்கவில்லை; விளையாடவில்லை" என்றெல்லாம் பரிதவிக்கிறாள். "நீங்கள் செய்த வஞ்சனைகளாலேதான் என்கணவர் இறந்தார் இல்லாவிட்டால் என்கணவரை வெல்ல இயலுமா?" என்கிறாள். முனிவர், தேவர், சூரியன், சப்தமாதர், சிவன், திருமால், பிரமன், பார்வதி, இலக்குமி, சரஸ்வதி எல்லோரிடமும் முறையிடுகிறாள்.

**பொன்னுருவி புலம்பலில்** 'என் சொல்லைக் கேட்காமல் போனீரே! பொய்த்தலையைக் கட்டிச் சூது செய்தானே மாயவன்! வாசமுள்ள மஞ்சம் மணவறையிலிருக்க மணலில் தூங்குகிறீரே! வீடுமர், துரோணர், தேத்தரசர்

துரியோதனன் தம்பிமார் இறந்ததும் துரியோதனன் வேண்ட போர்க்களம் சென்றீரே! பாண்டவரை வெல்ல இயலாது என்று கூறினேன். நாகக் கணையை நம்பிவந்து மோசம் போனீரே! நாகபாசத்தை ஒருமுறைக்கு மேல் விடமாட்டேன் என்று வரம் கொடுத்து மாண்டீரே! மைந்தன் இறந்தானென மாண்டீரோ?' என்கிறாள். 'துரியோதனன் ஒருபிடி சோறுண்ண மறுபிடியெல்லாம் புழுவாய் நெளியும். அதனை மாற்ற வந்தீர்' என்று கூறிக் கர்ணன் ஆற்றோடு பெட்டியில் வந்த செய்தியைச் சொல்கிறாள். 'குந்தி மகன் என முன்பே அறியாமல் போனேனே! அறிந்திருந்தால் உம்முடன் சேர்ந்து வாழ்ந்திருப்பேனே!' என்று கூறிவிட்டு அதன்பின் கண்ணனை நோக்கியே அனைத்துச் செய்திகளையும் உரைக்கிறாள். இரணியனைக் கொன்றமை, கும்பகர்ணனையும், இராவணனையும் கொன்றமை ஆகியவற்றைச் சுட்டி அவர்களைப் போல் என் கணவன் என்ன குற்றம் செய்தார் எனக் கேட்கிறாள். சீவகனுடைய வரலாற்றையெல்லாம் உரைத்து அவன் நன்றாக வாழவில்லையா? என் கணவரை ஏன் கொன்றாய் என்கிறாள். பஞ்சவர் கொன்றார் எனக் கண்ணன் சொல்லப் பஞ்சவரை நிந்திக்கிறாள். பஞ்சவர் கண்ணன் சொல்படி செய்தோமென மீண்டும் கண்ணனிடம் வந்து அவனுடைய வாழ்க்கை வரலாறுகளையெல்லாம் (பூதகியைக் கொன்றது, கம்சனைக் கொன்றது) கூறி அவனை நிந்திக்கிறாள். பின் அவன் 'விதிவசம்' என்று கூறித் தேற்ற வீடு செல்கிறாள்.

### கர்ணன் போரில் கதைப்பாடல் கூறுகள்

கதைப்பாடல் கூறுகளாகக் கனவு, நம்பிக்கை, சகுனம், இயற்கை இகந்த நிகழ்வுகளைக் கூறலாம். கர்ணன் போரில் பொன்னுருவி, "தேரில் கொடிகள், பரிகரிகள் ஆகாயத்தில் பறந்து போகவும், நவமணிகள் பூமியில் சிந்திப் பலர் பொறுக்கவும், பட்டத்து யானை பட்டு விழவும், வில் இரண்டாக முறியவும், நச்சரவம் நடுங்கவும் (132-136) பொன்முடியையும், ஆபரணங்களையும் கழற்றிப் பொக்கிஷத்தில் வைப்பது போலவும், தலை மயிர் கலைவது போலவும்" 1028-1030) கனாக் காணுகிறாள். 'கண்திட்டி சுற்ற ஒரு காரிகையில்லையே' எனப் (982) பெருந்திரு புலம்புவதிலிருந்து கண்ணேறு கழிக்கும் நம்பிக்கை புலப்படுகிறது. ஆகாயத்திலிருந்து ஊசிநூல் கொடுத்துக் கர்ணன் உடல் தைக்கப்பட்டு அவன் மீண்டும் உயிர்பெற்று வந்து எல்லோரையும் அமைதிப் படுத்தி மீண்டும் தையலைப் பிரிக்கச் சொல்லி வானுலகம் போவது இயற்கை இகந்த நிகழ்வாக அமைந்துள்ளது.

### உவமைகள்

இலக்கியம் போல் உவமைகளை மிகுதியாகப் படைப்பதும் கதைப்பாடல் மரபு. கர்ணன் போரில் கர்ணனைப் புண்ணியம் காப்பதற்கு

"வர்ணமுள்ள சூரியனை வாசுவந்து காத்தல், கற்றாக்கள் (கன்றையுடைய பசுக்கள்) கன்றுதனைக் காத்தல், பெற்றதாய் பிள்ளைகளைக் காத்தல், அன்னம் கோழிகள் குஞ்சைக் காத்தல், பாலை உறைமோர் காத்தல், மனிதனை ஆடை காத்தல்" ஆகியவை உவமைகளாகக் காட்டப் படுகின்றன. (618-622)

கர்ணனை இழந்த பொன்னுருவிக்கு வேங்கை எடுத்த வெறும்பாய்ச்சல், தீங்கு நினைந்தவர் செல்வம், மூலம் அறுத்தமரம், காண்டம் இல்லாக் கருத்து, கடலைச் சார்ந்த மரம், சூரியன் இல்லாத பூமி, நீதியற்ற மன்னன் கொடுமைப் படுத்திய குடிமக்கள், சிறகிழந்த பறவை, பாலற்ற பசு, நீர்பாய்ச்சலில்லாப் பயிர், கயிறில்லாப் பம்பரம், குடிக்க நீரில்லாக் கிணறு, நீரில்லாக் குளம், கொங்கையில்லாக் குமரி, கப்பல் கவிழ்த்தவர் ஆகிய உவமைகள் கூறப் படுகின்றன (1296-1321).

## குடைகள், கொடிகள், ஆபரணங்கள், வாத்தியங்கள்

வெள்ளை வட்டக்குடை, பச்சைக் குடை, நீலக்குடை, பட்டுக் குடை, பவளக் குடை, முத்துக் குடை, வயிரக் குடை, சந்திரவட்டக்குடை, இந்திரநீலக்குடை, காவிக்குடை, மயில்தோகைக் குடை ஆகிய குடைவகைகள் சுட்டப்படுகின்றன (105-108).

அனுமக் கொடி, அரவக் கொடி, மனுதர்க்கொடி, மகரக்கொடி, புலிக்கொடி, சிங்கக்கொடி, கருடக்கொடி, சூரியகாந்திக்கொடி, சந்திரமதிக்கொடி, ஆகிய கொடிவகைகள் காட்டப்படுகின்றன. (111-115).

தவண்டை, சங்கு, மத்தளம், டக்கை, மல்லாரி, தம்பட்டம், தாரை, சின்னம், குழல், சேகண்டி, கிணை, தவில், முரசு, பம்பை, தப்பு, எக்காளம், மணி, கொம்பு, நகரா, துத்தி, சூரை, பாண்டியம், மேளம் ஆகிய தோல்கருவிகள், ஊது கருவிகள் சொல்லப்படுகின்றன (230-237).

உச்சிப்பிறை, நெற்றிப்பிறை, சுட்டி, தோடு, கொப்பு, ஓலை, மாணிக்க மாலை, கண்டசரம், பதக்கம், முத்துவடம், வயிரமாலை, கடையம், காரை, தண்டை, சதங்கை, மிஞ்சி, மோதிரம் ஆகிய அணிகள் கூறப்பட்டுள்ளன (1128-1139).

## பேச்சு வழக்கு

கதைப்பாடல்கள் பெரும்பாலும் படி எடுப்பவர்களால், அல்லது பிற்காலப் புலவர்களால் எழுதப்படும்போது பேச்சுவழக்குச் சொற்கள் மிகுதியாகப் பயின்று வருதல் இயல்பு. அதற்குக் கர்ணன் போரும் விலக்கல்ல.

ஏழைப்பயல், கோழைப்பயல் என்று பயல் என்ற சொல்லால் கர்ணன் குறிப்பிடப்படுகிறான், (60). துரியோதனன் > திரியோதனன் என்றும், பார்த்தன் >பாத்தன் என்றும் எல்லா இடங்களிலும் குறிப்பிடப்படுகின்றனர். கொடை > குடை என்றும் புரண்டு > பிரண்டு என்றும் எழுதப்பட்டுள்ளன. பொறுக்குதல் என்பதன் பேச்சு வழக்காகப் 'பிறக்குதல்' என்பது குறிப்பிடப்படுகிறது. இது குமரி மாவட்ட வழக்கு. கற்றா > கத்தா, அற்ற > அத்த என்பது போல் றகரம் தகரமாக்கப்பட்டுள்ளது. இவை ஆங்காங்கே காட்டப்பட்டுள்ளன. பதிப்புரையிலும் சுட்டப்பட்டுள்ளன.

## நாட்டுப்புறத் தன்மை

கர்ணன் இறந்ததும் பெருந்திரு புலம்பும்

அழுதகுரலமர்த்த ஒரு அன்னையரைக் காணேனே
புழுதிதுடைத் தாற்றவொரு பூவையரைக் காணேனே
முழுகிப்புன வாடஒரு மூப்பாரைக் காணேனே
மாராப்பு போர்த்தஒரு மாமியரைக் காணேனே
எச்சில் துடைக்கவொரு ஏந்திழையைக் காணேனே
கண்திட்டி சுற்றவொரு காரிகையைக் காணேனே (976-982)

என்னும் அடிகள் நாட்டுப்புறப் பாடலின் தன்மையை அப்படியே அடியொற்றி விளங்குகின்றன

## பயன்

கதைப்பாடலோ, வில்லுப்பாடலோ, காலட்சேபமோ இறுதியில் சொல்பவர், கேட்பவர்க்குப் பயன் கூறுதல் மரபு. கர்ணன் போரிலும் கேட்பவர் ஆல் போல் தழைத்து அருகுபோல் வேரோடி, மூங்கில்போல் சுற்றம் தழைத்து வாழ்வர்; நன்மை பெறுவர்; இமையோர் பதம் பெறுவர்; கைலாச வாசல் பெறுவர், பிள்ளை பெறுவர்; பெருமாள் பதம் சேர்வர் என்று கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு சிறப்பான கதைக்கூறுகளுடனும், கதை வேறுபாட்டுடனும் அமைந்த ஒரு சிறந்த கதைப்பாடலாகக் **கர்ணன் போர்** அமைந்துள்ளது.

## அடிக்குறிப்புகள்

1 சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி தொகுதி-2 ப. 714.
2 கலைக்களஞ்சியம் தொகுதி 3. ப. 184. தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, சென்னை 1954.
3. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல் நூற்பா 1493.

4. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல் இளம்பூரணர் உரை, ப. 548.
5. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல் பேராசிரியர் உரை, ப. 428.
6. Peeps into Tamil Literature - Ballad Poetry, P. 35.
7. சமூகக் கதைப் பாடல்கள் ஒரு வரையறை, நாட்டார் வழக்காற்றியல், ஆய்வுகள் பகுதி I, ப. 71.
8. நாட்டுப்புற இலக்கிய வரலாறு ப. 158.
9. சமூகக் கதைப் பாடல்கள் ஒரு வரையறை, நாட்டார் வழக்காற்றியல், ஆய்வுகள் பகுதி I, ப. 71.
10. நாட்டுப்புற இலக்கிய வரலாறு ப. 159.
11. தமிழர் நாட்டுப் பாடல்கள் ப. 5.
12. வீரபாண்டியக் கட்டபொம்மன் கதைப்பாடல் ப. 181.
13 ஏட்டில் எழுதாக் கவிதை ப. 202.
14. தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும் ப. 129.
15. History of Classical Sanskrit Literature, P. 54.
16. Mahabharata, a criticism, P. 73.
17. Lord Sri Krishna - His life and teachings, Vol I, P. 21-22.
18. ஸ்ரீ கிருஷ்ண சரித்திர விமர்சம், ப. 13
19. தமிழ் வரலாறு, ப. 248.
20. பாரத நூல்களின் திறனாய்வு, ப. 11.
21 The Ramayana and Mahabharata, P. 197.
22. A History of Sanskrit Literature, P. 284-285.
23. A Study of Mahabharat, P. 3.
24. & 25. A History of Classical Sanskrit Literature, P. 49-50.
26. வில்லி பாரதத்தில் கண்ணன், ப 10.
27. உலக இலக்கியங்கள், பக். 153, 154.
28. A New History of Sanskrit Literature, P. 200.
29. Indian Philosophy, Vol II, P. 482.
30. சிறுபாணாற்றுப்படை, அடி 238 - 241.
31. பெரும்பாணாற்றுப்படை, அடி 414 - 417
32. பதிற்றுப்பத்து பாடல் 14: 5 - 7.
33. பரிபாடல் 3: 31, 32.
34. கலித்தொகை 25: 1-9, 52: 2-6, 101: 16-20, 104: 57-59.
35. அகநானூறு 233: 8-9.
36. புறநானூறு 2: 13-16

37. சிலப்பதிகாரம் காதை 17, ஒன்றன் பகுதி 1:1 முன்னிலைப் பரவல் 3: 2-3. படர்க்கைப் பரவல் 3: 2-4. காதை 22: 111-112. 26: 238-239. 27: 7-10.
38. மணிமேகலை 3: 146-148, 19: 65-66.
39. சீவக சிந்தாமணி பா. 211, 288, 456, 767, 1646, 1681, 1724, 2735.
40. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், பா. 102, 840, 1021, 2089, 2196, 2309, 2405, 2603.
41. தேவாரம் அடங்கன் முறை பாகம்-1, 2173, 3728. பாகம்-2, 4644, 5653, 5721, 7790, 7795.
42. திருவாசகம், கீர்த்தித் திருவகவல், 1516.
43. அற்புதத் திருவந்தாதி, பா. 62, திருக்கைலாய ஞான உலா, கண்ணி 54.
44. கலிங்கத்துப் பரணி, இராசபாரம்பரியம் பா. 180, 181, 194. காளிக்குக் கூளி கூறியது. பா. 471.
45. முத்தொள்ளாயிரம் பா. 3.
46. சேந்தன் திவாகரம், பக். 21, 26, 203.
47. பிங்கல நிகண்டு நூ. 732, 737, 739, 740, 741, 742, 743, 744.
48. தொல்காப்பியம், புறத்திணையியல், நூ. 20, நச். உரை
49. தொல்காப்பியம், நூ. 1493. பேரா. உரை.
50 திருக்குறள், 935 பரி, உரை.
51. யாப்பாருங்கல விருத்தியுரை பாடல் 95 ல் தொன்மை என்னும் வனப்பிற்கு, பாரதம் சான்று காட்டப்படுகிறது.
52. வீரசோழியம் நூ. 100 உரை.
53. பாரத நூல்களின் திறனாய்வு ப. 23.
54 சடையவர்மன் வீரபாண்டியன் மெய்க்கீர்த்தி அடி-5.
55. சின்னமனூர் சாசனம், செந்தமிழ் தொகுதி 22.
56. வில்லிபாரதம், பதிப்புரை, மர்ரே அண்டு கம்பெனி பதிப்பு ப. 4.
57. தொல்காப்பியம், புறத்திணையியல், நூ. 17 நச். உரை.
58. பெருந்தேவனார் பாரத வெண்பா, பா. 4.
59. சாசனத் தமிழ்க்கவி சரிதம் ப. 90
60. சின்னமனூர்ச் சாசனம், செந்தமிழ் தொகுதி 22.
61. வியாச பாரதம், ஆதிபருவம் ப. 440.
62. வியாச பாரதம், ஆதிபருவம் ப. 441.
63. வியாச பாரதம், ஆதிபருவம் ப. 442.
64. வியாச பாரதம், உத்யோக பருவம் ப. 465-468.
65. வியாச பாரதம், ஆதிபருவம் ப. 547, 550, 733.
66. வியாச பாரதம், ஆதிபருவம் ப. 733.

67. வியாச பாரதம், கர்ண பருவம் ப. 251
68 வியாச பாரதம், உத்யோக பருவம் ப. 210, 252.
69. வியாச பாரதம், உத்யோக பருவம் ப. 87.
70. வியாச பாரதம், விராட பருவம் ப. 207-210.
71. வியாச பாரதம், விராட பருவம் ப. 244.
72. வியாச பாரதம், கர்ண பருவம் ப. 172-173.
73. வியாச பாரதம், பீஷ்ம பருவம் ப. 491-494.
74. வியாச பாரதம், உத்யோக பருவம் ப. 483-484.
75. வியாச பாரதம், உத்யோக பருவம் ப. 485
76. வில்லி பாரதம், சம்பவச் சருக்கம், பா 37, 38.
77. வில்லி பாரதம், திரௌபதி மாலையிட்ட சருக்கம், பா. 39.
78. வில்லி பாரதம், சூதுபோர்ச் சருக்கம், பா 5.
79. வில்லி பாரதம், சூதுபோர்ச் சருக்கம், பா. 4
80. வில்லி பாரதம், சூதுபோர்ச் சருக்கம், பா 19.
81. வில்லி பாரதம், வாரணாவதச் சருக்கம், பா. 4, 5.
82. வில்லி பாரதம், சூசுபோர்ச் சருக்கம், பா 168
83. வில்லி பாரதம், சூசுபோர்ச் சருக்கம், பா. 241.
84. On the meaning of Mahabharata, P. 51.
85. வில்லி பாரதம், அருச்சுனன் தவநிலைச் சருக்கம், பா 11.
86. வில்லி பாரதம், நச்சுப் பொய்கைச் சருக்கம், பா 7
87. வில்லி பாரதம், நிரை மீட்சிச் சருக்கம், பா. 6
88. வில்லி பாரதம், நிரை மீட்சிச் சருக்கம், பா 79-83.
89. வில்லி பாரதம், கிருட்டிணன் தூது போர்ச் சருக்கம், பா 133-135
90. வில்லி பாரதம், கிருட்டிணன் தூது போர்ச் சருக்கம், பா 208
91. வில்லி பாரதம், கிருட்டிணன் தூது போர்ச் சருக்கம், பா 218-219
92. வில்லி பாரதம், கிருட்டிணன் தூது போர்ச் சருக்கம், பா. 239.
93. வில்லி பாரதம், கிருட்டிணன் தூது போர்ச் சருக்கம், பா 250-258
94. வில்லி பாரதம், பதினேழாம் நாள் போர்ச் சருக்கம் பா 221.
95. வில்லி பாரதம், பதினேழாம் நாள் போர்ச் சருக்கம் பா 225.
96. வில்லி பாரதம், பதினேழாம் நாள் போர்ச் சருக்கம் பா 230
97. வில்லி பாரதம், பதினேழாம் நாள் போர்ச் சருக்கம் பா. 238-268
98. நல்லாப் பிள்ளை பாரதம், சம்பவச் சருக்கம் பா. 78, 79.
99. 'பாங்கிவன் நமக்கெனப் பரிதி மைந்தனைக் கொண்டான்' நல்லாப் பிள்ளை பாரதம், வாரணாவதச் சருக்கம், பா 1
100. நல்லாப் பிள்ளை பாரதம், வாரணாவதச் சருக்கம், பா. 116
101. நல்லாப் பிள்ளை பாரதம், தெட்சிண நிரை மீட்சிச் சருக்கம், பா 40.

| எண் | நுல்கள் | குந்தி கர்ணன் தன் மகன் என அறிதல் | கர்ணன் தன் மனைவியிடம் போருக்கு விடை பெறுதல் |
|---|---|---|---|
| 1. | வியாசபாரதம் | அருச்சுனனுடன் கர்ணன் போட்டியிட வந்த போதே அவனுடைய கவசகுண்டலங்களின் மூலம் அறிகிறாள். | இல்லை |
| 2. | வில்லிபாரதம் | தூது சென்று வந்த கிருஷ்ணன் கூறிய பின் அறிகிறாள். | இல்லை |
| 3 | கர்ண மகாராஜன் சண்டை | " | தன் கணவன்தேரோட்டி மகன் என்பதால் விடை பெற மறத்துக் குந்தி மகன் என்று தெரிந்ததும் உணவு படைத்துத் தாம்பூலம் கொடுத்து விடை தருகிறாள் பொன்னுருவி. |
| 4. | கர்ண மோட்சம் | " | " |
| 5. | தேரோட்டி மகன் | குந்தியிடம் கிருஷ்ணன், கர்ணன் கவச குண்டலத் தோடுபிறந்தவன்; தன் தாய் யாரென அறியத் துடிக்-கிறான் என்று கூறிய போது குந்தி அறிகிறாள்.( அதன் பின்பே கிருஷ்ணன் அறிகிறான்.) | எண்ணெய்த் தலையோடு வழி அனுப்புகிறாள் மனவைி காஞ்சன மாலா |
| 6. | கர்ணன் போர் | இல்லை | கண்ட கனாவைக்கூறிப் "போக வேணடாம்" எனத் தடுத்துப் பின் திருநீறு தருகிறாள் பொன்னுருவி. |
| 7. | பொன்னுருவி புலம்பல் | இல்லை | இல்லை |

| பாண்டவர் கர்ணனை அறிதல் | கவசகுண்டலம், புண்ணியம் தானம் | கர்ணன் கேட்ட வரம் |
|---|---|---|
| பாண்டவர் கர்ணன் இறந்த பின்பேஅவன் தங்கள் அண்ணன் என அறிகின்றனர். | புண்ணியம் வழங்கும் செய்தி இல்லை. கவச குண்டலத்தை இந்திரனுக்குக் கொடுக்கிறான். | வரம் எதுவும் கேட்கவில்லை |
| " | கவசகுண்டலம் இந்திர னுக்கும்,புண்ணியம் கண்ணனுக்கும் கொடுக்கப் படுகிறது. | எத்தனை பிறவி எடுத்தாலும் இல்லையென்னாத மனமும், செல்வமும், முக்தியும் வேண்டுகிறான். |
| இறக்கும் முன்பு அண்ணன் எனஅறிந்து,பல்லக்கில் ஏற்றி வேண்டும் அரண்மனைக்கு அழைத்து வந்து,மஞ்சத்தில் வைத்து முடிசூட்டுகின்றனர். கேட்கிறான். | கவசகுண்டலம், புண்ணியம் அனைத்தையும் கண்ணனே பெறுகிறான். | மாதா வரும்வரை உயிர் இருக்க ; தம்பிமார் மாணிக்கமேடையில் வைத்து முடி சூட்ட வேண்டும் என்று |
| இல்லை | 2ல் உள்ள படி | குந்தி வந்து என் மகன் என்று சொல்லும் வரை உயிரோடிருக்க வேண்டும்; முப்பத்திரண்டு அறங்களில் அன்னதானம் மட்டும் செய்யவில்லை; அதனால் அடுத்த பிறவியில் அதனைச் செய்ய வேண்டும் என்று கேட்கிறான். |
| இறக்கும் தருவாயில் அறிகின்றனர். | " | இறக்கும் முன் யார் எது கேட்டாலும் இல்லை என்று சொல்லாத வரத்தைக் கேட்கிறான். |
| போருக்கு முன்பே அறிந்துள்ளனர் | கவசகுண்டலம், புண்ணியம் அனைத்தையும் கண்ணனே வாங்குகிறான்.புண்ணியத் திற்குப் பின்பே கவசகுண்ட லத்தை வாங்குகிறான். அதோடு பொன்னுருவியின் மங்கிலி யத்தையும் வாங்குகிறான். இந்திரன் வச்சிரமணி மாலையை வாங்குகிறான். | 2ல் உள்ள படி |
| " | " | இல்லை |

| எண் | நுல்கள் | நாகக்கணை | கர்ணன் இறத்தல் |
|---|---|---|---|
| 1. | வியாசபாரதம் | அருச்சுனனின் ஆறு கணையால் வானத் திலேயே துளைக்கப் படுகிறது | தேரைத் தூக்கும்போது அருச்சுனனின் அச்சலிகம் என்னும் அம்பால் தலை துண்டிக்கப்பட்டு இறக்கிறான். |
| 2. | வில்லிபாரதம் | இரு கூறாக்கப்பட்டுக் கர்ணனிடம் வந்து மீண்டும் விடும்படி கெஞ்சி, விடாமையால் உயிர்விடுகிறது. | அஞ்சாீகம் என்னும் அம்பு மார்பைத் துளைக்க, குந்தி மடியில் ஏந்தி அழ, பாண்டவர் வுந்த புலம்பியபின் உயிர் விடுகிறான்.. |
| 3 | கர்ண மகாராஜன் சண்டை | கர்ணன் மறுமுறை ஏவவில்லை என்று வந்த பின் சினந்து, போய்விட்டது., | குந்தியும் பாண்டவரும் மைந்தனை ஒப்படைத்து முடிசூட்டப்பட்டு, இறக்கிறான். |
| 4. | கர்ண மோட்சம் | மறுமுறை விடாததால் நொந்து, தேர்த்தட்டில் உயிர்விடுகிறது. | அருச்சுனனின் பாசுபத த்தால் குற்றுயிராய்க் கிடக்கும் நிலையில், புண்ணியம் ஈந்து மோட்சம் பெறுகிறான். |
| 5. | தேரோட்டி மகன் | அருச்சுனனின் மணி முடியைப்பறித்துக் கொண்டு போய்விட்டது | குந்தி வந்து மடியில் வைத்து அழ மனைவி மன்னிப்பு கேட்க, மன்னித்த பின் இறக்கிறான். |
| 6. | கர்ணன் போர் | மறுமுறை விடாததால் திருப்பாற் கடலில் தஞ்சம் புகுகிறது. | புண்ணியம் பெற்ற பின்பும் அம்பு துளைக்காததால் கவச குண்டலங்கள் பெற்று வந்த பின் இறக்கிறான். இறந்த பின்பே அணைவரும் வந்து புலம்புகின்றனர். |
| 7. | பொன்னுருவி புலம்பல் | இல்லை | இல்லை |

| உயிர் பெறுதல் | தீப்பாய்தலும் கர்ணன் மகன் பற்றிய செய்தியும் | ஈமக்கடன் |
|---|---|---|
| இல்லை | நான்கு புதல்வர்கள் முதல் மூவர் நகுவனாலும் இறுதி மகன் அருச்சுனனாலும் கொல்லப்படுகின்றனர். | எல்லோரும் இறந்த பின்பு ஈமக்கடன் செய்து அஸ்தினாபுரம் செல்கின்றனர் பாண்டவர். |
| இல்லை | " | " |
| இல்லை | மூன்று மைந்தர்கள் குறிப்பிடப்படுகின்றனர். முதல் இருமைந்தர்கள் இறக்கின்றனர். கணவனை இழந்த அனைவரும் தீப்பாய பொன்னுருவி மட்டும் மகனுக்காக வாழ்கிறாள். எனவே மூன்றாவது மகன் இறக்கவில்லை. | இல்லை |
| இல்லை | ஒரு மகன் மட்டும் குறிப்பிடப்படுகிறான். | இல்லை |
| இல்லை | மற்றமனைவியர்க்கு மக்கள் உள்ளனர். காஞ்சனமாலாவுக்குக் குழந்தை இல்லை. | இல்லை |
| பொன்னுருவி தெய்வங்களிடம் முறையிட, சிவன் ஊசி நூல் கொடுக்க அதனால் இறந்த உடலைத் தைக்கஉயிர் பெற்ற அணைவரையும்தேற்றி தையலைப் பிரிக்கச்சொல்லி மீண்டும் வைகுண்டம் சேர்கிறான். | ஒரு மகன். கர்ணனுக்கு முன்பேஅருச்சுனனால் கொல்லப்படுகிறான் | கர்ணன் உயிர் பெற்று மீண்டும் இறந்த பின் அவன் உடலுக்கு எரியூட்டி அவரவர் இல்லம் சேர்கின்றனர். |
| பொன்னுருவி கண்ணனிடம் முறையிட, கர்ணனுக்கு உயிர் தருமாறு எமனிடம் கண்ணன் கூற, பொன்னுருவியே வேண்டாமென மறுத்து விடுகிறாள். | " | இல்லை |

| எண் | நுல்கள் | கர்ணன் மனைவி பெயர் | மகன் பெயர் |
|---|---|---|---|
| 1. | வியாசபாரதம் | இல்லை | சித்ரசேனன்<br>சூரியவன்மன்<br>சித்ரகீர்த்தி<br>விருஷசேனன் |
| 2. | வில்லிபாரதம் | இல்லை | முதல் மூவருக்கும் அதே பெயர்கள் நான்காம் மகன் பெயர் விடசேனன். |
| 3 | .கர்ண மகாராஜன் சண்டை | பொன்னருவி | சூரிய பற்பன்,<br>சுந்தரபற்பன்<br>என இரு புதல்வர்கள் இறந்து விடுகின்றனர்.<br>மூன்றாம் மகனைக் கர்ணன் தர்மரிடம் ஒப்படைக்கிறான்<br>பெயர் தெரியவில்லை. |
| 4. | கர்ண மோட்சம் | சுபாங்கனி, பொன்னருவி<br>பொன்மாலை<br>(இம்மூன்றும் ஒருவரின் பெயரே) | விஸ்வகேது (பொன்னுருவி மசக்கையிலும் இதே பெயர்) |
| 5. | தேரோட்டி மகன் | காஞ்சனமாலா | இல்லை |
| 6. | கர்ணன் போர் | பொன்னுருவி | விசகர்ணன் |
| 7. | பொன்னுருவி புலம்பல் | " | " |

| துரியோதனின் மனைவி பெயர் | துரியோதனின் தங்கை பெயர் | துச்சலை கணவன் பெயர் |
|---|---|---|
| இல்லை | துச்சலை | ஜெயத்ரதன்(சைந்தவன்) |
| இல்லை | " | " |
| பெருந்திரு மசக்கையிலும் இதே பெயர்) | துர்ச்சலை(பொன்னுருவி | தேத்தரசன்(சயிந்தவன்) |
| பானுமதி | துச்சளை | சயிந்தவன் |
| பானுமதி(கர்ணனைத் தன் அண்ணன் என்கிறாள்) | இல்லை | இல்லை |
| பெருந்திரு(கர்ணணைத் தன்மகனாக நினைக்கிறாள்) | சங்குபதி | தேத்தரசன் |
| " | " | " |

## CRITICAL INTRODUCTION

### Folk literature

Folk Literature exactly echoes the life and thoughts of the common people. It has three major division. 1) Folk songs 2) Folk tales 3) Folk story poems or ballads. Folk songs appear as a farmer's song; the song of the picotah or shadoof; the cartman's song; th boatman's song; the lime pounder's song; lullaby song; songs of lament; wedding songs etc., dealing with various aspects of the common people in their profession and social life, reflecting their joys and sorrows.

Folk tales deal with the incidents and the episodes narrated from generation to generation by word of mouth. Folk story- poems or ballads sing of episodes in *Puranas, Ithikasas* and history in the form of ballads which were usually long.

### The story and its antiquity

Stories may deal with *Puranas* and *Ithikasas* partly historical, partly imaginary, and also legends. We cannot say when stories were begun to be told. When early man spoke of this experiences for the day on returning from the forests, story-telling began. The critical commentators of *Tolkāppiyam* like Iḷampūraṇar and Pēraciriyar refer to the ancientness of stories such as the Rāma story or the Pāṇṭavar story.

### Ballad

There can be no two opinions about the definitions of a ballad as a long story-poem. Opinions differ, however, as to whether it began as an oral rendering or as a written composition. One view is that a ballad is a story-poem narrated or sung by a singer by himself or with others playing on instruments in a certain cultural milieu and folk tradition, the performance being made before a folk audience. It is said that when Pukaḻēnti was imprisoned by Oṭṭakkūttar, he suffered without food or drink; he saw through the window of his cell, women taking water in their pots from a pond nearby and sang the episodes from the

It will not go back without your head,
When it is shot from the bow of Karṇaṉ!
I do not know how this time I am going to save you;
Somehow we have to defeat Karṇaṉ famed in Tamil land.'

*(அருச்சுனன் கர்ணனை அழைத்து வருமாறு வேண்டுதல்)*

*ஆயரே கேளிர் அடியேனுட விண்ணப்பந்தான்*
*நீயா ரவனா ரெனவுரைத்தீர் மாயவரே* 363

*உடன்பிறந்த [1]சுற்றம் உருகாதோ [2]யெந்தனக்கு*
*படந்துயிலும் மாயவரே வார்த்தையொன்று கேட்டருளும்* 364

*அடியேன் தனக்கா அண்ணாவி கர்ணர் தம்மை*
*[3]நெடியோனே இப்போது [4]நீரழைக்க வேணுமென்றான்* 365

*364. படம் - பாம்பணை. 365. அண்ணாவி - அண்ணன். நெடியோனே - திருமாலே. மாவலியிடம் மூவடி மண் வரம் பெற்றபோது நீண்ட வடிவம் எடுத்ததால் நெடியோன் என்ற பெயர் ஏற்பட்டது.*

*சு. சொல் : 1 சுத்தம் 2 யெந்தணக்கு 3 நெடியோனை 4. நீரளைக்க*

*(Arccuṉaṉ Karṇaṉai aḻaittu varumāṟu vēṇṭutal)*

*āyarē kēḷir aṭiyēṉuṭa viṇṇappantāṉ*
*nīyā ravaṉā reṉavuraittīr māyavarē*

*uṭaṉpiṟanta cuṟṟam urukātō yentaṉukku*
*paṭantuyilum māyavarē vārttaiyoṉṟu kēṭṭaruḷum*

*aṭiyēṉ taṉakkā aṇṇāvi karṇartammai*
*neṭiyōṉē ippōtu nīraḻaikka vēṇumeṉṟāṉ*

**Aruccuṇaṉ requesting Krisṇaṉ to bring Karṇaṉ before him**

'Noble Lord! hear my prayer!
You ask me what is he to me or I to him!
He is my own brother and won't my heart
Melt with love for him? Lord recumbent upon
The serpent-bed! Krisṇa! listen to my words!
For the sake of your servitor, O lofty Lord,
Please invite my brother Karṇaṉ to come to me.'

### (கண்ணன் கர்ணனிடம் சென்று,பாண்டவரிடம் வருமாறு அழைத்தல்)

*ஆமென்று சொல்லி அருச்சுணனார் சொல்படியே*
*நாணாமல் மாயன் நடந்தார் சபைநடுவே* 366

*சபையில் [1]நடந்துவரத் [2]தான்கண்டு அங்கர்கோன்*
*அபையன் அடைக்கலங்காண் ஆயரே யென்றுரைத்தான்* 367

*[3]தேரைவிட்டுக் கீழிறங்கி [4]செங்கையினா லேகுவித்து*
*காருமென்று சொல்லிக் கர்ணனுந்தான் [5]தெண்டனிட்டு* 368

*[6]தெண்டனிட்ட கர்ணனைத்தான் திருமால் அருகழைத்து*
*எண்டிசையும் மெய்க்கும் [7]இடியேறே கர்ணாகேள்* 369

*விசைய னுனைக்கண்டு மேனிச் சருகானான்*
*இசைபயிலும் போர்விசையன் இப்போது நம்முடனே* 370

*அய்வர்க்கு மூத்த [8]அழகுடைய கர்ணரும்மைச்*
*[9]சென்றழைத்து உன்னைத் [10]திரும்பவரச் சொன்னான்காண்* 371

*அப்படியே [11]வந்தால் [12]அழகுடைய கர்ணாகேள்*
*என்றுபோல் [13]கர்ணா ராச்சியத்தை நீயாள* 372

*அஞ்சுதம்பி மாருஉன்னை [14]அடிதொழுது நிற்பார்காண்*
*வெஞ்சமரில் நில்லாதே விரையவா வென்றுரைத்தார்* 373

*368 தெண்டனிட்டு - நமஸ்கரித்து. 369 மெய்க்கும் - மெச்சும் - புகழும். 370. சருகானான் – வாடினான்.*

***சு. சொல் :*** *1 நடந்துவறத் 2 தான்ங்கண்டு 3 தேரெவிட்டுக் கீளிறங்கி 4 செங்கய்யினா 5. தெண்டநிட்டு 6 தெண்டநிட்ட 7 இடியேரே 8 அளகுடைய9 சென்றளைத்து 10 திரும்பவறச் சொன்னான்ங் 11 வந்தா 12 அளகுடைய 13 கர்ணனா 14 அடிதொளுது நிற்ப்பார்கான்*

### (Kaṇṇaṉ Karṇaṉiṭam ceṉṟu, Paṇṭavariṭam varumāṟu aḻaittal)

*āmeṉṟu colli aruccuṉaṉār colpaṭiyē*
*ṉāṇāmal māyaṉ naṭantār capainaṭuvē*

*capaiyil naṭantuvarat tāṉkaṇṭu aṅkarkōṉ*
*apaiyam aṭaikkalaṅkāṇ āyarē yeṉṟuraittāṉ*

*tēraiviṭṭuk kīḻiraṅki ceṅkaiyinā lēkuvittu*
*kārumeṉṟu collik karṇaṉuntāṉ teṇṭaṉiṭṭu*

*teṇṭaṉiṭṭa karṇaṉaittāṉ tirumāl arukaḻaittu*
*eṇṭicaiyum meykkum iṭiyērē karṇākēḷ*

*vicaiya ṉuṉaikkaṇṭu mēnic carukāṉāṉ*
*icaipayilum pōrvicaiyaṉ ippōtu nammuṭaṉē*

*ayvarkku mūtta aḻakuṭaiya karṇarummaic*
*ceṉṟaḻaittu uṉṉait tirumpavarac coṉṉāṉkāṇ*

*appaṭiyē vantāl aḻakuṭaiya karṇākēḷ*
*eṉṟupōl karṇā racciyattai nīyāḷa*

*añcutampi māruvuṉṉai aṭitoḻutu niṟpārkāṉ*
*veñcamaril nillātē viraiyavā veṉṟuraittār*

### Krisnaṉ going up to Karṇaṉ and Karṇaṉ bowing to him

Agreeing to do so, as desired by Aruccuṉaṉ,
Straight Krisṇaṉ walked across to Karṇaṉ,
And the king of the Aṅkas greeted him thus;
"O noble Lord! give me grace and refuge!'
Getting down from his chariot Karṇaṉ bowed to Krisṇaṉ
With folded hands saying: 'Save me O Lord.'
Tirumāl backoned to Karṇaṉ to come near him
And said to him: 'O Karṇa, mighty as thunder
And famous in all the directions eight!
On seeing you, Vicayaṉ has become pale of body
Out of brotherly love; war-like Aruccuṉaṉ
Famous like you, has asked me, to meet you
And invite you, elder to all the Five,
To come over to him; if you do so, lovely Karṇa!
Your five younger brothers will stand beside you
With fraternal respect, while you can rule
Over all of Bharat; do not stand opposed
In battle fierce but come quickly to us.'

### (கர்ணன் பாண்டவரிடம் வரமாட்டேன் எனல்)

வரவேணு மென்றீரே [1]மண்ணளந்த மாயவரே
[2]அரவணிந்த [3]ஈசர்க்கும் அம்மைக்கு மேறாதே 374

அல்லாம லிப்போது ஆயரே [4]கேட்டருளீர்
எல்லாரும் பூவுலகில் இறவா [5]திருப்பாரோ 375

கற்பக மலையோ கலங்கா சமுத்திரமோ
அற்ப சரீரமிது ஆயரே யென்றுரைத்தான். 376

[6]மதலைதனைத் திருத்தி [7]வளர்த்தஅண்ணர்க் காகாமல்
இதமுடைய பஞ்சவரோ டிருந்து அரசாண்டால் 377

செம்பொன் முடிசூடும் சிவனுக்கு மேறாதே
[8]வானவர்க்கும் தேவர்க்கும் மனதுசரி போகாதே
அம்புவியோர்க் கேறாதே [9]அறமெனக்கு நல்காதே 378

பஞ்சவர்க ளோடே பகையாய்ப் பிறந்தேன்னான்
[10]வெஞ்சமரில் இப்போ மிகவரவு நீதியுண்டோ 379

374. மண்ணளந்த மாயவர் - பூமியை அளந்த திருமால். வாமன அவதாரத்தில், பூமி முழுவதையும் ஓரடியாலும், வானுலகம் முழுவதையும் ஓரடியாலும் அளந்தவர். அரவு - பாம்பு. அரவணிந்த ஈசர் - சிவன். 376. அற்ப சரீரம் - சிறுமையான உடல். 377. மதலை - குழந்தை. 378. அம்புவி - அழகிய பூமி. 379 - வெஞ்சமர் - கொடியபோர்.

சு. சொல் : 1 மன்னளந்த 2 அரவனிந்த 3. சர்க்கும் 4 கேட்டுருளீர் 5 திருப்பார்களோ 6 மதலை 7. வளத்த 8. வானவர்க்குய்ந் 9. அறம்மெனக்கு 10. வென்சமரில்

### (Karṇaṉ Pāṇṭavariṭam varamāṭṭēṉ eṉal)

*varavēṇu meṉrīrē maṇṇaḷanta māyavarē*
*aravaṇinta īcarkkum ammaikku mēṟātē*

*allāma lippōtu āyarē kēṭṭaruḷīr*
*ellōrum pūvulakil iṟavā tiruppārō*

*kaṟpaka malaiyō kalaṅkā camuttiramō*
*aṟpa carīramitu āyarē yeṉṟuraittāṉ*

*matalaitaṉait tirutti vaḷarttaaṇṇark kākāmal*
*itamuṭaiya pañcavarō ṭiruntu aracāṇṭāl*

*cempon muticūtum civanukku mēratē*
*vānavarkkum tēvarkkum manatucari pōkātē*
*ampuviyōrk kēratē aramenakku nalkātē*

*pañcavar kalōtē pakaiyāyp pirantēnnān*
*vēncamaril ippō mikavaravu nītiyuntō*

**Karnan refusing to go over to the Pāntavas**

'O Lord, who did measure earth and heaven!
You ask me to come with you to the other side,
It won't be deemed proper by Isvaran
Adorned with snakes, and by Goodess Uma!
Even otherwise, hear me, Noble One!
On this earth can anyone live on without facing death
At the appointed time? Is our frail body, O Lord,
Hard and enduring as the Karpaka mountain?
Is it eternal as the undisturbed ocean?
If I were to be with the Five Pāntavars
And rule the earth, without being of any use
To my brother who brought me up from childhood,
It won't be acceptable to Lord Civan with his golden locks;
Nor will the celestials and the devas approve of it,
From my birth I have been a foe to the Five.
Is it just now, to expect me to come over
When the battle is about to be joined?'

*(பாண்டவரைக் காக்கும்படி வேண்டுதல்)*

*ஆத்தோடே வந்தேன்னான் அங்குமில்லை யிங்குமில்லை*
*காத்துரட்சி அய்வரையும் கடைபோகக் காத்தருளும்* 380

*பச்சைமாலே அடியேன் [1]பார்த்தனுட கையாலே*
*[2]நிச்சயமாய்ப் படுவேன் நின்பாதம் [3]சேர்த்தருளும்* 381

380. ஆத்தோடே - ஆற்றோடே என்பதன் பேச்சுவழக்கு. 381. படுவேன் - இறப்பேன்.

சு. சொல் : 1 பாத்தனுட கய்யாலே 2. நிட்செயமாய் 3 சேத்தருளும்

*(Pāṇṭavaraik kākkumpaṭi vēṇṭutal)*

*āttōṭē vantēṉṉaṉ aṅkumillai yiṅkumillai*
*kātturaṭci ayvaraiyum kaṭaipōkak kāttaruḷum*

*paccaimālē aṭiyēṉ pārttaṉuṭa kaiyālē*

*niccayamāyp paṭuvēṉ niṉpātam cērttaruḷum*

**Karṇaṉ praying to Kriṣṇan to save the Pāṇṭavas**

'I came drifting down the river:
I belong neither here nor there,
O green-hued Lord Tirumāl! certain it is
That I will fall at the hands of Pārttaṉ!
And then, take me under the protection of your feet!'

*(விசயனைக் காக்கும்படி வேண்டுதல்)*

வெம்பிய நாகம் [1]விடுவேன் ஒருகணைதான்
தம்பி விசையன் தலைபிடுங்கிப் போகாமல் 382

[2]மண்ணேழை யும்மளந்த மாயவரே யிப்போது
[3]கண்ணான பார்த்தனைப்போய்க் காருமென்றார் **அம்மானை** 383

383. மண்ணேழு - ஏழுஉலகம். காரும் - காப்பாற்றும்.

சு. சொல் : 1. விடுவேன்னொரு கனைதான் 2. மன்னேளையும் 3 கண்னான பாத்தனைப்

*(Vicaiyaṉaik kākkumpaṭi vēṇṭutal)*

vempiya nākam viṭuvēṉ orukaṇaitāṉ
*tampi vicaiyaṉ talaipiṭuṅkip pōkāmal*

*maṇṇēḻai yummaḷanta māyavarē yippōtu*
*kaṇṇāṉa pārttaṉaippōyk kārumeṉṟār ammāṉai*

**Karṇaṉ requesting Krisṇaṉ to guard Vicayaṉ**

'The fierce serpent-dart I shall shoot only once,
O Lord who measured the seven-fold world!
Protect my brother Vicayaṉ well, lest he lose his head.
Go back now, Lord, and watch over Pārttaṉ
My brother dear to me as my very eye!' (Ammāṉai)

**(கண்ணன் அருச்சுனனிடம் வந்து கர்ணன் கூறியதைக் கூறுதல்)**

*யென்றுகர்ணன் சொல்ல [1]இயல்மாயன் தான்நடந்து*
*[2]வென்றியுடன் கேட்டு மீண்டுவந்தா ரம்மானை* 384

*கர்ணனுடன் கேட்டதெல்லாம் காண்டீப னுக்குத்தான்*
*நன்னெறிசேர் மாயன் நவின்றனர்கா ணம்மானை* 385

*அஷ்டதிக்கு வில்லி அருச்சுனர்தன் [3]கையாலே*
*பட்டா னானல்லோ பகைதீரு மென்றுரைத்தார்* 386

*பொங்கரவம் பூண்ட புண்ணியனார் [4]தம்மாணை*
*அங்கேநான் வாரதில்லை ஆயரே யென்றுரைத்தான்* 387

*என்ற [5]மொழிகேட்டு யென்செய்வோ மென்றுசொல்லி*
*[6]மன்றலணி தோள்விசையன் மாயனுடன் [7]நிற்கையிலே* 388

*பார்வேந்த [8]ரெண்ணரிய [9]பார்த்தன் [10]பயமுறவே*
*சீர்வேந்த ரெல்லோரும் சென்றார்கா ணம்மானை* 389

*385. காண்டீபன் - விசையன். நவின்றனர் - சொன்னார் 386 அஷ்டதிக்கு - எட்டுதிசை. பட்டானானல்லோ - நான் இறந்தால் அல்லவோ. 388 மன்றல் - மணம் பொருந்திய மாலை. 389. வேந்தர் - அரசர்.*

*1 இயல்மாயன்ந் 2. வென்றியுடன்ங் கேட்டு 3 கய்யாலே 4 தம்மானை 5 மொளி 6. மன்றவனி 7 நிற்க்கயிலே 8 ரெண்ணரிய 9. பாத்தன் 10. பயமுரவே*

**(Kaṉṉaṉ Aruccuṉaṉiṭam vantu Karṇaṉ kūṟiyataik kūṟutal)**

*yeṉṟukarṇaṉ colla iyalmāyaṉ tāṉnaṭantu*
*veṉṟiyuṭaṉ kēṭṭu mīṇṭuvantā* ***rammāṉai***

*karṇaṉuṭaṉ kēṭṭatellām kāṇṭīpa ṉukkuraittāṉ*
*naṉṉeṟicēr māyaṉ naviṉṟaṉarkā* ***ṇammāṉai***

*aṣṭatikku villi·aruccuṉartaṉ kaiyālē*
*paṭṭā ṉāṉallō pakaitīru meṉṟuraittār*

*poṅkaravam pūṇṭa puṇṇiyaṉār* ***tammāṇai***
*aṅkēṉāṉ våratillai āyarē yeṉṟuraittāṉ*

*eṉṟa moḻikēṭṭu yeṉceyvō meṉṟucolli*
*maṉṟalaṇi tōḷvicaiyaṉ māyaṉuṭaṉ niṟkaiyilē*

*pārvēnta reṉṉariya pārttaṉ payamuṟavē*
*cīrventa rellōrum ceṉṟārkā ṇammāṉai*

### Krisṇaṉ conveying Karṇaṉ's reply to Aruccuṉaṉ

The graceful Lord returned to Aruccuṉaṉ
After meeting Karṇaṉ across the battlefield. (Ammāṉai)
All that Karṇaṉ said, the righteous Krisṇaṉ
Conveyed to Kāṇṭipaṉ 'Only if I fall
At the hands of the bow-man famous in directions eight,
Will the great enmity cease;
I swear in the name of the holy One
Adorned with fierce snakes! I shall not go over
To the other side, O noble Lord.'
Hearing these words of Karṇaṉ, Vicayaṉ, his arms
Decked with fragrant wreaths, stood bewildered
Beside Lord Krisṇaṉ; while making even Pārttaṉ worried,
Countless kings and rulers passed rank by rank
On the other side of the battle-line! (Ammāṉai)

### (கண்ணன் அருச்சுனனிடம் பொய்த்தலையைக் கட்டிச்செல்லும்படி கூறுதலும் அருச்சுனன் அவ்வாறே செய்தலும்)

*மன்ன னருச்சுனர்க்கு மாயவனங் கேதுரைப்பான்*
*[1]கொற்றவனே கர்ணனின்று [2]கொடுநாகம் தான்தொடுப்பான்* 390

*வென்றியுள்ள வீரா விசையாநீ இப்போது*
*கொன்றா [3]லொழிய கொடுநாகம் போகாது* 391

*உத்தபோர் தன்னில் உன்னையது கொல்லாமல்*
*பொய்த்தலையைக் கட்டிப் போமென்றார் அம்மானை* 392

*துளசிமணி மாயவனார் சொல்படியே போர்விசையன்*
*[4]தோற்றமுள்ள பொய்த்தலையைச் சூட்சமாய்க் கட்டிவைத்தான்* 393

*[5]வன்னச் சிறப்புவில்லி வாகான கச்சைகட்டி*
*கச்சைகட்டி வாளெடுத்து [6]கனக்கப் பணிபூண்டு* 394

[7]அச்சமற்ற போர்விசையன் ஆகம் முடிபுனைந்து
முடிபுனைந்து [8]பார்த்தன் முடிவில்லும் [9]கைப்பிடித்து 395

[10]பழிதீர்க்க வேணுமென்று பலமுரசு [11]தான்முழங்க
சங்கூதிப் போர்விசையன் தானும் வெகுபடையாய் 396

பொய்த்தலையைச் சோடித்துப் பூராய மாய்நிறுத்தி
மெய்த்தலையைத் தானொளித்தார் மேன்மையுள்ள மாயவனார் 397

ஆரபாரத் துடனே அமர்க்களத்தில் வந்துநின்று
காரைப் பொருங்கரத்தான் கர்ணனுட னேபொருதான் 398

390. கொற்றவன் - அரசன் இங்கு அருச்சுனன். கொடுநாகம் - பாம்புக்கணை. தொடுப்பான் - விடுவான். 392. உத்த - உற்ற 392. சூட்சம் - சூழ்ச்சி. 394. வன்மை - அழகு. கச்சை - இடையணி பணி - ஆபரணம். கனக்க - மிகுதியாக 396. முழங்க - ஒலிக்க. 397 பூராயம் - விசித்திரம். 398 ஆரபாரம் - ஆரவாரம். அமர்க்களம் - போர்க்களம் கார் - மேகம். காரைப் பொரும்கரத்தான்- கொடுப்பதில் மேகத்தோடு போட்டியிடும் கையையுடைய கர்ணன்.

சு. சொல் : 1 கொத்தவனே 2. கொடுநாகம்ந் 3 லொளிய 4 தோத்தமுள்ள 5. வர்ன்ன 6 கணக்கப் 7. அச்சமத்த 8 பாத்தன் 9 கையிப்பிடித்து 10. பளிபிறக்க 11 தான்முளங்க

### (Kaṉṉaṉ Aruccuṉaṉiṭam poyttalaiyaik kaṭṭiccellumpaṭi kūṟutalum aruccuṉaṉ avvāṟē ceytalum)

*maṉṉa ṉaruccuṉarkku māyavaṉaṅ kēturaippāṉ*
*koṟṟavaṉē karṇaṉiṉṟu koṭunākam tāṉtoṭuppāṉ*

*veṉṟiyuḷḷa vīrā vicaiyānī ippōtu*
*koṉṟā loḷiya koṭunākam pōkātu*

*uttapōr taṉṉil uṉṉaiyatu kollāmal*
*poyttalaiyaik kaṭṭip pōmeṉṟār ammāṉai*

*tuḷacimaṇi māyavaṉār colpaṭiyē pōrvicaiyaṉ*
*tōṟṟamuḷḷa poyttalaiyaic cūṭcamāyk kaṭṭivaittāṉ*

*vaṉṉac ciṟappuvilli vākāṉa kaccaikaṭṭi*
*kaccaikaṭṭi vāḷeṭuttu kaṉakkap paṇipūṇṭu*

*accamaṟṟa pōrvicaiyaṉ ākam muṭipuṉaintu*
*muṭipuṉaintu pārttaṉ muṭivillum kaippiṭittu*

*paḻitīrkka vēṇumeṉṟu palamuracu tāṉmuḻaṅka*
*caṅkūtip pōrvicaiyaṉ tāṉum vekupaṭaiyāy*

*poyttalaiyaic cōṭittup pūrāya māyniṟutti*
*meyttalaiyait tānoḷittār mēṉmaiyuḷḷa māyavanār*

*ārapārat tutaṉē amarkkaḷattil vantuniṉṟu*
*kāraip poruṅkarattāṉ karṇaṉuṭa ṉēporutāṉ*

**Krisṇaṉ advising Aruccuṉaṉ to put on a turban looking like his own head**

To Prince Aruccuṉaṉ Krisṇaṉ said; 'Today surely
Karṇaṉ will shoot the serpent-dart! Victorious hero!
Vicaya! unless it kills you, it won't go back!
Therefore put on a turban, like a false head
Lest, it should cut off your real head' (Ammāṉai)
Accordingly as advised by Krisṇaṉ adorned
With garlands of sacred basil, war-like Vicayaṉ
Cunningly put on his head a turban appearing
From a distance to be his own head!
And then did Krisṇaṉ prepare the handsome bowman
Aruccuṉaṉ for war; a sash tightly tied round the waist,
Numerous ornaments adorning his arms and chest;
With a golden crown on his head, fearless Pārttaṉ bow in hand
Stood ready to battle, to wreak vengeance upon his foes;
While many a war-drum resounded as Vicayaṉ
Blew upon his famous conch, his real head
Concealed beneath the turban of false head!
Thus aided by the strategy of the wily Krisṇaṉ
Aruccuṉaṉ came forward into the field, full of clamour,
To begin his battle with Karṇaṉ whose munificent hands
Rivalled the rain-clouds in their bounty!

*(போரிடல்)*

*[1]அங்(கர்)கோன் தானும் [2]அருச்சுனனர்ர் தன்னுடனே*
*அனத்தமென்று போர்விசையன் அதிகமாகப் பொருதான்* 399

*பஞ்சவர்கள் தங்கள் படைவீரர் தம்மையெல்லாம்*
*[3]வெஞ்சமரில் கொன்றுகர்ணன் விண்ணுலக [4]மேற்றிவிட்டான்* 400

399. அனர்த்தம் > அனத்தம் - நாசம். அன்ந்தமென்று - நாசம் என்று சொல்லும்படி. பொருதான் போர் செய்தான். 400 பஞ்சவர்கள் - பாண்டவர்கள். வெஞ்சமர் - கொடிய சமர். விண்ணுலகம்- வானுலகம்

சு. சொல் : 1. அங்கோண் 2. அருச்சுணணார் 3. வென்ஞ்சமரில் கொண்டு 4 மேத்தி

## (pōriṭal)

*aṅkarkōn̲ tān̲um aruccun̲an̲ār tan̲n̲uṭan̲ē*
*an̲attamen̲ṟu pōrvicaiyan̲ atikamākap porutān̲*

*pañcavarkaḷ taṅkaḷ paṭaivīrar tammaiyellām*
*veñcamaril kon̲ṟukarṇan̲ viṇṇulaka mēṟṟiviṭṭān̲*

## The Battle

The king of the Aṅkas fought with Aruccun̲an̲
Both of them causing havoc in the battlefield.
In the fierce fight Karṇan̲ decimated the Pāṇṭavas army
And sent their warriors to heaven!

### (கர்ணன் மகன் விசகர்ணன், தந்தைஎங்கே?எனக்கேட்க, துரியோதனன், 'கர்ணன் போருக்குப் போனான்' எனல்)

[1]பொருதார்க ளென்றளவில் [2]புகழ்பெரிய [3]கர்ணன்மகன்
அப்போது [4]விசகர்ணன் [5]அரியதுரி யோதனன்பால்

இப்போது யெங்களையா எங்கே யெனக்கேட்டான் 401
பார்வேந்த னப்போது பாலகனுக் கேதுரைப்பான்

போர்வேந்தர் பஞ்சவரைப் [6]பொருதுவெல்லப் போனார்காண்
சீர்வேந்தே யென்று [7]துரியோ தனனுரைக்க 402

401 விசகர்ணன் - கர்ணனின் மகன் ஐயா - தந்தை.402 பார்வேந்தன் - துரியோதனன். பாலகன் - சிறுவன்; விசகர்ணன் போர்வேந்தர் - கர்ணர்.

சு. சொல் : 1. பொருத்தார் 2. புகள்பெரிய 3. கர்னன்மகன் 4 விசைகர்ணன் 5. அரியதிரி 6. பொருதிவெல்ல 7.திரியோ

**(Karṇaṉ makaṉ Vicakarṇaṉ, 'tantai eṅkē?' eṉak keṭka, Turiyōtaṉaṉ 'Karṇaṉ pōrukkup pōṉāṉ' eṉal)**

*porutārka ḷeṉraḷavil pukaḻperiya karṇaṉmakaṉ*
*appōtu vicakarṇaṉ ariyaturi yōtaṉaṉpāl*
*ippōtu yeṅkaḷaiyā yeṅkē yeṉakkēṭṭāṉ*
*pārvēnta ṉappōtu pālakaṉuk kēturaippāṉ*
*pōrvēntar pañcavaraip porutuvellap pōṉārkāṇ*
*cīrvēntē yeṉṟu turiyō taṉaṉuraikka*

**Vicakarṇaṉ asking Turiyōtaṉaṉ about his father and Turiyōtaṉaṉ's reply**

While thus they fought Vicakarṇaṉ, son of Karṇaṉ
Of great fame, went up to Turiyōtaṉaṉ
And asked him where his father was
And the king replied to the boy-hero:
'Young Prince! your war-like father has gone to the field
To vanquish the Five Pāṇṭavas in battle.

**(கர்ணன் மகன் விசகர்ணன் போருக்குப் புறப்படுதல், கர்ணனை வணங்கி அனுமதி கேட்டல்)**

அப்போ [1]மதலை [2]அழன்றுவிழி நீர்சொரிய 403
[3]வளையாழி [4]சூழ்புவியான் [5]மன்ன னுரைகேட்டு
விளையாடுந் [6]தேரேறி வில்லெடுத்து வீதியிலே 404
கச்சைகட்டி மெய்யில் கனக்கப் பணிபூண்டு
பச்சைக் கொடிபறக்கப் பாவாடை தானெறிய 405
பலவாக்கா [7]முழங்கப் [8]படைமன்னர் [9]சூழ்ந்துவர 406
தம்பட்ட மேளம் [10]தாரைசின்னம் [11]தான்முழங்க
கும்பிட்டான் [12]கர்ணனைத்தான் கோல [13]விசகர்ணன் 407
அய்யரே நான்பொருவேன் அருள்விசையன் தன்னுடனே
மெய்யரே யென்னுடைய வீரியத்தைப் பாருமென்றான் 408
தாருகந்த [14]கர்ணன்மகன் சாமர்த்தி [15]யங்கள்சொல்ல 409

403. மதலை - குழந்தை. இங்கு விசகர்ணன். அழன்று - சினந்து. 404. வளை - சங்குகள் நிறைந்த; வளைந்த. ஆழி - கடல். 406. வாக்கா - வாத்தியம் 407. கோலம் - அழகிய 408. வீரியம் - வீரம். 409. தார் - மாலை.

சு. சொல் : 1. மதளை 2. அளன்றுவிளி 3. வளையாளி 4. சூள்புவியான் 5. மன்ண 6. தேரேரி 7 முளங்க 8 படைமண்ணற் 9. சூள்ந்துவர 10 தாரைசின்னம்ந் 11 தான்முளங்க 12 கர்னனைத்தான் 13. விசைகர்னன் 14 கர்னன்மகன் 15. யங்கசொல்ல

### *(Karṇaṉ makaṉ Vicakarṇaṉ pōrukkup puṟappaṭutal, Karṇaṉai vaṇaṅki aṉumati kēṭṭal))*

*appō matalai aḻaṉṟuviḻi nīrcoṟiya*

*vaḷaiyāḷi cūḻpuviyāṉ maṉṉa ṉuraikēṭṭu*
*viḷaiyāṭun tērēṟi villeṭuttu vītiyilē*

*kaccaikaṭṭi meyyil kaṉakkap paṇipūṇṭu*
*paccaik koṭipaṟakkap pāvāṭai tāṉeṟiya*

*palavākkā muḻaṅkap paṭaimaṉṉar cūḻntuvare*

*tampaṭṭa mēḷam tāraiciṉṉam tāṉmuḻaṅka*
*kumpiṭṭāṉ karṇaṉaittāṉ kōla vicakarṇaṉ*

*ayyarē nāṉporuvēṉ aruḷvicaiyaṉ taṉṉuṭaṉē*
*meyyarē yeṉṉuṭaiya vīriyattaip pārumeṉṟāṉ*
*tārukanta karṇaṉmakaṉ cāmartti yaṅkaḷcolla*

### Karṇaṉ's son proceeding to the field after seeking his father's permission

On hearing these words of king Turiyōtaṉaṉ
Lord of the earth engirt by the seas,
Vicakarṇaṉ grew angry and resolved to join the battle;
Mounting his small chariot, a sash tight round his waist,
His body covered by ornaments, his plaid flapping
In the wind along with his green flag,
And accompanied by other kings with their troops,
While many an instrument resounded
Such as kettle-drums and horns and pipes
That blared, Vicakarṇaṉ went up to his father,

Prostrated before him and said: 'Sire!
I will battle with the gracious Aruccuṉaṉ:
Truly Lord, watch my prowess. 'And the son of Karṇaṉ
Spoke of his many talents and sought his blessing.

### *(போர்க்களம் புகுதல்)*

*[1]அன்னேரம் தன்னில் அரிய விச[2]கர்ணன்*
*[3]பொன்னாரம் தானிலங்கப் புகுந்தான் படைக்களத்தே* 410

*மாண்டபுவி மன்னவர்கள் சேர்ந்த படைக்களத்தே*
*ரெண்டு படைக்கும் நடுவே [4]விசகர்ணன்*

*சென்று [5]முடுகிச் சிறுவாளி தான்தொடுத்தான்* 411

*410 ஆரம் - மாலை 411. மாண்ட - மாட்சிமைபொருந்திய. முடுகி - விரைந்து வாளி - அம்பு.*

*சு.சொல் : 1. அன்னேரம்ந் 2. கர்னன் 3. பொன்னாரம்ந் 4 விஷகர்ணன் 5. முடிகி*

### *(pōrkkaḷam pukutal)*

*aṉṉēram taṉṉil ariya vicakarṇaṉ*
*poṉṉāram tāṉilaṅkap pukuntāṉ pataikkaḷattē*

*māṇṭapuvi maṉṉavarkaḷ cērnta paṭaikkaḷattē*
*reṇṭu paṭaikkum naṭuvē vicakarṇaṉ*
*ceṉṟu muṭukic ciṟuvāḷi tāṉtoṭuttāṉ*

### Entering the field of battle

Vicakarṇaṉ the wonder-boy, adorned
With golden chaplets bright, entered
The field of battle right in the midst
Of the two armies with great kings on either side,
The young hero strung his bow ready to shoot
His little arrows.

### *(அருச்சுனனைப் போர்க்கழைத்தல்)*

*அப்போ [1]விசகர்ணன் அர்ச்சுனர்க்கு யேதுரைப்பான்*
*இப்போதுஎன் னய்யருடன் [2]எதிர்த்துப்போர் [3]செய்கிறவன்* 412

[4]நீயோதா னென்று நெடிய கணையெடுத்து 413

[5]பார்த்திருக்க வொண்ணாதே படையென்று [6]மீள்கவென்று
கூத்தெனப் பாசக் கொடியகணை [7]தான்தொடுத்தான்
பார்த்தனுக்குச் சற்றே பயம்வந்து தோன்றிடவே 414

413. கணை - அம்பு 414. ஒண்ணாது - முடியாது. மீள்க - திரும்புக. கூத்து - கூற்று - எமன்.

சு. சொல் : 1. விஷகர்ணன் 2. எதுத்துப்போர் 3. செய்யிரவன் 4. நீயோதான் 5. பாத்திருக்க 6. மிளக்க 7. தான்ந்தொடுத்தான்

***(Aruccuṉaṉaip pōrkkaḻaittal)***

*appō vicakarṇaṉ arccuṉarkku yēturaippāṉ*
*ippōtueṉ ṉayyaruṭaṉ etirttuppōr ceykiṟavaṉ*

*nīyōtā ṉeṉṟu neṭiya kaṇaiyeṭuttu*

*pārttirukka voṇṇātē paṭaiveṉṟu mīḷkaveṉṟu*
*kūtteṉapācak koṭiyakaṇai tāṉtotuttāṉ*
*pārttaṉukkuc caṟṟē payamvantu tōṉṟiṭavē*

**Challenging Aruccuṉaṉ to battle**

Thus did the boy challenge Aruccuṉaṉ:
'Are you the man, opposing my father in battle?'
And fitting an arrow lethal as death itself
He shot it against Aruccuṉaṉ bidding it to destroy
The enemy-ranks and return.
And Pārttaṉ himself was a little afraid!

**(அருச்சுனன் கண்ணனிடம் 'இவன் யார்?' என,கண்ணன் 'இவன் கர்ணன் மகன், கொல்' எனல்)**

செப்பரிய மாலே [1]செங்கண் நெடுமாலே
இப்புதல்வன் ஆர்புதல்வன் நானறியச் சொல்லுமென்றார் 415

[2]ராவான் கடோற்கயன் அபிமனுக்கு [3]மூத்தவன்காண்
ஆனதொரு கர்ணன்மகன் [4]செய்யவிச [5]கர்ணன்காண் 416

யென்றுசொல்லி மாயன் இயல்சேரும் [6]பார்த்தாநீ
[7]கொல்லுமென்று சொல்லிக் கோபாலர் தானுரைக்க 417

416 ராவான் - அருச்சுனனுக்கு உலூபியிடம் பிறந்த மகன். கடோற்கயன் - வீமன் மகன்; இடும்பியிடம் பிறந்தவன். அபிமன் - உத்தரையிடம் அருச்சுனனுக்குப் பிறந்தமகன்

சு. சொல் : 1 சென்ங்கன் 2. ராவான்க் 3. மூத்தவன்ங்காண 4. செய்யவிஷ 5. கர்ணன்ங்கான் 6. பார்த்தாநீயி 7. கொண்டுமென்று

### *(Aruccuṉaṉ Kaṇṇaṉiṭam 'ivaṉ yār'? eṉa,Kaṇṇaṉ 'ivaṉ Karṇaṉ makaṉ; kol' eṉal)*

*ceppariya mālē ceṅkaṇ neṭumālē*
*ipputalvaṉ ārputalvaṉ nāṉaṟiyac collumeṉṟār*

*rāvāṉ kaṭōṟkayaṉ apimaṉukku mūttavaṉkāṇ*
*āṉatoru karṇaṉmakaṉ ceyyavica karṇaṉkāṇ*

*yeṉṟucolli māyaṉ iyalcērum pārttānī*
*kollumeṉṟu collik kōpālar tāṉuraikka*

### Aruccuṉaṉ asking Krisṇaṉ about the boy and Krisṇaṉ asking him to kill the boy who was Karṇaṉ's son

'O Lord Tirumāl, ineffable beyond words!
O red-eyed lofty Lord! Whose child is this boy?
Tell me truly, that I may know.'
Krisṇaṉ replied: 'This youth is elder
To Irāvāṉ, Kaṭōtkacaṉ and Apimaṉyu!
He is noble Vicakarṇaṉ, son of Karṇaṉ, O Pārtta!
Straight you must despatch him' said Kopālaṉ.

### (விசயன் 'இவன் பாலகன்' எனல்)

என்றுசொல்லி மாலுரைக்க இயல்விசைய னேதுரைப்பான்
யெங்கள் சகாயத் திருக்கும் திருமாலே ளநீருமின்றுன 418

[1]பாராமல் கொல்லுமென்றீர் பாலகனைப் பார்த்திருந்து 419

418 சகாயம் - உதவி.

சு. சொல் : 1. பாறாமல்

### *(Vicayan 'ivaṉ pālakaṉ'eṉal)*

*eṉṟucolli māḷuraikka iyalvicaiya nēturaippāṉ*
*yeṅkaḷ cakāyattirukkum tirumālē nīruminṟu*

*pārāmal kollumeṉṟīr pālakaṉaip pārttiruntu*

### Vicayaṉ protesting that he was only a boy

As Krishṇaṉ ordered him to kill the boy,
Vicayaṉ said. 'O Tirumāl, ever our help and aid!
You ask me to kill him; he is but a child.'

*(விசகர்ணன் வீரம்)*

*பின்னும் [1]விசகர்ணன் பெருவாளி தான்தொடுத்தான்*
*யேத்தரிய [2]பார்த்தன்தான் யெய்தான் மலைபோலே* 420

*அய்ந்தலைவா யம்பெடுத்து அவன்சிலையி லேயடக்கி*
*சிந்தை [3]கலங்கத் திரும்பை யாடவேதான்* 421

*420 வாளி - அம்பு 421 ஐந்தலை வாய் அம்பு - ஐந்து பிரிவாக உள்ள அம்பு திரும்பையாட - திரும்பப் போர்செய்ய*

*சு. சொல் : 1. விஷகர்ணன் 2 பாத்தன். 3. கலங்க*

### *Vicakarṇaṉ vīram*

*piṉṉum vicakarṇaṉ peruvāḷi tāṉtoṭuttāṉ*
*yēttariya pārttaṉtāṉ yeytāṉ malaipōlē*

*ayntalaivā yampeṭuttu avaṉcilaiyi lēyaṭakki*
*cintai kalaṅkat tirumpai yāṭavētāṉ*

### The valour of Vicakarṇaṉ

And then Vicakarṇaṉ fixed a powerful arrow to his bow
And shot it at praiseworthy Pārttaṉ, who met it
With arrows thick as a hill; and the boy
Again fitted a five-headed-dart to his bow
And shot it at his foe. And Pārttaṉ wondered
At the boy's valour! Bowing to Kriṣṇaṉ, he cried;
'Never have I seen such a bowman in my life,'
But Kriṣṇaṉ, the green-hued Lord again ordered Pārttaṉ;
'Stay at once Vicakarṇaṉ, son of Karṇaṉ, whose bounty
Puts to shame the black-hued rain clouds!'

### (பார்த்தன் வியத்தல்)

அப்போது [1]பார்த்தன் ஆய ரடிவணங்கி
இப்படித்தா [2]யெய்தவில்லி இவ்விடத்தில் கண்டதில்லை 422

422. இப்படித்தாய் - இவ்வாறு

சு. சொல் : 1 பாத்தன் 2 யெயிதவில்லி

### (Pārttaṉ viyattal)

*appōtu pārttaṉ āya raṭivaṇaṅki*
*ippaṭitā yeytavilli ivviṭattil kaṇṭatillai*

### (மீண்டும் கண்ணன் விசகர்ணனைக் கொல்லும்படி கூறல்)

[1]காரைவென்ற கர்ணன்மகன் கல்யாண [2]விசகர்ணன்
[3]பாலகனைக் கொல்லுமென்று பச்சைமால் தானுரைத்தார் 423

423. கார் - மேகம்.

சு. சொல் : 1. காரைவெண்ற 2 விஷகர்ணன் 3. பாலகணெ

### (mīṇṭum Karṇaṉ Vicakarṇaṉaik kollumpaṭi kūṟal)

*kāraiveṉṟa karṇaṉmakaṉ kalyāṇa vicakarṇaṉ*
*pālakaṉaik kollumeṉṟu paccaimāl tāṉuraittār*

### (பார்த்தன் 'என்மகனை நானே எப்படிக் கொல்வேன்?' எனல்)

[1]வஞ்சமற்ற பார்த்தனப்போ மாய னடி[2]தொழுது
பஞ்சவர்கள் தங்குலத்தில் பதருண்டோ மாயவரே 424

தேர்வேந்தர் நூற்றுவர்க்கும் தென்னவர்கள் [3]பஞ்சவர்க்கும்
வண்மையுள்ள கர்ணன்மகன் மைந்தன் விசகர்ணன் 425

யெங்களுட புத்திரனே யெப்படினான் கொல்வனென்றான்

424. கல்யான - நல்ல. 425 பதர் - உள்ளீடற்றது இங்கு வீரமற்றவன்

சு. சொல் : 1. வஞ்சமத்த பாத்தனப்போ 2. தொளுது 3 பஞ்சவற்கும்

### (Pārttaṉ 'eṉmakaṉai nāṉē eppaṭik kolvēṉ'? eṉal)

*vañcamaṟṟa pārttaṉappō māya ṉaṭitoḻutu*
*pañcavarkaḷ taṅkulattil pataruṇṭō māyavarē*

*tervēntar nūṟṟuvarkkum teṉṉavarkaḷ pañcavarkkum*
*vaṇmaiyuḷḷa karṇaṉmakaṉ maintaṉ vicakarṇaṉ*
*yeṉkaluṭa puttiraṉē yeppatiṉāṉ kolvaṉeṉṟāṉ*

**Pārttaṉ asking how he could kill his own son**

Pārttaṉ free from guile, then cried,
Bowing at the feet of Lord Kriṣṇaṉ;
'In the dynasty of the Five, can there be a base coward?
Bounteous Karṇaṉ's son Vicakarṇaṉ, is a son also to all of us,
The hundred Kauvravas and five Pāṇṭavas,
How can I kill our own child?'

**(கண்ணன் 'நீ இப்போது அவனைக் கொல்லாவிடில் அவன் உன்னைக் கொல்வான்' எனல்)**

*அந்தவுரை கேட்டு ஆயனார் தான்சினந்து* 426

*தப்பாமல் நீயிவனைத் தானேகொல் லாதிருந்தால்*
*இப்போது உன்னையவன் [1]எண்ணாமல் கொன்றிடுவான்* 427

*என்றே பெருமாள் இயல்விசைய னுக்குரைக்க*

சு. சொல் : 1 யென்னாமல் கொண்டுயிடுவேன்.

**Kaṇṇaṉ 'nī ippōtu avaṉaik kollāviṭil avaṉ uṉṉaik kolvāṉ' eṉal)**

*antavurai kēṭṭu āyaṉār tāṉciṉantu*

*tappāmal nīyivaṉait tāṉēkol lātiruntāl*
*ippōtu uṉṉaiyavaṉ eṇṇāmal koṉṟiṭuvāṉ*

*eṉṟē perumāḷ iyalvicaiya ṉukkuraikka*

**Kriṣṇaṉ declaring that the boy will kill Aruccuṉaṉ if he does not kill him first**

The noble Lord grew angry and said to Vicayaṉ:
'If you fail to kill him now, surely then
He will take your life.'

**(விசகர்ணன் விசயனை இகழ்தல்)**

*சென்றே [1]விசகர்ணன் செப்பினா னப்போது* 428
*நீயோயென் னய்யருக்கு நிகரான [2]சேவுகன்காண்*

பேடிப் [3]பயலேநீ பெண்ணுமல்ல ஆணுமல்ல 429
சாடிப் பிடித்துத் தலைதிருகிப் போட்டிருவேன்
என்று [4]விசகர்ணன் இவ்வார்த்தை தானுரைக்க 430

428. செப்பினான் - கூறினான். 429. சேவுகன் - வீரன். பேடி - அலி 430 சாடி - அடித்து.

சு. சொல் : 1. விஷகர்ணன் 2 சேவுகன்ங்காண் 3 பயலே நீயி 4 விஷகர்ணன்

## *(Vicakarṇaṉ Vicayaṉai ikaḻtal)*

*ceṉṟē vicakarṇaṉ ceppinā ṉappōtu*
*nīyōyeṉ ṉayyarukku nikarāṉa cevukaṉkāṇ*
*pēṭip payalēnī peṇṇumalla āṇumalla*
*cāṭip piṭittut talaitirukip pōṭṭiruvēṉ*
*eṉṟu vicakarṇaṉ ivvārttai tāṉuraikka*

## Vicakarṇaṉ ridiculing Vicayaṉ

Mockingly Vicakarṇaṉ, taunted Vicayaṉ thus:
'Are you a hero equal to my sire?
You are neither male nor female! you are a eunuch
After all. I shall beat you up and wrench your head
And throw it on the ground'swore Vicakarṇan

## (கண்ணன் சினமடைதல்)

பேடி யென்றவார்த்தை பெருமாள் அறிந்துகொண்டு
வாடி [1]மனந்தளர்ந்து வாள்விசையா நீயிவனை 431
கொன்றா [2]லொழியக் குறுமை யடங்காது
[3]கொன்றுவிடு மென்றவுடன் கோல விசகர்ணன் 432

432. குறுமை - சிறுமை, கேவலம். அடங்காது - தீராது.

சு. சொல் : 1 மனந்தளன்று 2. லொளியக் குருமை 3. கொண்டுவிடுறு

## *(Kaṇṇaṉ ciṉamaṭaital)*

*pēṭi yeṉṟavārttai perumāḷ aṟintukoṇṭu*
*vāṭi maṉantaḷarntu vāḷvicaiyā nīyivaṉai*
*koṉṟā loḻiyak kuṟumai yaṭaṅkātu*
*koṉṟuviṭu meṉṟavuṭaṉ kōla vicakarṇaṉ*

### Krisṇaṉ growing angry

On hearing Vicakarṇaṉ call Aruccuṉaṉ a eunuch,
Krisṇaṉ was upset and angrily ordered Vicayaṉ:
'Unless you kill this presumptuous fellow
Our disgrace will not be wiped out'.

*(விசகர்ணன் விசயன் முடியை அறுத்தல்)*

*சென்று பொருதான் [1]திசைகளெட்டும் தானதிர*
*வாய்த்த [2]பகழிஒன்று மன்னன்மேல் தான்தொடுத்தான்* 433

*ஏத்தரிய [3]பாணம் இமைத்து விழிக்குமுன்னே*
*[4]பார்த்தனைத் தேடிப் [5]பதறி முடியறுக்க* 434

433. பகழி - அம்பு 434 ஏத்தரிய - புகழுக்கடங்காத பாணம் - அம்பு

சு. சொல் · 1 திசைகளெட்டும்ந் 2 பகளி 3 பானம் இமைத்து முளிக்கு 4 பாத்தனை 5 பதரி

### *(Vicakarṇaṉ Vicayaṉ muṭiyai aṟuttal)*

*ceṉṟu porutāṉ ticaikaḷeṭṭum tāṉatira*
*vāytta pakaḻioṉṟu maṉṉaṉmēl tāṉtoṭuttāṉ*

*ēttariya pāṇam imaittu viḻikkumuṉṉē*
*pārttaṉait teṭip pataṟi muṭiyaṟukka*

### Vicakarṇaṉ cutting off Aruccuṉaṉ's crown

Handsome Vicakarṇaṉ fought so fiercely
That the directions eight shook in fear!
Choosing a powerful dart he shot it at Aruccuṉaṉ:
The renowned arrow in the wink of an eye
Went towards Aruccuṉaṉ and cut off his crown!

*(அருச்சுனனின் அச்சம்)*

*சென்றதுவே பாணம் திகைத்தானே போர்விசையன்*
*இன்று [1]பிழைத்தோமென் றேங்கியே [2]நிற்கலுற்றான்* 435

*ஆயனா ரோடே அருச்சுனனு மப்போது*
*நாயகமே இப்புதுமை நானறியச் சொல்லுமென்றான்* 436

சு. சொல் : 1 பிளைத்தோமென் 2. நிக்கலுற்றான்

### *(Aruccuṉaṉiṉ accam)*

*ceṉratuvē pāṇam tikaittāṉē pōrvicaiyaṉ*
*iṉṟu piḻaittōmeṉ ṟēṅkiyē niṟkaluṟṟāṉ*

*āyaṉā rōṭē aruccuṉaṉu mappōtu*
*nāyakamaē ipputumai nāṉaṟiyac collumeṉṟāṉ*

### Aruccuṉaṉ becomes afraid

Warlike Vicayaṉ stood dazed at this
And thanked God for his escape: he asked Kriṣṇaṉ:
'My Lord, can you explain this wonder?'

### *(கண்ணன், மீண்டும் விசகர்ணனைக் கொல்லக் கட்டளையிடல்)*

*ஆதித்த னீன்ற அருள்கர்ணன் புத்திரன்*
*நீயிவனைக் [1]கொன்றுவிடு நீவிசையா தப்பவென்றால்* 437

*சு. சொல் : 1. கொண்டுவிடு*

### *(Kaṇṇaṉ, mīṇṭum Vicakarṇaṉaik kollak kaṭṭaḷaiyiṭal)*

*ātitta nīṉra aruḷkarṇaṉ puttiraṉ*
*nīyivaṉaik koṉṟuviṭu nīvicaiyā tappaveṉṟāl*

### Kriṣṇaṉ ordering Aruccuṉaṉ again to kill Vicakarṇaṉ

'He is the darling son of gracious Karṇaṉ,
Himself the son of the Sun-God, O Vicaya!
If you want to save yourself today,
You must straightway kill this dangerous boy'.

### *(விசயன் மனமிரங்கி விசகர்ணனைக் கெஞ்சுதல்)*

*யென்ற [1]பொழுதே இயல்விசையன் [2]தான்பார்த்து*
*அண்ணருட மைந்தா [3]அழகொளியே யென்மகனே* 438

*கண்ணே மணியே கரும்பே கருவலமே*
*அய்யோ இதுபாவம் அப்பனே என்றுரைத்தார்* 439

*அப்போது [4]பார்த்தன் அவனைமிகக் கொண்டாடி*
*செப்பரிய [5]குஞ்சரமே தேசமெல்லா [6]முந்தனுக்கு* 440

ஒப்புடனே தந்துவுன் [7]தந்தையரைத் தாள்பணிவோம்
வாதைப் படவேண்டாம் வண்மையுள்ள புத்திரனே 441

439 கருவலமே - மிக்க வலிமை உள்ளவனே 440. குஞ்சரம் - யானை. 441 வாதை - துன்பம். லச்சை - வெட்கம்.

சு.சொல் : 1 பொளுதே 2. தான்ம்பார்த்து 3. அளகொளியே. 4. பாத்தன் 5 குஞ்சறமே 6 முந்தணக்கு 7 தந்தையரே

## (Vicaiyan̲ man̲amiraṅki Vicakarṇan̲aik keñcutal)

yen̲ra polutē iyalvicaiyan̲ tān̲pārttu
aṇṇaruṭa maintā alakoḷiyē yen̲makan̲ē

kaṇṇē maṇiyē karumpē karuvalamē
ayyō itupāvam appan̲ē enruraittār

appōtu pārttan̲ avan̲aimikak koṇṭāṭi
cepperiya kuñcaramē tēcamella muntan̲ukku

opputan̲ē tantuvun̲ tantaiyarait tāḷpaṇivōm
vātaip paṭavēṇṭām vaṇmaiyuḷḷa puttiran̲ē

## Vicayan̲ pleading with Vicakarṇan̲ to return

Renowned Aruccun̲an̲ then spoke to the boy-hero:
'O Son of my brother! lovely light! my own son!
Dear as the pupil of my eye! sweet as sugarcane!
Hero of exceeding might! This is too much, my boy!'
With such endearing terms Pārttan̲ pleaded with him:
'O young tusker brave! heroic beyond description!
We shall give you gladly the empire entire,
O bountous child! do not invite trouble!'

(விசகர்ணன் சீற்றம்)

[1]யென்றழைத்த போது இயல்கர்ணன் தான்சீறி
[2]சற்றுமே லச்சையில்லை தான்பேடி உங்களுக்கு 442

மன்னன் வணங்கா மணிமுடியோன் தானிருக்க
பொன்னின் சிலையிருக்க புகழ்வேந்தர் தானிருக்க 443

*கர்ண ரிருக்க அவர்கய்யில் சிலையிருக்க*
*[3]கொன்று பஞ்சவரைக் [4]கோடேறி நாடழித்து* 444

*வென்றிடுவே னென்று விசகர்ணன் தான்பொருதான்*
*மெய்யே சலித்து விசையன் நிற்குமப்போ* 445

*443 சிலை - வில். 444. கோடு - எல்லை. கோடேறி - எல்லைகடந்து.*

*சு.சொல் : 1. யென்றளைத்த 2. சத்துமே லட்சை 3. கொண்டு 4 கோடேரி நாடளித்து*

### (Vicakarṇaṉ ciṟṟam)

*yeṉṟaḻaitta pōtu iyalkarṇaṉ tāṉciṟi*
*caṟṟumē laccaiyillai tāṉpēṭi uṅkaḷukku*

*maṉṉaṉ vaṇaṅkā maṇimuṭiyōṉ tāṉirukka*
*poṉṉiṉ cilaiyirukka pukaḻvēntar tāṉirukka*

*karṇa rirukka avarkayyil cilaiyirukka*
*koṉṟu pañcavaraik kōṭēṟi nāṭaḻittu*

*veṉṟiṭuvē ṉeṉṟu vicakarṇaṉ tāṉporutāṉ*
*meyyē calittu vicaiyaṉ niṟkumappō*

### Vicakarṇaṉ's wrath

As thus Aruccuṉa made the generous offer to Vicakarṇaṉ,
He retorted furiously:' Have you no sense of shame,
You who are neither male nor female?
We have all assembled here to destroy you,
The unbowing king of kings with his golden bow,
And famous chieftains of the land: there is besides,
Karṇaṉ, my father and the bow in his hand: we will slay
All of you or send you out of the country:
Victory is ours.' And Vicakarṇaṉ resumed his fight,
As Aruccuṉaṉ stood bewildered before the boy-hero.

### (துரியோதனன் விசயன் பேச்சைக் கேளாதே யெனல்)

*அப்போது சொல்லுவான் '[1]அரியதுதுரி யோதனன்தான்*
*இப்போது தம்பி இவன்பேச்சைக் கேளாதே* 446

*சு.சொல் : 1. அரியதிரியோதனந்தான்*

### *(Turiyōtanan̲ Vicaiyan̲ pēccaik kēḷātē yen̲al)*

*appōtu colluvān̲ ariyaturi yōtanan̲tān̲*
*ippōtu tampi ivan̲pēccaik kēḷātē*

**Turiyōtanan̲ advising the boy not to listen to Vicayan̲.**

And Turiyōtanan̲ came up to the boy and warned him:
'My son! do not be carried away by Aruccunan̲'s soft words'.

### *(விசகர்ணன் விசயனைக் கடுமையாய் எதிர்த்தல்)*

*யென்றுரைக்க மன்னன் இயல்விச கர்ணனுந்தான்*
*ஒருநொடிக்கு முன்னேதான் உங்களையும் கொல்வனென்று* 447

*நடந்தான் விசகர்ணன் நல்விசையன் தன்மேலே*
*[1]அடர்ந்தான் புலிபோலே அரசர் மனம்நடுங்கி* 448

*அடுதான் சமர்க்களத்தில் அப்படைகள் தத்தளிக்க*
*விடுத்தான் சரங்கள்தனை விண்ணிலுள்ளோர் கொண்டாட* 449

*அம்புதான் வார அதுர்த்திகண்டு போர்விசையன்*
*வெம்பி நடுங்கி விதியேயெனப் போர்விசையன்* 450

*கூத்தம்புக் குள்ள கொடுமைதனைக் கண்டிருந்து*
*[2]பார்த்தனுக்குச் சற்றே பயம்வந்து தோன்றியதே* 451

*448 அடர்ந்தான் - பாய்ந்தான். 449 சமர்க்களம் - போர்க்களம். சரம் - அம்பு. 450. அதுர்த்தி அதிர்ச்சி என்பதன் பேச்சு வழக்கு. வெம்பி - வாடி 451. கூத்தம்பு - கூற்றம்பு - எமன் போன்ற அம்பு பயம் - அச்சம்.*

*சு. சொல் : 1. அடந்தான் 2 பாத்தனுக்கு*

### *(Vicakarṇan̲ Vicaiyan̲aik kaṭumaiyāy etirttal)*

*yen̲ruraikka man̲n̲an̲ iyalvica karṇan̲untān̲*
*orunoṭikku mun̲n̲ētān̲ uṅkaḷaiyum kolvan̲en̲ru*

*naṭantān̲ vicakarṇan̲ nalvicaiyan̲ tan̲mēlē*
*aṭarntān̲ pulipōlē aracar man̲amnaṭuṅki*

*aṭuttān̲ camarkkaḷattil appaṭaikaḷ tattaḷikka*
*viṭuttān̲ caraṅkaḷtan̲ai viṇṇiluḷḷor koṇṭāṭa*

*amputān vāra aturttikaṇṭu pōrvicaiyan*
*vempi naṭuṅki vitiyēyenap pōrvicaiyan*

*kūttampuk kuḷḷa koṭumaitanaik kaṇṭiruntu*
*pārttanukkuc carrē payamvantu tōnriyatē*

### Vicakarṇan opposing Aruccunan furiously

Warned by the king, Vicakarṇan swore:
'I will kill you all'. So saying
He charged against Aruccunan like a tiger fierce.
He despatched arrow after arrow swift against the foe,
At which the denizens of the heaven applauded,
Vicayan himself being shocked at their speed,
And their destructive power, lethal as Death itself:
He stood dismayed at the fury of the boy's attack.

### *(அருச்சுனன் மீண்டும் கெஞ்சுதல்)*

*அண்ணர் [1]பெற்ற யென்மகனே [2]அழகுடைய புத்திரனே*
*கண்ணே மணியே கலங்காத [3]சேவகனே* 452

*[4]நின்று வருந்தாதே நின்னுயிரைப் போக்காதே*
*இன்றுநான் உன்னுடனே [5]எதிர்க்கவுந்தான் நீதியுண்டோ* 453

*வரிசையுள்ள அண்ணர்[6]பெற்ற வாழ்வேமதி முகனாரே*
*[7]துரியோதனன் பேச்சில் தியங்காதே [8]கண்மணியே* 454

*[9]வந்தெதிர்த்து யென்கையிலே மாளாதே யென்மகனே*
*அந்தரத்தில் [10]தேவர்க்கும் அரனார்க்கு [11]மேறாது* 455

*உன்தகப்ப னோடே உடன்கூடி [12]வாழுமென்றான்*

*454. மதி - சந்திரன் தியங்காதே - மயங்காதே. 455. அந்தரம் - வானுலகம் ஏலாது - ஏற்காது.*

*சு.சொல் : 1 பெத்த 2. அளகுடைய 3 சேவுகனே 4. னிண்று 5. எதுக்கவும்ந்தான் 6. பெத்த வாள்வே 7 திரியோதனன் 8- கன்மனியே 9. வந்தெதுத்து 10. தேவர்களும் 11 மேறாது 12 வாளுமென்றான்*

### *(Aruccunan mīṇṭum keñcutal)*

*aṇṇarpeṟṟa yeṉmakaṉē aḻakuṭaiya puttiraṉē*
*kaṇṇē maṇiyē kalaṅkāta cēvakaṉē*

*ninṟu varuntātē ṉiṉṉuyiraip pōkkātē*
*inṟunāṉ uṉṉuṭaṉē etirkkavuntāṉ nītiyuṇṭō*

*varicaiyuḷḷa aṇṇarpeṟṟa vāḻvē matimukaṉārē*
*turiyōtaṉaṉ pēccil tiyaṅkātē kaṇmaṇiyē*

*vantetirttu yeṉkaiyilē māḷātẹ yeṉmakaṉē*
*antarattil tēvarkkum araṉārkku mēlātu*

*uṇtakappa nōṭē uṭaṉkūṭi vāḻumeṉṟāṉ*

**Aruccuṉaṉ again pleading with the boy.**

'O darling son, sired by my brother Karṇaṉ!
Lovely child, dear as my eyes! Young lord!
Do not stand here opposing us:
You will only suffer: you will surely lose your life.
How can I now fight against you? Is it fair or just?
O our very life, born to our famous elder brother!
O son with a face lovely like the moon!
Don't be carried away by Turiyōtaṉaṉ's words.
Darling boy! do not oppose me and die at my hands.
O my son! It won't be approved of by the celestials!
Or by Lord Civaṉ himself! Instead run back
To your loving father and live!'

**(தருமர் விசகர்ணனைக் கெஞ்சுதல்)**

தன்மர் நடந்துவந்து தமையன் மகனைப்[1]பார்த்து 456

[2]மென்மையுள்ள அண்ணர்[3]பெற்ற மேலான போர்வடிவே
[4]கர்ணவில்லி பெற்ற கரும்பே கருநிதியே 457

யென்னுடைய நாடும் [5]இராச்சியமும் நான்தாரேன்
பொன்னைப்போல் மேனி [6]புழுதி பிரளாத 458

வன்னச் சிறுவடிவே வாகான யென்மகனே
உன்னுடைய தந்தைபக்கல் ஓடிப்போ யென்மகனே 459

என்றுதன்மர் தானும் இன்பமுடன் உரைத்தார்

456. தமையன் - அண்ணன். 459 பக்கல் - பக்கம்

சு.சொல் : 1. பாத்து 2. மென்னமையுள்ள 3. பெத்த 4. கர்ன்ன வில்லி 5. ராட்சியமும் 6. புளுதி

### *(Tarumar Vicakarṇaṉaik keñcutal)*

*taṉmar naṭantuvantu tamaiyaṉ makaṉaippārttu*

*meṉmaiyuḷḷa aṉṉarpeṟṟa mēlāṉa pōrvaṭivē*
*karṇavilli peṟṟa karumpē karuṇitiyē*

*yeṉṉuṭaiya nāṭum rācciyamum nāṉtārēṉ*
*poṉṉaippōl mēṉi puḻuti piraḷata*

*vaṉṉac ciṟuvaṭivē vākāṉa yeṉmakaṉē*
*uṉṉuṭaiya tantaipakkal ōṭippō yeṉmakaṉē*

*eṉṟutaṉmar tāṉum iṉpamuṭaṉ uraittār*

### Tarumaṉ pleading with Vicakarṇaṉ

Tarumaṉ walked up now and spoke to his nephew:
O warlike boy, sired by my noble brother!
Sweet child of that great bowman Karṇaṉ!
Priceless treasure to all of us! My kingdom
And sovereignty I will give you. O lovely one
With a youthful form bright as virgin gold!
Handsome child, run back to your father's side.'
Thus Tarumaṉ spoke kind words to persuade the boy.

### (வீமன் விசகர்ணனைக் கெஞ்சுதல்)

அந்நேரம் வீமன் அண்ணர்மக னைப்[1]பார்த்து 460

ஆதிப் [2]பழம்பொருளே [3]அழகுடைய யென்மகனே
வேதித்த மன்னவரை [4]வெற்றிகொள்ளும் புத்திரனே 461

கர்ணச் சிறுவடிவே கண்மணி யென்மகனே
சொர்ண முடிக்குவல்ல துய்யதொரு ஓவியமே 462

[5]துரியோ தனன்வரினும் [6]வெல்லவொண்ணா திப்படையை
அரிய மகனேவுன் ஆண்மைத்தனைக் காட்டாதே 463

விரும்பிப் பொருதாதேஉன் [7]வீரியத்தைக் காட்டாதே
திரும்பிப்போ அண்ணரிடம் செல்லா தெனவுரைத்தார் 464

*461. வேதித்த - வேறுபட்ட. 462. சொர்ண முடிக்குவல்ல - பொன் மகுடத்துக்கேற்ற. 464. பொருதாதே - போர் செய்யாதே. வீரியம் - வீரம்*

*சு.சொல் : 1 பாத்து 2 பளம்பொருளே 3 அளகுடைய 4. வெத்தி 5 திரியோத 6 செல்ல 7 வீறியத்தை*

### *(Vīmaṉ Vicakarṇaṉaik keñcutal)*

anṉēram vīmaṉ aṇṇarmaka ṉaippārttu

*ātip paḻamporuḷē aḻakuṭaiya yeṉmakaṉē*
*vētitta maṉṉavarai veṟṟikoḷḷum puttiraṉē*

*karṇac ciṟuvaṭivē kaṇmaṇi yeṉmakaṉē*
*corṇa mutikkuvalla tuyyatoru ōviyamē*

*turiyō taṉaṉvariṉum vellavoṇṇā tippaṭaiyai*
*ariya makanēvuṉ āṇmaitaṉaik kāṭṭātē*

*virumpip poruṭātēuṉ vīriyattaik kāṭṭātē*
*tirumpippō aṇṇariṭam cella teṇavuraittār*

### Vīmaṉ pleading with the boy

And vīmaṉ now came up and spoke to the boy:
'O dear son capable of conquering enemy kings!
Little image of great Karṇaṉ, O darling son!
Lovely as a painting fine! and worthy to wear
A crown of gold! This army cannot be defeated
Even by Turiyotaṉaṉ: Rare child! Don't try to show
Your manly courage here before us.
Leave off this love of battle.
Do not attempt to display your valour:
Go safely back at once to my brother.'

### *(நகுலன் கெஞ்சுதல்)*

*பரிநகுலன் வந்துநின்று பாலன் தனைப்பார்த்து*
*சருவிப்பொர வேண்டாம்உன் சாமர்த்தியம் வேண்டாம்*

*உகப்பேத்தி உங்களுக்கு ஒக்கவே வந்ததுகாண்*
*[2]சிறிது பெரிதென்று தெரியுமோ [3]பார்த்தனம்பு*

தகப்பனுடன் வந்துபோர் தானேவி விட்டவரார் 466

இந்தப்படை யில்பொருத எவர்தான் [4]பிழைத்தார்கள்
சந்திரனும் அந்தகனும் தாவும் தேவர்களும் 467

வந்து பொருதாலும் மாய்க்குமே [5]பார்த்தனம்பு
எந்தன் மகனே அண்ணன்பெற்ற கண்மணியே
இந்தப் படைப்போரில் [6]இறவாதே என்மகனே 468

செப்பமுள்ள அண்ணனிடம் செல்லா யெனவுரைத்தார் 469

465 பரி - குதிரை. பரிநகுவன் - குதிரை பற்றிய அறிவில் தேர்ந்த நகுலன். பாலன் - குழந்தை - கர்ணனின் மகன் விசகர்ணன். சருவி - பொருந்தி. சாமர்த்தியம் - திறமை. 466. உகப்பேத்தி - யுகப்பெயர்ச்சி - யுகமுடிவு காலம். ஒக்கவே - ஒன்றாக; ஒரே தடவையில். 467. பொருத - போர்செய்த. அந்தகன் - குருடன்; இங்கு இயமன். 467. மாய்க்கும் - அழிக்கும். பார்த்தனம்பு - அருச்சுனனின் அம்பு.

சு.சொல் : 1. பாத்து 2 சிரிது பெரிதுதெண்டு 3,5 பாத்தநம்பு 4. பிளைத்தனர்கள் 6. இரவாதே.

### *(Nakulaṉ keñcutal)*

*parinakulaṉ vantuniṉṟu pālaṉ taṉaippārttu*
*caruvippora vēṇṭāmuṉ cāmart tiyamvēṇṭām*

*ukappetti uṅkaḷukku okkavē vantatukāṇ*
*ciritu periteṉṟu teriyumō pārttaṉampu*
*takappaṉuṭaṉ vantupōr tāṉēvi viṭṭavarār*

*intappaṭai yilporuta evartāṉ piḷaittārkaḷ*
*cantiraṉum antakaṉum tāvum tēvarkaḷum*

*vantu porutālum māykkumē pārttaṉampu*
*entaṉ makaṉe aṇṇaṉpeṟṟa kaṇmaṇiyē*
*intap paṭaippōril iṟavātē eṉmakaṉē*

*ceppamuḷḷa aṇṇaṉiṭam cellā yeṉavuraittār*

### Nakulaṉ pleading with Vicakarṇaṉ

Now, Nakulaṉ adept at equine lore, pleaded thus:
'There is no need to fight, my boy!
No need to prove your mettle in the field.
The end of the aeon has come for all of you

Can Pārttaṉ's dart distinguish between small and great?
Who has so far come to fight against his own father?
And who has survived after facing this army?
Parttan's arrow will destroy, Cantira, Yama,
And all the supernals if they oppose us.
O my darling son! dear one sired by my brother!
Do not lose your life in this battle:
Go safely back now to my noble brother, Karṇa!'

***(சகாதேவன் வேண்டுதல்)***

*சகாதேவன் வந்துநின்று தமையன்மக [1]னைப்பார்த்து*
*ஆகாத இந்தவினைக் கார்தான் [2]பிழைத்தார்கள்* 470

*நீயும்மடி யப்போறாய் நின்தகப்ப னும்[3]மடிவான்*
*பாயும் புலிபோலே படப்போறா ருன்தகப்பன்* 471

*வாட்ட மடித்து மடியாதே யென்மகனே* 472

*470. இந்தவினைக்கு + ஆர்தான் பிழைத்தார்கள். ஆர் - யார்; யார் பிழைத்தார்கள்? ஒருவரும் பிழைக்கவில்லை என்பது பொருள். 471. மடியப் போறாய் - சாகப் போகிறாய் மடிவான் - சாவான். படப்போறார் - துன்பப் படுவார்; இறப்பார்.*

*சு.சொல் : 1. னேப்பாத்து 2 பிளைத்தார்கள் 3. மடுவான்*

***(Cakātēvaṉ vēṇṭutal)***

*cakātēvaṉ vantuniṉṟu tamaiyaṉmaka ṉaippārttu*
*ākāta intaviṉaik kārtāṉ piḻaittārkaḷ*

*nīyummaṭi yappōṟay niṉtakappa ṉummaṭivāṉ*
*pāyum pulipōlē paṭappōṟā ruṉtakappaṉ*

*vāṭṭa maṭittu maṭiyātē yeṉmakaṉē*

**Cakātēvaṉ imploring Vicakarṇaṉ**

And then Cakātevaṉ came up to his brother's son
And said to him; 'O who can survive his fate?
You are going to die and also your father;
You are going to see your father slain like
A charging tiger. O my son! do not struggle
Only to lose your life!'

### (விசகர்ணன் பதில்)

*[1]வெற்றி விசகர்ணன் மிகச்சினந்து யேதுசொல்வான்*
*சற்றும் [2]லச்சையில்லை சகாதேவா உங்களுக்கு* 473

*மன்னருக்கும் மன்னன் வணங்காமுடி யோனிருக்க*
*[3]கர்ணய்யா தானிருக்க அவர்[4]கையில் சிலையிருக்க* 474

*[5]கொன்று விடுவேனான் [6]கொற்றவனே உங்களையும்*
*வென்றிடுவே னென்று விசகர்ணன் தான்பொருதான்* 475

*473. லச்சை - வெட்கம். 474. வணங்கா முடியோன் - யாருக்கும் அடி பணியாத தலையை யுடையவன் - துரியோதனன். சிலை - வில் 475. கொற்றவன் - அரசன். பொருதான் - போர் செய்தான்*

*சு.சொல் : 1. வெத்தி 2. லட்சையில்லை 3. கர்ன்னய்யா 4. கய்யில் 5 கொண்டு 6. கொத்தவனே*

### *Vicakarṇaṉ patil*

*veṟṟi vicakarṇaṉ mikaccinantu yētucolvāṉ*
*caṟṟum laccaiyillai cakātēvā uṅkaḷukku*

*maṉṉarukkum maṉṉaṉ vaṇaṅkāmuṭi yōṉirukka*
*karṇayyā tāṉirukka avarkaiyil cilaiyirukka*

*koṉṟu viṭuvēṉāṉ koṟṟavaṉē uṅkaḷaiyum*
*veṉṟituvē ṉeṉṟu vicakarṇaṉ tāṉporutāṉ*

### Vicakarṇaṉ's reply

Victorious Vicakarṇaṉ in anger made reply:
'Have you no sense of shame, Cakātēva?
On our side we have the king of kings with unbowing head
And also my father Lord Karṇaṉ with his mighty bow:
O king! I shall surely kill you and defeat all of you.'
Swearing thus Vicakarṇaṉ continued to do battle.

### (கண்ணன் சினம்)

*அந்நேரம் மாயன் அருச்சுனனைத் [1]தானழைத்து* 476
*என்ன கெடுவாய் [2]இனிஉரன் பேசாதே*

*உன்னை நிலைகுலைத்து [3]உன்னுயிரைக் கொன்றிடுவேன்* 477
*கொன்றுஓட வுன்னைவசை கூறினான் கண்டாயே*

இன்றுகொல்லப் போறான் இனிப்பார் அவன்சமத்தை 478

செருவில் [4]விசகர்ணன் சீரான வன்சமத்தை
[5]உரகக் கணைதொடுத்தால் [6]உகமுடிநா ளின்றெனவே 479

[7]அந்நேரம் மாயன் அவன்கணையைத் தான்தடுத்து
[8]பாம்பினுட [9]குட்டிக்குப் பால்வார்த்துத் தான்[10]வளர்த்தாய் 480

ஒப்புடனே பாம்பு உடனே கடியாதோ
அப்படிப் போலே அருள்விசையா இப்போதோ 481

ஆமா விசையா அறியாமல் சொன்னாயே
சர்ப்பத்தின் குட்டியைத் தலைதெறிக்க யெய்யுமென்றார் 482

476. மாயன் - கண்ணன். 477. உரம் - வலிமை. 478. வசை - இகழ்ச்சிச் சொல். சமத்து - திறமை. 479. உரகக்கணை - பாம்புக்கணை; நாகாஸ்திரம். கணை - அம்பு.

சு.சொல் : 1. தானளைத்து 2 யினிஉரன் 3 உண்ணுயிரைக் கொண்டுறிடுவேன் 4. விஷகறனன் 5. உரோக 6. யுகமுடி 7 அன்னேரம் 8 பாம்பிண்ணுட 9. குட்டிக்கி 10. வளத்தாய்.

### (Kaṇṇaṉ ciṉam)

*aṉṉēram māyaṉ aruccuṉaṉait tāṉaḻaittu*

*eṉṉa keṭuvāy iṉiuraṉ pēcātē*
*uṉṉai nilaikulaittu uṉṉuyiraik koṉṟiṭuvēṉ*

*koṉṟuōṭa vuṉṉaivacai kūṟiṉāṉ kaṇṭāyē*
*iṉṟukollap pōṟāṉ iṉippār avaṉcamattai*

*ceruvil vicakarṇaṉ cīrāṉa vaṉcamattai*
*urakak kaṇaitoṭuttāl ukamuṭinā ḷiṉṟeṉavē*

*aṉṉēram māyaṉ avaṉkaṇaiyait tāṉtaṭuttu*
*pāmpiṉuṭa kuṭṭikkup pālvārttut tāṉvaḷarttāy*

*opputaṉē pāmpu utaṉē kaṭiyātō*
*appaṭip pōlē aruḷvicaiyā ippōtō*

*āmā vicaiyā aṟiyāmal coṉṉāyē*
*carppattiṉ kuṭṭiyait talaiteṟikka yeyyumeṉṟār*

### Krisṇaṉ's anger

Then the Lord called to Aruccuṉaṉ and spoke
Thus to him; 'Did you not hear the boy abusing you,
Swearing to smash you and take your life?
Don't talk hereafter about your valour!
You will see today the boy's ability in the battlefield.
If he were to shoot the serpent-dart, it will mean
The end of the aeon! you are fostering
The young one of an adder, feeding it with milk!
Will not the grown-up snake bite you at once?
Therefore gracious Vicayaṉ, instead of pleading
With the little one as you are all doing now,
Cut off the young snake's head right away.'

*(பார்த்தன் அம்பு விடுதல்; விசகர்ணன் தலை அறுபடுதல்))*

*பட்டால் படுதென்று பார்த்தன் சரமெடுத்து*
*விட்டான் ஒருகணையை [1]விசகர்ணன் தன்மேலே* 483

*இந்நேரம் தன்னில் இவன்கர்ணன் தன்தலையை* 484

*குளந்தனிலே நின்றதொரு [2]கொற்றவனார் தன்கையிலே*
*இளந்தலையைத் தானறுத்து இப்போதே போடுமென்றார்* 485

*என்று பெருமாள் ஈதுரைக்கத் தான்கேட்டு*
*வென்றியுள்ள மாயவரே விமலரே நீர்சாட்சி* 486

*என்பேரில் [3]குற்றமில்லை ஈசுபரரே சாட்சியென்று* 487

*தொட்டுவிட்டார் ஒருகணையைச் சொல்லி அருச்சுனனும்*
*பட்டுருவத் தொட்டகணை பாலன் தலையறுத்துத்* 488
*திட்டெனவே சென்று தேவரெல்லாம் தான்காண*

*போட்டதுவே கர்ணன் [4]புகழ்பெரிய [5]கைதனிலே* 489

*தலையறுத்து [6]அம்புசென்று தான்போட்டு [7]வந்ததற்பின்* 490

*[8]ஏரி குளத்தருகே [9]ஏற்றமுள்ள கர்ணனுந்தான்*
*கூவி [10]அழுது [11]குழல்விரித்தார் அம்மானை* 491

*486. விமலர் - குற்றமற்றவர் 488. தொடுதல் - எய்தல். 491. குழல் - தலைமயிர். 493. பொருதி - போர்செய்து. வாணாள் - வாழ்நாள்.*

*சு.சொல் : 1. விசகறனன் 2. கொத்தவனார் 3. குத்தமில்லை 4. புகள்பெரிய 5. கயிதனிலே 6. அன்புசென்று 7. வந்ததற்பின் 8. ஏறி 9. ஏத்தமுள்ள 10 அளுது 11. குளல் விரித்தார்*

**(Pārttaṉ ampu viṭutal; Vicakarṇaṉ talai aṟupaṭutal)**

*paṭṭāl paṭuteṉṟu pārttaṉ carameṭuttu*
*viṭṭāṉ orukaṇaiyai vicakarṇaṉ taṉmēlē*

*innēram taṉṉil ivaṉkarṇaṉ taṉtalaiyai*

*kuḷantaṉilē niṉṟatoru koṟṟavaṉār taṉkaiyilē*
*iḷantalaiyait tāṉaṟuttu ippōtē pōṭumeṉṟār*

*eṉṟu perumāl īturaikkat tāṉkēṭṭu*
*veṉṟiyuḷḷa māyavarē vimalarē nīrcāṭci*

*eṉpēril kuṟṟamillai īcupararē cāṭciyeṉṟu*
*toṭṭuviṭṭār orukaṇaiyaic colli aruccuṉaṉum*
*paṭṭuruvat toṭṭakaṇai pālaṉ talaiyaṟuttut*

*tiṭṭeṉavē ceṉṟu tēvarellām tāṉkāṇa*
*pōṭṭatuvē karṇaṉ pukaḻperiya kaitaṉilē*

*talaiyaṟuttu ampuceṉṟu tāṉpōṭṭu vantataṟpiṉ*

*ēri kuḷattarukē ēṟṟamuḷḷa karṇaṉuntāṉ*
*kūvi aḻutu kuḻalvirittār ammāṉai*

**Pārttaṉ shooting his arrow at the boy**

And taking a fine arrow Pārttaṉ sent it
Speeding against Vicakarṇaṉ, resigning himself
To the situation. Kriṣṇaṉ now directed Aruccuṉaṉ
To drop the young head into the hands of king Karṇaṉ
As he stood beside a pond. And Aruccuṉaṉ
Much disturbed and unwilling, did as ordered,
Saying, 'Victorious Lord, Immaculate one!
You are witness to this! No blame can attach to me;

Iswara be my witness!', Aruccunan cut off the head
Of the boy-hero and the arrow carried it swiftly
And dropped it in the mighty hands of Karnan of repute.
(Ammānai)

*(கர்ணன் 'கொன்றவர் யார்' என்றும், 'அருச்சுனனுக்கு இரக்கமிலையோ'என்றும் புலம்பல்)*

*அய்வரைக் [1]கொன்று அரசாள்வாய் [2]என்றிருந்தேன்*
*பொய்யோநம் [3]வாழ்வெனவே பூமிதனி [4]லேவிழுந்து* 492

*இந்தவினை [5]செய்தவனார் என்[6]மகனைக் [7]கொன்றவனார்*
*வந்து பொருதி [8]வாணாளை மாய்த்தவரார்* 493

*வானவர்கள் கூடி [9]வகுத்தெழுதி வைத்தசிலை*
*[10]ஞானக்கண் ணால்பார்த்து நயந்திருக்கு மப்போது* 494

*உத்த துணையென்று உகந்திருந்தேன் இத்தனை[11]நாள்*
*[12]அத்தனையூரு நீருமெந்தன் அய்யரே ஏகிவிட்டீர்* 495

*கொன்றானோ போர்விசையன் கோலத் [13]திருவடிவை*
*வென்றானோ வில்லி விருது [14]பறித்தானோ* 496

*விருது [15]பறித்தானோ [16]விசகர்ணா யென்மகனே* 497

*அன்றுமுதல் தேடி அருந்தவத்தால் வந்த மைந்தன்*
*இன்றுதான் கொன்றார் [17]எவரென்று சொல்லுமென்றார்* 498

*தன்ம நெறிவளரும் சகாதேவன் [18]சாத்திரங்கள்*
*இன்மைதன்னில் கொண்டால் ஈடேற்ற முண்டாமே* 499

*மாணிக்கம் போல்வடிவே வாகுடைய புத்திரனே*
*ஆணிப்பொன் மேனி அவலப் பிணமாச்சு* 500

*வானத்தின் மின்னொளியே வாய்த்தமதி கேளீரே*
*தெள்ளமுதே எந்தன் தித்திக்கும் [19]தீங்கரும்பே* 501

*அசையாத வீரா [20]அழகொளியே யென்மகனே*
*விசையனுன்னைக் [21]கொன்று வினைப்பயமும் [22]தீர்ந்தானோ* 502

*உன்னை [23]அவன்கொல்ல உடம்பட்டுதோ [24]கைகள்ரண்டும்*
*என்ன துணிவால் என்[25]மகனைக் கொன்றானோ* 503

*கர்ணன் மகனென்று கருத்தில் நினைக்கலையோ* 504

*பத்தியுடன் விசையன் பண்பாய் [26]மனமகிழ*
*சித்தப்பா என்றிலையோ சீர்பாதம் கண்டிலையோ* 505

*நல்லப்பா என்றிலையோ [27]நற்பாதம் கண்டிலையோ*
*வல்லதொரு மாயன் நமக்கு வினைநினைந்து* 506

*புத்தியத்த மாயனுரை [28]போர்விசையன் கேட்டானோ*
*சத்திரக்க மில்லாமல் தம்பியுன்னைக் கொன்றானோ* 507

*சன்மபகை யானாலும் சிறந்ததொரு மைந்தனென்றும்*
*உன்னையும் கொல்ல [29]உகந்ததோ கைகள்ரண்டும்* 508

*494 சிலை - எழுத்து. 495. உத்த - உற்ற. 496. கோலம் - அழகு. 497 விருது - புகழ். 499. வாகு - அழகு 500. ஆணிப்பொன் - பத்தரை மாற்றுத் தங்கம். மேனி - உடல். அவலப்பிணம் - அழுகைக்குரிய உயிரற்ற உடல். 507. சத்திரக்கம் - சற்று இரக்கம் - சிறிதேனும் கருணை.*

***சு.சொல்** : 1. கொண்டு 2. எண்றிருந்தன் 3. வாள்வெணவே 4. விளுந்து 5 செயிதவனார் 6 மகனெ 7. கொண்டவனார் 8 வானாலை 9. வகுத்தெளுதி 10. ஞாணக்கன்னால் பாத்து 11. னாள் 12. அத்தணை 13 திருவடிவே 14. 15 பரித்தானோ 16 விசைகர்ணனா 17. எவரெண்டு 18 சாஷ்திரங்கள் 19. தீன்ங்கரும்பே 20. அளகொளியே 21. கொண்டு 22. தீந்தானோ 23 அவன்ங்கொல்ல 24. கயிகள்ரெண்டும் 25. மகனெகொண்றானோ 26 மணமகிள. 27 நற்ப்பாதம் 28. போர் விசையன்ங் 29. உகந்துதோ கயிகள் ரெண்டும்.*

**(Karṇaṉ, 'koṉṟavar yār ' eṉṟum, 'Aruccuṉaṉukku irakkamillaiyō' eṉṟum pulampal)**

*ayvaraik koṉṟu aracāḷvāy eṉṟiruntēṉ*
*poyyōnam vāḷveṉavē pūmitaṉi lēviḻuntu*

*intaviṉai ceytavaṉār eṉmakaṉaik koṉṟavaṉār*
*vantu poruti vāṉāḷai māyttavarār*

*vāṉavarkaḷ kūṭi vakutteḻuti vaittacilai*
*ñaṉakkaṉ ṇālpārttu nayantirukku mappōtu*

*utta tuṇaiyeṉṟu ukantiruntēṉ ittaṇaināḷ*
*attaṉaiyūru nīrumentaṉ ayyarē ēkivittīr*

*koṉṟāṉō porvicaiyaṉ kōlat tiruvaṭivai*
*veṉṟāṉō villi virutu paṟittāṉō*

1182. பள்ளியறை - படுக்கையறை. 1185. துஞ்சும் - தூங்கும் மலரணை - மலர்ப்படுக்கை துய்ய - தூய. ஆசாரம் - பணிவிடை.

சு.சொல் 1 பள்ளியரை 2. கொண்டுயிருந்தேன் 3 திரமாய் 4 குளுந்து 5. உடன்ங்கூடி 6 வாள்ந்ததில்லை 7 துய்யமலற்

### (paḻḻiyaṟai ceṉṟatillai yeṉal)

paḻḻiyaṟai aṟiyēṉ paṭukkaimettai pōṭṭaṟiyēṉ

paḻḻiyum reṇṭāyp pārāṭṭik koṇṭiruntēṉ
orupōtum nāṉiruntu ottuviḻai yāṭavillai

teḻḻiyatōr vārttai tiṟamāy uraikkavillai
uḻḻam kuḻirntu utaṉkūṭi vāḻntatillai

tuñcum malaraṇaiyil tuyyamalar tūvavillai
añci aṭipaṇintu ācāram paṇṇavillai

### (வெற்றிலைபாக்கு தரவில்லையெனல்)

அடைக்காயும் வெள்ளிலையும் அருந்தக் குடுக்கவில்லை
மடக்கொடியே யென்று வருந்தி [1]அழைக்கவில்லை 1186

[2]குழைத்த பரிமணங்கள் [3]கூசாமல் பூசவில்லை
வளைந்தே ஒடுங்கி மரியாதம் பண்ணவில்லை 1187

1186 அடைக்காய் - பாக்கு. வெள்ளிலை - வெற்றிலை. 1187. பரிமணம் - வாசனைப்பொருள் சந்தனம், புனுகு, சவ்வாது போன்றவை மரியாதம் - மரியாதை, மதிப்பு.

சு.சொல் : 1 அளைக்க. 2 குளைத்த 3 கூசாமல்ப்

### (veṟṟilai pākku taravillaiyeṉal)

aṭaikkāyum veḻḻilaiyum aruntak koṭukkavillai
maṭakkoṭiyē yeṉṟu varunti aḻaikkavillai

kuḻaitta parimaṇaṅkaḻ kūcāmal pūcavillai
vaḻaintē oṭuṅki mariyātam paṇṇavillai

### (படுக்கையில் மலர்தூவவில்லை யெனல்)

முல்லை யரும்பு [1]முழுநீலம் தூவவில்லை
எல்லையில் நாகம் [2]இருவாட்சி தூவவில்லை 1188

மாதரியும் கூடப் பரப்பிப் படுக்கவில்லை

1188. நீலம் - நீலமலர் (நெய்தல், குவளை). நாகம், இருவாட்சி - மலர்கள்

சு.சொல் 1. முளுநீலம் 2 இருவாச்சி

**(paṭukkaiyil malartūvavillai yen̲al)**

*mullai yarumpu mul̲unīlam tūvavillai*
*ellaiyil nākam iruvāṭci tūvavillai*

*mātariyum kūṭap parappip paṭukkavillai*

**Pon̲n̲uruvi relating her own faults of omission**

And now did Pon̲n̲uruvi speak thus to the Five:
'I shall now list the faults I did commit
During my wedded life with my Lord;
Listen, O, garlanded Lord! I shall narrate
To you Five, as you stand with your armies vast,
All my failings, and omissions; shameful they are;
O you, born with my Lord as siblings!
From the day Lord Karṇan̲ took my hand in marriage
I had not gone to the bedchamber;
I had not spread his mattress on the bed;
I had not stayed together with him in joy!
No soft word and dear, I had spoken to him!
Never lived together, our hearts full of cheer!
Nor had strewn flowers pure on the bed!
Nor bowed at his feet, and shown respect due;
Betel-leaf and betel-nut to chew, I hadn't given!
Nor was I called an innocent liana!
I did not bedaub his body with fragrant unguents;
Nor bend in homage and bow before him;
On the bed, I had not strewn buds and blossoms
Of [1]*mullai*, [2]*nīlam*, [3]*nākam* and [4]*iruvāṭci*
She had not spoken freely to karṇan̲
Nor join him in loving union
Nor strow [5]mātavi flowers along with them;

(கர்ணனுடன் முகம் பார்த்துப் பேசவில்லையெனல்)

கோது கிளிபோல கொஞ்சிவிளை யாடவில்லை 1189

சாந்து புனுகு சவ்வாது தரிக்கவில்லை.
[1]சேர்ந்து விளையாடி சிரிப்பாய் இருக்கவில்லை 1190

முத்துநகை யாருடனே முகம்பார்த்துப் பேசவில்லை
நத்தமிழ்சேர் நாயகரை நானும்முகம் பார்க்கவில்லை 1191

வார்த்தைக்கு வார்த்தை [2]மறுவார்த்தை பேசவில்லை
ஆத்திமயிர் கோதி அன்பாய் முடிக்கவில்லை 1192

1189. மாதரி - மாதவிமலர். கோது - கொத்தும். 1190. சாந்து - சந்தனம். புனுகு, சவ்வாது - நறுமணப்பொருள்கள். 1191. முத்துநகை - முத்துப் போன்ற பற்களின் சிரிப்பு. நத்தமிழ் < நற்றமிழ். 1192. ஆத்தி - ஆற்றி - தலைமயிரைக் காயவைத்து. கோதி - வாரி, சேர்த்து

சு.சொல் 1. சேந்து 2 மரு

(Karṇaṉuṭaṉ mukampārttup pecavillaiyeṉal)

kōtu kilipōl koñcivilai yāṭavillai

cāntu puṉuku cavvātu tarikkavillai
cērntu viḷaiyāṭic cirippāy irukkavillai

muttunakai yāruṭaṉē mukampārttup pēcavillai
nattamiḻcēr nāyakarai nāṉummukam pārkkavillai

vārttaikku vārttai maṟuvārttai pēcavillai
āttimayir kōti aṉpāy muṭikkavillai

(கர்ணனைச் சேராமையைக் கூறுதல்)

கய்யால் [1]தழுவவில்லை கமலமுகம் சேரவில்லை 1193

எண்ணவொண்ணாப் [2]பேரழகை ஏறிட்டுப் பார்க்கவில்லை
பெண்ணரசே யென்றுஎன்னைப் பேசிக் [3]குழையவில்லை 1194
[4]ஆதரவாய்ப் பார்த்து அமுதை யருந்தவில்லை
காதலுடன் நான்போய்க் [5]கைக்குநீர் வார்க்கவில்லை 1195

முந்தானி நானொதுக்கி முன்னேநின்று பேசவில்லை
அந்திசந்தி ரெண்டுநேரம் ஆசாரம் பண்ணவில்லை 1196

ஆதித்தன் மகனை அடிவணங்கி [6]நிற்கவில்லை
சோதித் திருமுகத்தைத் துணிந்துநான் [7]பார்க்கவில்லை 1197

அய்வருக்கும் [8]நூற்றுவர்க்கும் ஆன தமையனென்று
[9]மெய்யுற்ற வார்த்தை விசுவாசம் பேசவில்லை 1198

பாதம் விளக்கிப் பரிவாகப் பேசவில்லை
காதல் பிதிர்ந்தோடக் கட்டி யணையவில்லை 1199

ஆன [10]மன்னரோடே அருகிருந்து பேசவில்லை 1200

1193 கமலமுகம் - தாமரை போன்ற முகம் 1194. எண்ணவொண்ணா - நினைக்க முடியாத. ஏறிட்டு - நிமிர்ந்து. குழையவில்லை - விருப்பத்தோடு நெகிழவில்லை. 1195 ஆதரவு - அன்பு. அருந்தவில்லை - உண்ணவில்லை. காதலுடன் - அன்புடன். கைகக்குநீர் வார்த்தல் - உணவு உண்டபின் கைகழுவத் தண்ணீர் ஊற்றுதல். 1196 முந்தாணி - மேலாடை. அந்தி - மாலை சந்தி - காலையிலும், மாலையிலும் இருளும் ஒளியும் சந்திக்கும் நேரம். ஆசாரம் - உபசாரம், பணிவிடை.1197 ஆதித்தன் - சூரியன் சோதி - ஒளி பொருந்திய. 1198. மெய்யுற்ற வார்த்தை விசுவாசம் - மெய்யான நம்பிக்கையான ஆதரவான சொற்கள். 1199. விளக்கி - கழுவி. பரிவு - அன்பு பிதிர்ந்தோட - கட்டுக்கடங்காமல் போக.

சு.சொல் : 1 தளுவவில்லை 2. பேரளகை 3 குளையவில்லை 4. ஆதறவாய்ப்பாத்து 5. கையிக்கி 6 நிற்க்கவில்லை 7 பாற்கவில்லை 8. நூத்துவர்க்கு 9. மெய்யுத்த 10. மண்ணரோடே

**(Karṇaṉaic cērāmaiyaik kūṟutal)**

*kayyāl taḻuvavillai kamalamukam cēravillai*

*eṇṇavoṇṇāp pēraḷakai ēṟiṭṭup pārkkavillai*
*peṇṇaracē yeṉṟueṉṉaip pēcik kuḻaiyevillai*

*ātaravāyp pārttu amutai yaruntavillai*
*kātaluṭaṉ nāṉpōyk kaikkunīr vārkkavillai*

*muntāṉi nāṉotukki muṉṉēniṉṟu pēcavillai*
*anticanti reṇṭunēram ācāram paṇṇavillai*

*ātittaṉ makaṉai aṭivaṇaṅki niṟkavillai*
*cōtit tirumukattait tuṇintunāṉ pārkkavillai*

*ayvarukkum nūṟṟuvarkkum āṉa tamaiyeṉeṉṟu*
*meyyuṟṟa vārttai vicuvācam pēcavillai*

*pātam viḷakkip parivākap pēcavillai*
*kātal pitirntōṭak kaṭṭi yaṇaiyavillai*

*āṉa maṉṉarōṭē arukiruntu pēcavillai*

(உணவு படைக்காமையைக் கூறுதல்)

தங்கக் கலம்விளக்கிச் சதிராக வைக்கவில்லை
துங்க பரிகலத்தில் சோறுகறி போடவில்லை 1201

அடுக்களையில் சென்று அமுதுகறி படைக்கவில்லை
தொடுத்த கறியெல்லாம் சுகமாய்ச் சமைக்கவில்லை 1202

1201 சதிர் - திறமை, முறைமை. துங்க - மேலான பரிகலம் - உண்ணும் பாத்திரம். 1202. அடுக்களை சமையலறை. அமுது - சோறு. கறி - காய்கறியாலான பக்க உணவுகள்.

**(uṇavu paṭaikkāmaiyaik kūṟutal)**

*taṅkak kalamviḷakkic catirāka vaikkavillai*
*tuṅka parikalattil cōṟukaṟi pōṭavillai*

*aṭukkaḷaiyil ceṉṟu amutukaṟi paṭaikkavillai*
*toṭutta kaṟiyellām cukamāyc camaikkavillai*

1. Jasmine (Jasminum auriculatum) 2. Blue-lily Nymphaea nouchalıa 3. Gamboge (Ochrocarpus longifolius) 4. Tuscan jasmine: Jasmınum sambac 5. Kurukkatti (Hiptage madablota)

**She had not spoken freely to karna nor join him in loving union**

'Oh, I had not dallied with my Lord
Speaking caressing words like a pecking parrot;
I did not wear sandal paste or fragrant civet[1].
Or [2]cavvātu; I did not play with him
In happy nuptial bliss; I did not speak
To my lord of pearly smile;
My Lord of goodly Tamil land I did not look
In the face; and speak as couples do
Words of response to each word spoken;
I did not lovingly run my fingers
Through his locks of hair, drying them.
And then tie them up in a manly tuft.
I hadn't taken him lovingly in my arms;
I had not held my face close to his, in love;
Such ineffable beauty as his, I had not looked up
In joy and love, And he had not

Fondled me, calling me queen among damsels;
Nor happily eaten ambrosial food in love;
Oh, I had not poured water to wash his hands;
Nor stood before him, loosening the front of my saree!
Oh, I had not served him as a wife at twilight times,
At dawn and at dusk!
I had not bowed at the feet of the sun-god's son!
Nor had the boldness to look up at that radiant visage!
I had not spoken words true and loyal,
As the eldest of the Pāṇṭavas and the Hundred.
Oh, I did not wash his feet or talk to him lovingly!
I had not hugged him tight with love spilling over!
I had not sat close to him and talk as couples do!
Oh I had not cleaned his golden plate
And served him cooked rice and viands sweet;
I had not gone into the kitchen to cook for him;
Preparing well vegetable dishes as pleasing food."

1. civet: scent made form the secretion of the civet cat. 2. cavvatu: a pagrant scent.

*(ஆடை, ஆபரணம் பூணாமையைக் கூறுதல், விளையாடாமையைக் கூறுதல்)*

*மஞ்சள் குளிக்கவில்லை வாடைமணம் பூசவில்லை*
*[1]பஞ்சவர்ணச் சேலை பரிவாய் உடுத்தவில்லை* 1203

*வண்ணவண்ணச் சேலை வகையாய் உடுத்தவில்லை*
*தென்னவர்கள் சேலை [2]திறமாய் உடுத்தவில்லை* 1204

*[3]எண்ணெயிட்டுக் கோதி இதமாய் [4]முழுகவில்லை*
*கண்ணிலே அஞ்சனம் கரிக்கத் தரிக்கவில்லை* 1205

*சீராட்டிப் பாராட்டிச் [5]சிறக்க இருக்கவில்லை*
*அடியில் மலர்போட்டு ஆசாரம் பண்ணவில்லை* 1206

*அந்திசந்தி சுத்திபண்ணி ஆசாரம் பண்ணவில்லை*
*என்தரத்துப் பெண்களுடன் ஏகாந்தம் பேசவில்லை* 1207
*சிந்தூரம் தீட்டவில்லை சேந்தமணி பூட்டவில்லை*

பந்துவிளை யாடவில்லை பரிந்துசூ தாடவில்லை 1208
அம்மானை யேந்தி அடித்துவிளை யாடவில்லை
செம்மாலை யேந்திச் சிறப்பாகச் சூடவில்லை 1209

இப்படி யெல்லாம் இதமாய் இருக்காமல்
கற்பினை யாகச் சலித்து முகம்வாடி 1210

நீருக்குள் நின்றெரியும் [6]நிறைந்த விளக்கதுபோல்
போருக்கு வாய்த்த புரவலர்க்கு [7]செய்தகுற்றம் 1211

யென்னெஞ்சுக் குள்ளே [8]எரியுதே மேனியெல்லாம்
மன்னவரே கேட்டருளும் மாயவனார் தூதுவந்து 1212

*1203 வாடை மணம் - வாசனை திரவியங்கள் (சந்தனம், புனுகு, சவ்வாது) பஞ்சவர்ண சேலை - ஐந்து வண்ணமுடைய சேலை. 1205. கோதி - சீப்பால் வாருவதுபோல் கையால் தலைமயிரைச் சீராக்கி. அஞ்சனம் - மை 1207. ஏகாந்தம் - தனிமையாக ரகசியச் செய்திகள்.1208. சிந்தூரம் - செம்பஞ்சுக் குழம்பு. சேந்த - சிவந்த. சூது - சொக்கட்டான் 1209. அம்மானை அம்மானைக் காய்கள். பந்து அளவு இருக்கும் 1210 சலித்து - சலிப்படைந்து. 1211. புரவலர் - அரசர், கர்ணன் 1212. மன்னவரே - பாண்டவரே. மாயவனார் - கண்ணன்*

*சு.சொல் : 1 பஞ்சவர்ன்ன 2. திரமாய் 3 என்னெயிட்டு 4. முளுகவில்லை 5 சிரக்க.6. நிரைந்த 7. செயித குத்தம் 8. எறியுதே*

**(āṭai āparaṇam puṇāmaiyaik kūṟutal, viḷaiyāṭāmaiyaik kūṟutal)**

*mañcaḷ kuḷikkavillai vāṭaimaṇam pūcavillai*
*puñcavarṇac cēlai parivāy uṭuttavillai*

*vaṇṇavaṇṇac cēlai vakaiyāy uṭuttavillai*
*tennavarkaḷ cēlai tiṟamāy uṭuttavillai*

*eṇṇaiyiṭṭuk kōti itamāy muḻukavillai*
*kaṇṇilē añcaṉam karikkat tarikkavillai*

*ciṟāṭṭip pārāṭṭic ciṟakka irukkavillai*
*aṭiyil malarpōṭṭu ācāram paṇṇavillai*

*anticanti cuttipaṇṇi ācāram paṇṇavillai*
*eṉtarattup peṇkaḷuṭaṉ ēkāntam pēcavillai*

*cintūram tiṭṭavillai cēntamaṇi pūṭṭavillai*

*pantuviḷai yāṭavillai parintucū tāṭavillai*

*ammāṉai yēnti aṭittuviḷai yāṭavillai*
*cemmālai yēntic ciṟappākac cūṭavillai*

*ippaṭi yellām itamāy irukkāmal*
*kaṟpiṉai yākac calittu mukamvāṭi*

*nīrukkuḷ niṉṟeriyum niṟainta viḷakkatupōl*
*pōrukku vāytta puravalarkkuc ceytakuṟṟam*

*eṉṉeñcuk kuḷḷē eriyutē mēṉiyellām*
*maṉṉavarē kēṭṭaruḷum māyavaṉār tūtuvantu*

**She had not worn jewels and dresses fine or played games**

"Oh, I had not used auspicious turmeric while bathing
(As wedded wives do); nor applied
Perfume or scent to my body;
Nor worn cheerfully five coloured garments
Or saree of vārying hues and texture;
Nor the saree woven by the weavers in the south;
Nor applied oil to my hair and happily bathed;
Nor dark collyrium to tinct my eyes;
Oh, I had not entertained him with solicitous care,
With endearing talk and words of praise;
I had not strewn flowers at his feet
And shown him my love and esteem!
At dawn and at dusk I had not performed
The ritual washing of feet and adoration.
I had not indulged with damsels of my class
In gossip womanly, exchanging secrets!
Nor like them apply red cotton dye to my limbs,
Nor wear rubescent gems as jewels!
I had not played ball-game with friends;
Nor the game of dice with them;
I did not send the ball up and catch it
In the game of 'Ammāṉai'; nor play

At hitting the ball and catching it;
Nor take a garland of flowers red
And wear it round my neck!
Instead of living in cheerful happiness
With my Lord, I pined in fancy of mine own.
Pale of face and weary, making my life
Illusory as the reflection of a lamp in water!
Oh, all these sins of omission I had done
In my wedded life with my Lord, make me burn
Within my heart! O King, kindly listen:"

*(குந்தி வரம் கேட்டதைக் கூறுதல்)*

*செம்மை செம்மையாகத் தெரிந்துவகையுரைத்து*
*இம்மையிலே உன்தனக்கு [1]ஏற்றமுள்ள புத்திரன்தான்* 1213

*என்றுசொல்லி மாயவனார் என்மாமி யைவிடுத்து*
*அம்மாமி வந்து அவரை [2]மிகவறிந்து* 1214

*யென்மகனே கர்ணாநீ யெல்லோருக்கும் மூத்தோனே* 1215

*ஆதித்தன் [3]உன்தகப்பன் அய்வருமுன் தம்பியர்கள்*
*நாதன் அருளாலே நானுமுந்தன் [4]மாதாகாண்*
*சாதித்து நின்று தலைமகன்நீ யென்றுரைத்தாள்* 1216

*யென்றவுடன் நாயகரும் என்மாமி [5]யைப்பார்த்து*
*ஒன்று [6]மறியேன் [7]உற்றதொரு தாயாகில்* 1217

*இன்னபடி யென்று [8]இறந்தவர்கள் மெத்தவுண்டு*
*சொன்னபடி கேட்டுத் துயரம் தணிந்தில்லை* 1218

*அப்படியே [9]பெற்றால் அரியதொரு தாயாகும்* 1219

*[10]என்ற மொழிகேட்டு இருந்ததொரு மாமியரும்*
*[11]சென்றெடுத்துப் [12]போர்த்தினாள் தெய்வப் [13]படாகமதை* 1220

*[14]போர்த்தினபின் மேனியெல்லாம் [15]பூரிப்பு தானாகி*
*பத்துமாசம் சுமந்து பாலகனைப் பெத்ததுபோல்* 1221

*உத்ததொரு தாயாரும் உகந்துநின் றதைப்[16]பார்த்து*
*எத்திசையும் கர்ணன் இறங்கிமிகத் [17]தெண்டனிட்டு* 1222

மெய்ப்பாக மாதாவே வேண்டிவந்த காரியமென்
என்றுசொல்லக் கேட்டு இயல்புடைய மாமியரும் 1223

அய்வருக்கும் மூத்ததொரு [18]அரசே இனிக்கேளும்
செஞ்சொல் வினையான் [19]துரியோ தனனுடனே 1224

அய்வரில் ராசாக்கள் [20]அமர்பொருதத் துணிந்துவிட்டார்
உன்தம்பி மாருடனே [21]உடன்கூடி வாழாமல் 1225

[22]அய்வர்மேல் சென்று அடர்ந்து கணைதொடுத்து
[23]வன்போரே செய்யாதே மகனே யென்றுரைத்தார் 1226

ஆமென்று சொல்லியவர் ஆணையிட்டுத் தான்கொடுத்தார்

. 1213. இம்மை - இப்பிறப்பு. ஏற்றமுள்ள - உயர்வான. 1214. மாமி - குந்தி. 1216. மாதா - தாய். சாதித்து - உறுதியாக. 1217. நாயகர் - கணவன், கர்ணன் 1218. மெத்த - மிகுதியாக.1220. தெய்வப்படாகம் - தெய்வத் தன்மை பொருந்திய துணி. கர்ணன் திருமணமாவதற்கு முன் பிறந்ததும் ஊரார் பழிக்கு அஞ்சிய குந்தி தன் புடவையைக் கிழித்து அதில் கர்ணனைப் பொதிந்து பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டாள். கர்ணன் பெரியவனாக வளர்ந்து அரசனாக ஆனபின்பு தன் தாயை அறிய பல முயற்சிகள் செய்தான் பல பெண்கள் ஆசையால் நானுன் தாய் என்று சொல்லி அப்புடவைத் தலைப்பைப் போர்த்தி உடல் எரிந்து போனார்கள் உண்மையான தாய் மட்டுமே அதைப் போர்த்த முடியும். குந்தியும் போர்த்தி எரிவாளே என்ற அச்சத்தில் கர்ணன் தடுத்தான் ஆனால் குந்தி உண்மையான தாயாதலால் எரியவில்லை. எனவே தெய்வ படாகம் என்றார். 1221. பாலகன் - குழந்தை. பெத்தது - பெற்றது. 1222. உத்ததொரு - உற்றதொரு. பத்துமாசம், எத்திசையும் என்பன வற்றுக்காக எதுகை நோக்கி அப்படியே விடப்பட்டது. உகந்து - மகிழ்ந்து. இறங்கி - வீழ்ந்து 1223. மெய்ப்பாக - உண்மையாக 1224. செஞ்சொல் வினையான் - கபடம் மிகுந்த சொற்களைப் பேசுபவன். 1225. அமர்பொருத - போர்புரிய. 1226. அடர்ந்து - நெருங்கி. கணை தொடுத்து - அம்பு விட்டு. வன்போர் - கொடியபோர்.

சு.சொல் : 1. ஏத்தமுள்ள 2 மிகவரிந்து 3. உந்தகப்பன் 4. மாதாகான் 5. யைப்பாத்து 6. மரியேன் 7 உத்ததொரு 8 இரந்தவர்கள். 9 பெத்தால் 10. யெண்ட 11. சென்ரெடுத்து 12. போத்தினாள் 13. பிடாகமதை 14 போத்தினபின் 15. பெரிப்பியை 16. பாத்து 17. தெண்டநிட்டு 18 அறசே 19. திரியோ 20. உடன்ங்கூடி வாளாமல் 21 அய்வர்மேல்ச் 22. வன்ம்போரே

## (Kunti varam kēṭṭataik kūṟutal)

*cemmaicem maiyākat terintu vakaiyuraittu*
*immaiyilē uṉtaṉakku ēṟṟamuḷḷa puttirantāṉ*

*eṉṟucolli māyavaṉār eṉmāmi yaiviṭuttu*
*ammāmi vantu avarai mikavarintu*

*eṉmakaṉē karṇāṉī yellōrukkum mūttoṉē*

*ātittaṉ untakappaṉ aivarumuṉ tampiyarkaḷ*
*nātaṉ aruḷālē naṉumuntaṉ matākāṉ*
*cātittu niṉṟu talaimakaṉṉī yeṉṟuraittāḷ*

*eṉṟavuṭaṉ nāyakarum eṉmamiyaip pārttu*
*oṉṟu maṟiyēṉ uṟṟatōru tāyākil*

*iṉṉapaṭi yeṉṟu irantavarkaḷ mettavuṇṭu*
*coṉṉapaṭi kēṭṭut tuyaran taṉintillai*

*appaṭiyē peṟṟāl ariyatoru tāyākum*

*eṉṟamoḻi kēṭṭu iruntatoru mamiyarum*

*ceṉṟeṭuttup pōrttināḷ teyvap paṭākamatai*
*pōrttinapiṉ meṉiyellām pūrippu tāṉāki*

*pattumācam cumantu pālakaṉaip peṟṟatupōl*
*uttatoru tāyarum ukantuniṉ ṟataippārttu*

*etticaiyuṅ karṇaṉ iṟaṅkimikat teṇṭaṉiṭṭu*
*meyppāka mātāvē vēṇṭivanta kariyamen*

*eṉṟucollak keṭṭu iyalpuṭaiya māmiyarum*
*ayvarukkum mūttatoru aracē iṉikkēḷum*

*ceñcol viṉaiyāṉ turiyō taṉaṉuṭaṉē*
*ayvaril rācākkaḷ amarporutat tuṇintuviṭṭār*

*untampi maruṭaṉē uṭaṉkūṭi vāḷāmal*
*ayvarmēl ceṉṟu aṭarntu kaṇaitoṭuttu*

*vaṉpōrē ceyyātē makaṉē yeṉṟuraittār*

*āmeṉṟu colliyavar āṇaiyiṭṭut tāṉkoṭuttār*

**(குந்தியை வணங்காததைக் கூறுதல்)**

அப்போது நான்தான் [1]அறிவுமிகக் குலைந்து

பிரபலத்தில் வந்ததொரு [2]பெண்கொடியாள் மாமியரை
மாமியரே யென்றுசொல்லி வாய்புதைத்து [3]நிற்கவில்லை

அடிவணங்கி [4]நின்றுமெள்ள ஆசாரம் பண்ணவில்லை

1228. பிரபலம் - வெளிப்படை, மதிப்பு.
சு.சொல் : 1. அறிவு 2. பெண்கொடியாள் 3. நிற்கவில்லை. 4. நின்று

*(Kuntiyai vaṇaṅkātataik kūṟutal)*

*appōtu nāṉtāṉ aṟivu mikakkulaintu*

*pirapalattil vantatoru peṇkoṭiyāḷ māmiyarai*
*māmiyarē yeṉṟucolli vāyputaittu niṟkavillai*

*aṭivaṇaṅki niṉṟumeḷḷa ācāram paṇṇavillai*

**Poṉṉuruvi speaking about Kunti getting a boon from Karṇaṉ**

"The Lord who knows all things perfectly,
Revealed to my mother-in-law, that Karṇaṉ
Was in truth her noble son,
And sent her to the king of the Aṅkas.
Meeting him in his palace she told him:
"O my dear Karṇa, elder to all my sons!
The Sun-God is your sire, and the Five
Your brothers! I am indeed your own mother
And you my first born!" To which,
Karṇaṉ replied: "I don't know anything of this;
Many who claimed to be my mother, have lost
Their lives; and my sorrow remained unabated:
If you come unscathed from the test
You will be my mother, rare and dear!"
On hearing this, my mother-in-law Kunti took up
The silken cloth of divine virtue kept by Karṇaṉ,
And wrapped it round herself; and stood
Exhilarated and ecstatic as if she had
Just then delivered her child after pregnancy!
And overjoyed at this proof positive, of Kunti
Being his real mother, Karṇaṉ came up to her
And bowed in reverence and love, asking her:
"O, dear mother! Tell me truly why you have come?!
"O, king elder to the five Pāṇṭavas! Oh hear me!
The five kings have decided to fight against Turiyōtaṉaṉ

Of hypocritical speech. O son, do not make war
Against your younger brothers, instead of living
In amity and happy association with them;
Oh, do not shoot your arrows at them."
And my Lord assented readily and swore to it accordingly.

(தான் வேலை செய்யாததைக் கூறுதல்)

வெள்ளாட்டி நானாக வேலை படிக்கவில்லை 1229

ஆக்கு [1]மடுக்களையில் [2]அமர்ந்து திரியவில்லை
வாக்குத் [3]தான்கேட்டு வணங்கித் திரியவில்லை 1230

[4]கொழுந்தன்மார் தன்னுடனே கூடித் திரியவில்லை
[5]எழுந்ததொரு வேலை இயல்பாகச் செய்யவில்லை 1231

சிறுமாமி தன்னுடனே [6]சேர்ந்துவிளை யாடவில்லை
விருத்தமாய்த் தான்திரிந்தேன் மேதினியில் மன்னவரே 1232

அப்போது நாயகனார் அதிசெயமாய்ச் [7]செய்ததர்மம் 1233

1229. ஆசாரம் - பணிவிடை.. வெள்ளாட்டி - வேலைக்காரி படிக்கவில்லை - செய்யவில்லை. 1230. ஆக்கும் - சோறுசமைக்கும். அடுக்களை - சமையல்அறை. வாக்கு - மாமியின் சொல் (அதிகாரம்) 1232. விருத்தம் - வெறுமை, கர்வம். மேதினி - பூமி.

சு.சொல் 1 அடுக்கிளையில் 2. அமந்து 3 தான்ங்கேட்டு 4. கொளுந்தன்மார் 5. எளுந்ததொரு 6 சேந்து 7. செயிததர்மம்

**(tān vēlai ceyyātataik kūrutal)**

*veḷḷāṭṭi nānāka vēlai paṭikkavillai*

*ākku maṭukkaḷaiyil amarntu tiriyavillai*
*vākkut tāṉkēṭṭu vaṇaṅkit tiriyavillai*
*koḻuntaṉmār taṉṉuṭaṉē kūṭit tiriyavillai*
*eḻuntatoru vēlai iyalpākac ceyyavillai*

*ciṟumāmi taṉṉuṭaṉē cerntuviḷai yāṭavillai*
*viruttamāyt tāntirintēṉ mētiṉiyil maṉṉavarē*

*appōtu nāyakaṉār aticeyamāyc ceytatarmam*

### Poṉṉuruvi continuing her self-deprecation

"But I, all witless and foolish, did not think
Of showing my respect to my mother-in-law:
Did not stand before her, my hands covering my mouth,
Nor prostrate at her feet and minister to her needs.
Oh, I did not serve her as a daughter-in-law should!
I did not busy myself working in the kitchen;
Nor enquire of her about her wishes, and carry them out;
Nor spend my time happily with my brothers-in-law!
Nor attend to any work of my own accord;
Oh, I did not play with my foster mother-in-law;
I went about wasting my days on earth."

### *(கர்ணனின் கொடையைப் புகழ்தல்)*

*பொன்னை வழங்கினார் பொன்னுலகம் [1]சேரவென்று*
*கனகம் வழங்கினார் கயிலாசம் [1]சேரவென்று* 1234

*பணத்தை வழங்கினார் [2]பரலோகம் [1]சேரவென்று*
*பவளம் வழங்கினார் பாவம் [3]தொலையவென்று* 1235

*முத்தை வழங்கினார் மூவுலகும் [1]சேரவென்று*
*தனத்தை [4]வழங்கினார் தன்மத்தைச் [1]சேரவென்று* 1236

*கேட்டதெல்லாம் ஈந்தார் கீர்த்திபெற வேணுமென்று*
*வாட்டமாகக் கொடுத்தார் [5]வைகுண்டம் சேரவென்று*
*நாட்டமாகக் கொடுத்தார் [6]நற்பாதம் சேரவென்று* 1237

*1234 பொன்னுலகம் - சுவர்க்கம். கயிலாசம் - சிவனிருக்குமிடம். சிவபதவி. 1235. பரலோகம் - மேலுலகம் 1236 மூவுலகு - மேல்உலகம், கீழுலகம், நடுவுலகம். தனம் - செல்வம். 1237. கீர்த்தி - புகழ். வாட்டமாக - முறையாக. வைகுண்டம் - பெருமாள் இருக்குமிடம். நாட்டம் - விருப்பம் நற்பாதம் - இறைவனின் திருப்பாதம். நல்லபதவி.*

*சு.சொல் 1. சேறவென்று 2 பறலோகம் 3. துலையவென்று 4 வளங்கினார் 5 வைய்குண்டஞ் 6 நற்ப்பாதஞ்*

### (Karṇaṉiṉ koṭaiyaip pukaḻtal)

*poṉṉai vaḻaṅkiṉār poṉṉulakam cēraveṉṟu*
*kaṉakam vaḻaṅkiṉār kayilācam cēraveṉṟu*

*paṇattai vaḻaṅkiṉār paralōkam cēraveṉṟu*
*pavalam vaḻaṅkiṉār pāvam tolaiyaveṉṟu*

*muttai vaḻaṅkiṉār muvulakum cēraveṉṟu*
*taṉattai vaḻaṅkiṉār taṉmattaic cēraveṉṟu*

*kēṭṭatellām īntār kīrttipeṟa vēṇumeṉṟu*
*vāṭṭamākak koṭuttār vaikuṇṭam cēraveṉṟu*
*nāṭṭamākak koṭuttār naṟpātañ cēraveṉṟu*

### Praising Karṇaṉ's munificence

"Oh, my Lord's munificence, wondrous it was!
He gave away gold that he may attain the golden world.
Virgin gold he dispensed to attain Kayilai great;
Moneys he distributed, to attain the upper world;
Coral he gifted, that his sins may be wiped off;
Pearls he provided, that he may attain the triple world;
Wealth he gave away, that he may acquire merit.
Whatever was asked for, he gave, to achieve fame;
Freely he gave, to reach Vaikuntam of the Lord!
Cheerfully he gave, to attain the feet divine of God!"

*(நானும் இறப்பேனெனல்)*

*[1]தன்பாவம் [2]தீர்ந்தவரும் தன்மத்தைப் போயடைந்தார்*
*என்பாவம் தீர இறந்துமுடிப் பேனென்று* 1238

*பாவம் தொலைந்தடியாள் பரமகெதி சேராமல்* 1239

*அரும்பாவி யாகவே அடியாள் இருந்துவிட்டேன்*
*பெரும்பாவி ஆகவேதான் பேசா திருந்துவிட்டேன்* 1240

*அய்யரே நானிருந்தால் [3]அநியாயம் [4]கண்டீரே*
*வய்யகத்தார் மெய்க்க மடிவேன் எனத்துணிந்தார்* 1241

*இந்த உடம்புதன்னை [5]யெரிய யெறியாமல்*
*அந்த உடம்போடே [6]அனலிலே தான்வாட்டி* 1242

*கூட மடிவேனென்று [7]கூறலுற்றாள் பொன்னுருவி* 1243

அன்ன நடையாள் [8]அமர்ந்ததொரு கன்னியவள்
பொன்னுருவி சொன்னதொரு புண்ணியங்கள் [9]தான்கேட்டு

1238. தன்மம் - தர்மம். 1239. பரமகெதி - மேலான மோட்சம் 1241. அநியாயம் - நியாயமல்ல. வய்யகத்தார் - வையகத்தார் - பூமியிலுள்ளவர். மெய்க்க -- மெச்ச -- புகழ. மடிவேன் - இறப்பேன். 1242. இந்த உடம்பு - பொன்னுருவியின் உடல். அந்த வுடம்பு - கர்ணன் உடல். அனல் - நெருப்பு. வாட்டி - வருத்தி.

சு.சொல் : 1. தன்ம்பாவம் 2. தீர்த்தவரும். 3. அனியாயம் 4. கண்டிரே 5. எறிய 6 அணலிலே 7. கூறலுத்தாள் 8. அமந்ததொரு கண்ணிடவள் 9. தான்ங்கேட்டு

**(nānum irappē nenal)**

*tanpāvam tīrntavarum tanmattaip pōyataintār*
*enpāvan tīrairantu mutippenenru*

*pāvan tolaintatiyāl paramaketi cērāmal*

*arumpāvi yākavē atiyāl iruntuvittēn*
*perumpāvi ākavētān pēcā tiruntuvittēn*

*ayyarē nāniruntāl aniyāyam kantirē*
*vayakattār meykka mativēn enattunintār*

*inta utamputannai eriya eriyāmal*
*ant utampōtē analilē tānvātti*

*kūta mativēnenru kūralurrāl ponnuruvi*

*anna nataiyāl amarntatoru kanniyaval*
*ponnuruvi connatoru punniyankāl tānkēttu*

**"I will also give up my life"**

"Freed of his sins, he has attained beatitude.
Likewise I shall die, to be rid of my sin.
Oh, I have lived a sinner all this time!
Instead of expiating my sins to attain salvation,
Lord, it will be unfair if I live hereafter!
And I shall end my life praised by all!"
So determined, Ponnuruvi declared:" This, my body,
Instead of being burnt alone, shall be roasted to ashes
Along with that of my Lord in the same funeral pyre!"

## (பாண்டவர் பதில்)

அன்னவர்கள் பஞ்சவர்கள் ஆயர் அடிபணிந்து 1244

நாரா யணரே நல்லதன்மர் மச்சினரே 1245

கேட்டு மிருந்தீரோ [1]கிளிமொழியாள் சொன்னதெல்லாம்
வாட்டமற்ற சொல்லாள் வகையாய் உரைத்ததெல்லாம் 1246

ஆற்றோடே வந்த [2]அருங்குழந்தை ஆகையினால்
தேர்ப்பாகன் [3]வீட்டில் சிறுவன்காண் என்றுசொல்லி
பாங்கியரும் [4]தோழியரும் பலரு முரைத்ததினால் 1247

பேசாது பேசிப் பிறர்நகைக்கச் சொல்லிவிட்டாள்
கூசாமல் நின்றுரைத்தாள் கோல மடமயிலாள் 1248

என்றவுடன் பொன்னுருவி இசைந்தேது [5]செப்பலுற்றாள்

*1244. அன்னநடையாள் - அன்னம் போன்ற நடையுடையவள். அமர்ந்ததொரு கண்ணியவள் - அகன்ற, விருப்பம் தரத்தக்க கண்ணையுடையவள். ஆயர் - கிருஷ்ணர். 1245. மச்சினர் - மைத்துனர். மனைவியின் சகோதரன். கிருஷ்ணன் தங்கை சுபத்திரையின் கணவன் அர்ச்சுனன். அருச்சுனனுக்கு மைத்துனன் எனவே ஐவர்க்கும் மைத்துனன். திரௌபதியும் கிருஷ்ணனுக்குத் தங்கை முறையானாள். 1246. கிளிமொழியாள் - கிளி போன்ற இனிய மழலை பேசுபவள். வாட்டமற்ற - வருத்தமற்ற. 1247. தேர்ப்பாகன் வீட்டில் சிறுவன் - ஆற்றோடு வந்த கர்ணனை திருதராட்டிரனின் தேர்ப்பாகன் அதிரதனும் அவன் மனைவி ராதையும் வளர்த்தனர். 1248. பேசாது - பேசாத வார்த்தையெல்லாம், இகழ்ச்சியாக. நகைக்க - சிரிக்க. கூசாமல் - வெட்கப்படாமல். கோல - அழகிய. மட - அறியாமை நிறைந்த.*

*சு.சொல் : 1. கிளிமொளியாள் 2. அருங்குளந்தை 3. வீட்டில்ச் சிறுவங்கான் 4. தோளியரும் 5 செப்பலுத்தாள்*

## (Pāṇṭavar patil)

*aṉṉavarkaḷ pañcavarkaḷ āyar aṭipaṇintu*

*nāra yaṇarē nallataṉmar macciṉarē*
*kēṭṭu miruntirō kiḷimoḻiyāḷ coṉṉatellām*
*vāṭṭamaṟṟa collāḷ vakaiyāy uraittatellām*

*aṟṟōṭē vanta aruṅkuḻantai ākaiyiṉāl*
*tērppākaṉ vīṭṭil ciṟuvaṅkā ṇeṉṟucolli*
*pāṅkiyarum tōḻiyarum palaru muraittatiṉāl*

*pēcātu pecip piṟarnakaikkac collivittāḷ*

*kūcāmal niṉṟuraittāḷ kōla maṭamayilāḷ*
*eṉṟavuṭaṉ poṉṉuruvi icaintētu ceppaluṟṟāḷ*

**The Pāṇṭavas reply**

On hearing the worthy words of Poṉṉuruvi
Of swan-like gait and fascinating eyes,
The Five did bow before the feet of the Lord,
And said: "O Nārāyaṇa, our own brother-in-law!
Did you not hear the words of the queen,
Of speech sweet as a parrot's, - all that she said?
Poor innocent of peafowl-mien,
She has joined with her maids, and friends,
In making fun of Karṇaṉ's birth;
How he was found by a charioteer,
As he came floating down a river,
And how he was brought up by him in his house:"

(பொன்னுருவி பாண்டவரை இகழ்தல்)

நின்று திகைத்து நினையாததெல் லாம்நினைத்து 1249

மேலோரும் [1]கீழோரும் [2]மிக்கபுகழ் மன்னவரும்
[3]சீலமுடன் கேளும் [4]திறமாக யென்வார்த்தை 1250

மென்மை யுள்ளார் என்பார்கள் மேதினியில் பஞ்சவர்கள் 1251

தன்மரே உங்களைப்போல் சற்பினை காரருண்டோ
கன்னர்செய்த [5]குற்றமென்ன காசினியில் கர்மமென்ன 1252

சொர்ணம் கொடுக்கலையோ கேட்டவ்ர்க்கும் [6]கற்றவர்க்கும்
அன்னம் கொடுக்கலையோ ஆசகர்க்கும் தேசிகர்க்கும் 1253
[7]வேதியர்க்கும் சோசியர்க்கும் விரும்பிக் கொடுக்கலையோ
பூதலத்தி லுள்ளவர்க்கும் போதக் கொடுக்கலையோ 1254

அண்டின [8]பேர்க்கும் ஆவர்க்குஞ் செய்யலையோ
வண்டமி ழோர்க்கும் மறையோர்க்கும் செய்யலையோ 1255

வேணுமென்ற பேர்க்கு விரும்பிக் கொடுக்கலையோ
காணவென்று வந்தவர்க்குக் கனமாய்க் கொடுக்கலையோ 1256

கேட்ட பொருளைக் [9]கிருபையுடன் செய்யலையோ
வாட்டமுற்ற பேர்க்கு [10]மனமகிழச் செய்யலையோ 1257

இல்லையென்று சொல்லாமல் இரப்போர்க்கும் [11]உள்ளவர்க்கும்
வல்லமையாய்ச் [12]செய்தவர்க்கு வகைமோசம் செய்தியளே 1258

*1250. சீலமுடன் - ஒழுக்கமுடன். 1251. மேதினி - பூமி. சற்பினைகாரர் - சூழ்ச்சிக்காரர், வஞ்சனையுடையவர். 1252. காசினி - பூமி. 1253. சொர்ணம் - பொன் அன்னம் - உணவு. ஆசகர் - யாசகர். தேசிகர் - தேசாந்திரிகள். 1254. வேதியர் - அந்தணர். பூதலம் - பூவுலகம். போத - போதுமான அளவு. 1255. அண்டின - அடைக்கலமாய் வந்த. ஆவர்க்கும் - யாவருக்கும். மறையோர் - வேதியர், வேதம் ·கற்றவர். 1256. கனமாய் - மிகுதியாக. 1257 கிருபை - கருணை வாட்டம் - வருத்தம். 1258. செய்தீரே > செய்தீர்களே > செய்தியளே.*

*சு.சொல் 1. கீள்ளோரும் 2. மிக்கபுகள் 3.சீலமுடன்ங் 4 திரமாக 5. குத்தமென்ன 6 கத்தவர்க்கும் 7. வேதியர்க்கும்ஞ் 8 பேற்க்கும் ஆவர்க்கும்ஞ் 9. கிறுபையுடன் 10 மனமகிளச் 11 உள்ளவற்க்கும் 12 செயிதவர்க்கும்*

### (Poṉṉuruvi Pāṇṭavarai ikaḻtal)

*niṉṟu tikaittu niṉaiyateḷ lāmniṉaintu*

*mēlōrum kīḻōrum mikkapukaḷ maṉṉavarum*
*cīlamuṭaṉ kēḷum tiramāka yeṉvārttai*

*meṉmaiyuḷḷār eṉpārkaḷ mētiṉiyil pañcavarkaḷ*
*taṉmarē uṅkaḷaippōl caṟpiṉai kāraruṇṭō*
*kaṉṉarceyta kuṟṟameṉṉa kāciṉiyil karmameṉṉa*

*corṇam koṭukkalaiyō kēṭṭavarkkum kaṟṟavarkkum*
*aṉṉam koṭukkalaiyō ācakarkkum tēcikarkkum*

*vētiyarkkum cōciyarkkum virumpik koṭukkalaiyō*
*pūtalatti luḷḷavarkkup pōtak koṭukkalaiyō*

*aṇṭiṉa pērkkum āvarkkuñ ceyyalaiyō*
*vaṇṭami ḻōrkkum maṟaiyōrkkum ceyyalaiyō*

*vēṇumeṉṟa pērkku virumpik koṭukkalaiyō*
*kāṇaveṉṟu vantavarkkuk kaṉamāyk koṭukkalaiyō*

*kēṭṭa poruḷaik kirupaiyuṭaṉ ceyyalaiyō*
*vāṭṭamuṟṟa pērkku maṉamakiḻac ceyyalaiyō*

*illaiyeṉṟu collāmalirappavarkkum uḷḷavarkkum*
*vallamaiyāyc ceytavarkku vakaimōcam ceytiyaḷē*

### Ponnuruvi berating the Pāntavas

When the five said these words, Ponnuruvi spoke thus:
'O ye famous kings and all men high and low,
Hear me now: the Pāntavas are good men,
People so believe on earth: O, Taruma
Are there men more treacherous than you?
What was the crime that Karnan did?
What sin did he commit on earth?
Did he not give away gold to all who asked?
And to learned men? Did he not give
Food to pilgrims and solicitors of gifts?
Did he not willingly give, to Vedic brahmins and fortune-tellers?
And to all on earth to their hearts' content?
Did he not live help to those who approached him,
And to others, satisfying their needs?
And to men of learning and Tamil scholars.
And to whosoever came, asking for aid?
Did he not give riches exceeding, to those who came to him?
Oh, did he not cheer up all who were sad,
Rewarding them with gifts ever so graciously?
Oh, to him who was so valiant in munificence,
Who never said 'nay' to solicitors of gifts,
And too, to all others, you have done grievous harm,
By treachery and deceit foul."

*(கண்ணனை இகழ்தல்)*

*[1]மாயவரே அண்ணாவி வார்த்தைகளைக் கேட்டருளும்*
*சகாயமாய்ப் பஞ்சவரைத் [2]தற்காக்க வேணுமென்று* 1259

*ஒருவர்க் கொருவர் உபகாரஞ் செய்யாமல்*
*இருவர் பட்சமாய் [3]இருந்து கெடுக்கவென்று* 1260

*தூதுவந்தீர் மாயவரே சூட்சம் பலநினைந்து*
*மாதுகுந்தா [4]தேவியரை வகைமோச மாயனுப்பி* 1261

*நாகக்கணை யொன்றெனவே நன்றாக [5]ஆணைகொண்டீர்*
*வேகமுள்ள- சூரியனார் மெய்ப்பாகத் தான்கொடுத்த* 1262

சொர்ண மகுடத்தலை சூடா மணிதனையும்
வர்ணமுள்ள மெய்யிலிடும் வச்சிராங்கி சோடுதனையும் 1263

[6]என்கழுத்து மங்கிலியம் இசைந்துவைத்து [7]பெட்டகத்தில்
நன்மையுள்ள மங்கிலியம் நன்றாய் இருக்கவென்று 1264

சாதகத்திலே எழுதிச் சாபமிட்டு வைத்தீரே
ஆதி முதலாக [8]அழியாத மங்கிலியம்
சோதி மதியா துலங்கி இருக்கவென்று 1265

சோராமல் [9]வாழ்த்தித் துதித்துவைத்த மங்கிலியம்
நீராகவே கொடுத்து நீர்வாங்கிக் கொண்டீரே 1266

[10]நீதியற்ற மாயவரே நிசமாச்சோ உன்வார்த்தை 1267

தப்பாத கர்ணர் சமர்க்களத்தி லேபொருதி
மெய்ப்புடைய கர்ணர் [11]வெறுங்கையாய் [12]நிற்கையிலே 1268

சற்பினையாய் மெள்ளவந்து தருமம் [13]பறித்தீரே
அப்படியும் போகாமல் அவர்காது குண்டலத்தை 1269

ஒப்புடனே வாங்கி உயிரைப் [14]பறித்தீரே
சற்பினையே பண்ணிச் [15]சகலபல முள்ளதெல்லாம் 1270

உள்ள கவடுபண்ணி [16]உறிஞ்சிவிட்ட தல்லாமல்
விதுரன் [17]கைவில்லை விதமாய் முறித்தீரே 1271

அசுவத்த [18]மாபலத்தை அர்ப்பந்தம் [19]செய்தீரே
ஆசாரி தன்னை அடுத்துக் கெடுத்தீரே 1272

கங்கை மகன்தன்னைக் கருவிக் கெடுத்தீரே
தேத்தரசன் தன்னைத் [20]திறமாய்க் கெடுத்தீரே 1273

இப்படியே உள்ள இயல்வேந்தர் தன்[21]பலத்தை
செப்பமாய் வாங்கித் [20]திறமாய்க் கெடுத்தீரே 1274

1259. சகாயம் - உதவி. 1260. உபகாரம் - உதவி. பச்சம் - பக்கம். 1261 சூட்சம் - சூழ்ச்சி. 1262. மெய்ப்பு - வலிமை 1263 சொர்ண மகுடம் - பொன்கிரீடம். சூடாமணி - தலை ஆபரணம். வச்சிராங்கி சோடு - வயிரத்தாலான கவசம். 1264. பெட்டகம் - பெட்டி. 1264 - 67. கண்ணன் பொன்னுருவி திருமணத்தின் போது திருமாங்கல்யம் பெட்டியில் இருக்க வேண்டும் என்று வாழ்த்தினான். அது நிசமாயிற்று என்கிறாள் பொன்னுருவி 1268. சமர்க்களம் - போர்க்களம் பொருதி - போரிட்டு. மெய்ப்பு - கீர்த்தி 1269 சற்பினை

- வஞ்சனை.1270. சற்பினை - வஞ்சனை. 1271 பிலம் - பலம். 1271 கவடு - கபடு வஞ்சனை, சூழ்ச்சி. விதுரன் போரில் வல்லவன். அவன் போர்செய்தால் பாண்டவர்களால் வெல்ல இயலாது எனவே சூழ்ச்சியால் துரியோதனனுக்கும் விதுரனுக்கும் வாக்கு வாதம் ஏற்படச் செய்து 'நான் போர் செய்ய மாட்டேன்' என்று கூறி விதுரனை வில்முறிக்குமாறு செய்தான் மாயோன் என்பது பாரதக்கதை. 1272. ஆசாரி - துரோணர் அசுவத்தமா என்ற யானை இறந்தது என்ற செய்தியைத் தருமன் மூலம் 'இறந்தான் அசுவத்தாமன்' என்பதை உரக்கவும் 'என்ற யானை அரசு' என்பதை மெதுவாகவும் கூற வைத்துத் துரோணருக்குத் தன்மகன் இறந்து விட்டான் என்ற தவறான செய்தியை அளித்து அவருடைய பலத்தைக் கவர்ந்தான் கண்ணன் இதனையே 'அடுத்துக் கெடுத்தீரே' என்றாள் 1273 கங்கை மகன் - காங்கேயன், வீடுமன்.

சு.சொல் : 1 மாயவரை 2 தற்கார்க்க 3. இருந்து எடுத்த கெடுக்கவென்று 4 தேவியரெ 5 ஆனை 6 யென்ங்களுத்து 7 பொட்டகத்தில் 8. அளியாத 9 வாள்த்தி 10. நீதியத்த 11 வெறுங்கய்யாய் 12 நிக்கயிலே 13 பரித்திரே 14 பரித்திரே 15 சகலபில 16. உறுஞ்சி 17. கையிவில்லை 18. மாபிலத்தை 19. செயிதிரே 20 திரமாய் 21 பிலத்தை

### (Kaṇṇaṉai ikaḻtal)

*māyavarē aṇṇāvi vārttaikaḷaik kēṭṭaruḷum*
*cakayamāyp pañcavarait taṟkākka vēṇumeṉṟu*

*oruvark koruvar upakārañ ceyyāmal*
*iruvar paṭcamāy iruntu keṭukkaveṉṟu*

*tūtuvantīr māyavarē cūṭcam palaninaintu*
*mātukuntā teviyarai vakaimōca mayaṉuppi*

*nākakkaṇai yoṉṟeṉavē naṉṟāka āṇaikoṇṭīr*
*vēkamuḷḷa cūriyaṉār meyppākat tāṉkoṭutta*

*corṇa makuṭattalai cūṭa maṇitaṉaiyum*
*varṇamuḷḷa meyyiliṭum vacciraṅki cōṭutaṉaiyum*
*eṉkaḻuttu maṅkiliyam icaintuvaittu peṭṭakattil*

*naṉmaiyuḷḷa maṅkiliyam naṉṟāy irukkaveṉṟu*

*cātakattilē eḻutic cāpamiṭṭu vaittīrē*
*āti mutalāka aliyāta maṅkiliyam*
*cōti matiyā tulaṅki irukkveṉṟu*

*cōrāmal vāḻttit tutittuvaitta maṅkiliyam*
*nīrākavē koṭuttu nīrvāṅkik koṇṭīre*

*nītiyaṟṟa māyavarē nicamāccō uṉvārttai*
*tappāta karṇar camarkkaḷatti lēporuti*

*meypputaiya karṇar veṟuṅkaiyāy niṟkaiyilē*

*caṟpiṉaiyāy vantumeḷḷa tarumam paṟittīrē*
*appaṭiyum pōkāmal avarkātu kuṇṭalattai*

*opputaṉēvāṅki uyiraip paṟittīrē*
*caṟpiṉaiyē paṇṇic cakalapala muḷḷatellām*

*uḷḷa kavaṭupaṇṇi uriñciviṭṭa tallāmal*
*vituraṉ kaivillai vitamāy muṟittīrē*

*acuvatta māpalattai arppantam ceytīrē*
*ācāri taṉṉai aṭttuk keṭuttīrē*

*kaṇkai makaṉtaṉṉaik karuvik keṭuttīrē*
*tēttaracaṉ taṉṉait tiṟamāyk keṭuttīrē*

*ippiṭyē uḷḷa iyalvēntar taṉpalattaic*
*ceyamāy vāṅkit tiṟamāyk keṭuttīrē*

**Berating Kriṣṇa**

"O great Lord, hear my words;
Solely in order to safeguard the Five
Instead of helping both sides, you chose
To go as the envoy of the Pāṇṭavas to plead their cause;
Many a trick and strategem you played;
You did send Mother Kunti to extract a promise
That the serpent-dart should be shot only once;
Oh, you took by guile the crest-jewel on the golden crown,
The shining armour of diamonds wrought,
And too the divine ear-rings, from my Lord!
You did bless, with intent false,
That the sacred cord adorning my neck
Should safe remain in its casket.
Oh, the sacred cord blessed to be bright for ever
Which you yourself gave, yourself did take away!

O you unjust Lord! Your words proved true.
And as my famous Lord, battled valiantly
In the field, and stood weaponless for a while,
Treacherously you sidled up to him
And plundered all his merit earned!
Not stopping with that, you took from him
His ear-rings of divine power, and with them his life!
By such base tricks, all his strength you sucked away!
You caused Viturau̱ to break his mighty bow,
By yet another way! So too, you made Turōṇar
Lose his will by a strategem (using Tarumar)
And caused his fall: Kaṅkai's son, Pīṣmar too
Was rendered powerless by you, (through Cikaṇṭi):
Cayattirataṉ lost his life, again through your deceit!
Oh, how neatly you ruined all their might!"

*(என் கணவனை வெல்ல இயலுமோ எனல்)*

*எல்லாப் [1]பலமும் இசைந்தே இருந்துவிட்டால்*
*வெல்வாரோ பஞ்சவர்கள் [2]விழுவாரோ நாயகரும்* 1275

*உம்மைப்போல் [3]பார்த்தனைப்போல் உகாந்தமாய் வந்தாலும்*
*செம்மையுள்ள நாகமதைத் திரும்பத் தொடுத்தாலும்* 1276

*நன்றியுள்ள பஞ்சவரை நாரணரே [4]காண்பாரார்*
*என்றுசொல்ல மாயவனார் ஏதுமுறை யாதிருந்தார்* 1277

1275. இசைந்து - சேர்ந்து. நாயகர் - கணவர், கர்ணர். 1276. உகாந்தம் - யுக முடிவு, பிரளயம்.
1278. தோகையரே - மயில் போன்ற பொன்னுருவியே.

க.சொல் : 1 பிலமும் 2. விளுவாரோ 3. பாத்தனை 4 காண்ம்பாரார்.

**(eṉ kaṇavaṉai vella iyalumō eṉal)**

*ellāp palamum icaintē iruntuviṭṭāl*
*velvārō pañcavarkaḷ viḻuvārō nāyakarum*

*ummaippōl pārttaṉaipōl ukāntamāy vantālum*
*cemmaiyuḷḷa nākamatait tirumpat toṭuttālum*

*naṉṟiyuḷḷa paññcavarai nāraṇarē kāṇpārār*
*eṉṟucolla māyavaṉār ētumurai yātiruntār*

### Can any one vanquish my husband?

"Could the Five have defeated, my Lord Karṇaṉ,
If he had only retained his natural strength?
Would he then, have fallen thus?
Till the end of the aeon, even if many more were to come
Like you and Pārttaṉ, my Lord would have won:
If the serpent-dart had been shot again,
O Nārāyaṇa, would the Five have been seen alive?"
As she rated him thus, Krisṇa said never a word.

*(தருமர் ஒப்புக் கொள்ளுதல்)*

*பொன்னுருவி சொல்ல புதுமையுள்ள தன்மருந்தான்*
*சொன்னதெல்லாம் உள்ளதுதான் தோகையரே யென்றுரைத்தார்1278*

*அப்போது [1]பொன்னுருவி ஆக்கிரமத் தோடெழுந்து*
*மெய்ப்பான [2]கன்னருடன் மேவியே சாகவென்று*

*சு.சொல் : 1. பொண்ணுருவி 2. கண்ணருடன்*

*(Tarumar oppukkoḷḷutal)*

*poṉṉuruvi colla putumaiyuḷḷa taṉmaruntāṉ*
*coṉṉatellām uḷḷatutāṉ tōkaiyarē yeṉṟuraittār*

*appōtu poṉṉuruvi ākkiramat tōṭeḻuntu*
*meyppāṉa kaṉṉaruṭaṉ mēviyē cākaveṉṟu*

### Tarumar agrees with her

When as Poṉṉuruvi spoke these passionate words,
Righteous Tarumar agreed with her, saying:
'You have spoken truly, O queen of peafowl- mien!'

*(முனிவர்களிடமும் தேவர்களிடமும் பொன்னுருவி முறையிடல்)*

*மெய்ப்பாரும் கூந்தல் மடமயிலா ளேதுரைப்பாள்* 1279

*தெய்வேந் திரரே [1]சிறந்ததொரு இந்திரரே*
*மெய்வாய்த்த தேவர்களே மிக்க முனிவர்களே* 1280

சத்த ரிசிகளே சார்வா யிருந்தியளே
மத்த முனிவர்களே மாதவரே சொல்லுகிறேன்
இத்தைப் [2]பொழுதில் [3]எனதுபழி தாருமென்றாள் 1281

1279 ஆக்கிரமம் - சினம். மேவி - பொருந்தி 1281. சத்தரிஷி - ஏழு முனிவர் அத்திரி, ஆங்கீரசர், கிருது, புலகன், மரீசி, புலத்தியன், வசிட்டன். அத்திரி, வசிட்டர், சமதக்கினி, கௌசிகன், பரத்துவாசன், கௌதமன், காசிபன் எனவுங் கூறுவர் இருந்தீரே > இருந்தியளே. மத்த - மற்ற. இத்தை - இற்றை - இன்று.

சு.சொல் : 1 சிரந்ததொரு 2 பொளுதில் 3 எனதுபளி

**(Muṉivarkaḷiṭamum Tēvarkaḷiṭamum Poṉṉuruvi muṟaiyiṭal)**

*meyppāruṅ kūntal maṭamayilā lēturaippāḷ*

*teyvēn tirarē ciṟantatoru intirarē*
*meyvāytta tevarkaḷē mikka muṉivarkaḷē*

*catta ricikaḷē carva yiruntiyaḷē*
*matta muṉivarkaḷē mātavarē collukiṟēṉ*
*ittaip poḷutil enatupaḷi tarumeṉṟāḷ*

**Poṉṉuruvi appealing to the sages and the gods**

Angrily she rose, the anguished queen.
Determined to die along with her husband;
She now called upon the sages and the gods:
'O Tēvēntirā, king of the celestials!
Gods of the upper world! sages numberless!
The seven holy seers! Great Lord Kriṣṇa!
This day now grant me my prayer!

**(சூரியனிடம் முறையிடல்)**

செம்மையுள்ள சூரியரே [1]சிறந்ததொரு அங்கரரே
அம்மானே உம்மை அறியேனே இன்றளவும்
உன்மகனைக் கொல்ல உகந்து மிருந்தீரோ 1282

[2]அழியாப் பொருள்கொடுத்து [3]ஆற்றோடே விட்டீரே
[2]அழியாப் பொருளை அறுத்துவிட்டார் மாயவரும் 1283
[4]ஒழியாப் பொருள்கொடுத்து உத்தரிப்பே னென்றீரே

[4]ஒழியாப் பொருளை உறிஞ்சிவிட்டார் மாயவரும் 1284

சத்து மிரங்கலையோ சந்திரரே சூரியரே
மெத்தனமாய் நின்றீரே [5]விழிகண் குருடாக 1285

[6]அத்தமிக்கும் முன்னேநீர் அன்பாக உம்முடைய
புத்திர னோடே போகவரந் தாரும் 1286

1282. அம்மானே - மாமனே. உகந்தும் - மகிழ்ந்தும். 1284. உத்தரிப்பேன் - ஈடுசெய்வேன், சாதிப்பேன். 1285. சத்தும் - சற்றும். மெத்தனம் - தாமதம். 1286. அத்தமிக்கும் - மறையும். 1287. தாரை - நட்சத்திரம்.

சு.சொல் : 1. சிரந்ததொரு 2 அளியா 3. ஆத்தோடே 4. ஒளியா 5. விளிகன் 6. அஷ்தமிக்கும்

### *(cūriyaṉiṭam muṟaiyiṭal)*

*cemmaiyuḷḷa cūriyarē ciṟantatoru aṅkararē*
*ammāṉē ummai aṟiyēṉē iṉṟaḷavum*
*uṉmakaṉaik kolla ukantu miruntirō*

*aḻiyāp poruḷkoṭuttu aṟṟōṭē viṭṭīre*
*aḻiyāp porulai aṟuttuviṭṭār mayavarum*

*oḻiyāp poruḷkoṭuttu uttarippēṉ eṉṟīrē*
*oḻiyāp poruḷai uriñciviṭṭār māyavarum*

*cattu miraṅkalaiyō cantirarē cūriyarē*
*mettaṉamāy niṉṟīrē viḻikaṇ kuruṭāka*

*attamikkum muṉṉēnīr aṉpāka ummuṭaiya*
*puttira ṉōṭē pōka varantārum*

### Appealing to the sun-god

O Supreme Sun, radiant and ruddy,
O Father-in-law mine, I knew you not till now.
Did you willingly acquiesce in your son's death?
Oh, you gave gift eternal but allowed it
To go floating down the river: and the wily Lord
Sucked away the same. O Sun, O Moon
You but stood blind of eye, when it happened:
Didn't you have any pity or compassion?
Oh, before you set in the west, kindly permit me
To accompany your son to the land of death!"

### (சந்திரனிடம் சப்தமாதரிடம் முறையிடல்)

சந்திரனே வானம் [1]தழைத்தோங்கும் தாரைகளே
வந்தெனக்கு நீங்கள் [2]வைகுண்டம் தாருமென்றாள் 1287

பூமாதே மாமாதே [3]பொன்னின்கரை மாதே
நாமாதே நீமாதே நாகப்பதி மாதே
காமாதே வேணி கனத்த சடைமாதே 1288

தெய்வ லோகத்துச் [4]சிறந்ததொரு கற்புடைய
மெய்வாய்த்த சொல்லுடைய வேண்டும் பலமாதே 1289

உங்களைப்போல் நானும் உகந்ததொரு [5]பெண்ணல்லவோ
உங்களைப்போல் நானும் உகந்திருக்க வேண்டாமோ 1290

சத்து மிரங்கலையே [6]தையல்நல்லா [7]யிந்நேரம்
[8]இத்தனை பேரும் இரங்கா [9]திருந்தியளே 1291

[10]என்கழுத்துத் தாலி இரும்பாக வேயிருந்தேன்
சங்கை யில்லாமல் சடுதியிலே வாங்கிவிட்டீர் 1292

இந்தவகை செய்தீரென் நாயகன்மேல் [11]குற்றமென்ன
சிந்தையிலே நீங்கள் தெரிந்தியளே எல்லோரும் 1293

ஆலிக்க வாழ்ந்து [12]அழியாத கன்னியுங்கள்
தாலிக் [13]கழிவாகச் [14]சற்றுனாள் சென்றிடுமோ 1294

[15]பொன்கழுத்து மங்கிலியம் போத விருந்தாலும்
[16]என்கழுத்து போலே இறுகாதோ [17]உங்களுக்கும் 1295

1288 பூமாது - வாராகி; வராக அவதாரத்தில் பூமி தேவியைக் கொம்பில் தூக்கினார் திருமால். அவரது அம்சமே வாராகி பன்றி முகமுடையவள். மாமாது - மாகேஸ்வரி; சிவனின் அம்சம். பொன்னின் கரை மாது - செல்வத்துக்கு அதிபதி; நாராயணி, விஷ்ணு அம்சம். நாமாது - பிராமி; பிரம்மனின் அம்சம். நீமாது - கௌமாரி; முருகனின் அம்சம். நாகப்பதி - தேவலோகம்; தேவ லோக மாது - இந்திராணி; இந்திரன் அம்சம். கா - சோலை, காடு காமாது - காட்டுக்கதிபதி; காளி வேணி - தலைமயிர் கனத்த சடைமாது - தலைமயிர் அடர்ந்தவள்; காளி. இவர்கள் சப்தமாதர்கள். 1289. கற்பும் உண்மையும் நிறைந்த தெய்வலோகத்துப் பல மங்கையர்களே 1290. உகந்த - தகுதியான. உகந்து - மகிழ்ந்து 1291. தையல் - பெண். 1292. சங்கை - அச்சம். சடுதி - விரைவு. 1293. நாயகன் - கணவன். இங்கு கர்ணன். சிந்தை - மனம். 1294. ஆலிக்க - மகிழ்ந்து மகிழ்ச்சியோடு அழிவில்லாமல் வாழும் கன்னியரே உங்கள் தாலிக்கு அழிவு வர நாளாகுமோ என்று புலம்புகிறாள்.

சு.சொல் : 1 தளைத்தோங்கும் 2. வைய்குண்டந். 3. பொன்னின்ங்கரை 4. சிரந்ததொரு 5. பென்னல்லவோ 6. தய்யல் 7. யின்னேரம் 8. இத்தினை 9 இருந்தியனை 10. என்களுத்து 11. குத்தமென்ன 12. அளியாத 13. களிவாக 14 சத்துனாள் 15. பொண்ங்களுத்து 16. என்ங்களுத்து 17. உன்ங்களுக்கும்

## (Cantiran̲iṭam captamātariṭam mur̲aiyiṭal)

*cantiran̲ē vān̲am taḻaittōṅkum tāraikaḷē*
*vanten̲akku nīṅkaḷ vaikuṇṭam tārumen̲r̲āḷ*

*pūmātē māmātē pon̲n̲in̲ karaimātē*
*nāmātē nīmātē nākap patimātē*
*kāmātē vēṇi kan̲atta caṭaimātē*

*teyva lōkattuc cirantatoru kar̲puṭaiya*
*meyvāytta collutaiya vēṇṭum palamātē*

*uṅkaḷaippōl nān̲um ukantatoru peṇṇallō*
*uṅkaḷaippōl nān̲um ukantirukka veṇṭāmō*

*cattu miraṅkalaiyē taiyalnallā yin̲n̲ēram*
*ittan̲ai pērum iraṅkā tiruntiyaḷē*

*en̲kaḻuttut tāli irumpāka vēyiruntēn̲*
*caṅkai yillāmal caṭutiyilē vaṅkiviṭṭīr*

*intavakai ceytīren̲ nayakan̲mēl kur̲r̲amen̲n̲a*
*cintaiyilē nīṅkaḷ terintiyeḷē ellōrum*

*ālikka vāḻntu aḻiyata kan̲n̲iyuṅkaḷ*
*tālik kaḻivākac car̲r̲unāḷ cen̲r̲iṭumō*
*pon̲kaḻuttu maṅkiliyam pōta viruntālum*
*en̲kaḻuttu pōlē ir̲ukatō uṅkaḷukkum*

### Appealing to the moon and the seven divine matrons

"O Moon in the Sky! scintillating stardoms!
Come thou and deign to grant me the bliss of Vaikuntam!
O Goddess of Earth! O Great Iswari!
O Goddess of wealth! O Brahma's spouse!
O Spouse of Kumara! O consort of Intiran̲!
O Goddess Ancient of the woods with tresses thick!
O Celestial Goddesses of chastity perfect, and true speech!

Am I not like you a woman, equally worthy?
Should I not like you live in happiness?
Oh, None of you have shown pity upon me
All this time; none has shown me sympathy.
Oh, I had my sacred cord durable as iron
Round my neck; without fear and swiftly too
You have taken it back. Oh why,
Why have you done this to me? What crime
Did my Lord commit? You have done this on purpose.
Oh, how long will it take for such a fate
To happen to you also? O you damsels
Living so happily with golden cords round your necks!
Won't it tighten round your necks, like a noose?"

**(தன் நிலையை உவமை வாயிலாய்க் கூறுதல்)**

*பாங்காக நம்பிப் பதுங்கிஉயிர் சாய்த்து*
*வேங்கை எடுத்த வெறும்[1]பாய்ச்ச லானேனே* 1296
*ஆங்கால மெல்லாம் [2]அழைத்து மிகப்பிழைத்து*
*தீங்கு நினைந்தவர்கள் செல்வம்போ லானேனே* 1297

*கொள்ளை யிடப்போய் [3]குழாங்கூடும் பட்சியிலே*
*புள்ளரசுக் கெட்டாத [4]பொற்பாச்ச லானேனே* 1298

*[5]கள்ளவிழும் வெங்கலைகள் [6]கற்றபே ரானாலும்*
*[7]தெள்ளுதமிழ் உம்மையில்லா சீர்கேடி யானேனே* 1299
*[8]வெள்ளம்போல் செல்வம் மிகுந்தே இருந்தாலும்*
*[9]வள்ளல்தான் கீர்த்தி வருவதுபோ லானேனே* 1300

*ஆனிற்கும் பாரை அதிரவிட்டு ஆணியில்லா*
*மூலம் அறுத்த முதல்மரம்போ லானேனே* 1301

*கோலி லடந்த குளுந்தமரம் ஆனாலும்*
*வேலை யடுத்த விருட்சம்போ லானேனே* 1302

*வேண்டிய செல்வம் மிதமாய் இருந்தாலும்*
*காண்டமில் லாத கருத்தாய்ப் போனேனே* 1303

*சோதித் திலங்குமணி துலங்க இருந்தாலும்*

ஆதித்தன் இல்லாத அரும்பூமி யானேனே 1304

சேதியா மூத்தமன்னர் செங்கோல் முறைமைதப்பி
நீதியற்ற ராசன் நெறித்தகுடி யானேனே 1305

சிறக்கும் [10]புகழுக்கு செங்கை இருந்தாலும்
பறக்கும் சிறகற்ற [11]பட்சிபோ லானேனே 1306

பிறக்கும் [12]குடிசரம் பெரிதா யிருந்தாலும்
கறக்கப்பா [13]லற்றதொரு கற்றாபோ லானேனே 1307

[14]ஏர்பாய்ச்சி மெத்த இருந்தபயிர் ஆனாலும்
[15]நீர்பாய்ச்ச லத்த நிரைபயிர்போ லானேனே 1308

[16]சீர்பாய்ச்சி மெத்த செயலாய் இருந்தாலும்
[17]பார்பாய்ச்ச லத்ததொரு பம்பரம்போ லானானே 1309

பரிவுடனே கூடிப் பரம்பெங்கு மேய்ந்து
பிரியாமலே பிரிந்த பேடுபோ லானேனே 1310

கிடைக்கும் பொருளெனவே [18]கீழ்ப்பார் முறியவெட்டி
குடிக்கப் புனல் [19]அற்றதொரு கூபம்போ லானேனே 1311

படைக்கும் பவுசுடனே பதிவா யிருந்தாலும்
அடைக்கக் [20]கதவற்ற [21]அந்தரவீ டானேனே 1312

ஒப்பிலாக் கெங்கையென்று உயர்கீர்த்தி ஆனாலும்
அப்பில்லாப் பொய்கை அரும்பாவி யானேனே 1313

பங்கமில்லாக் கன்னி [22]பழுத்து இருந்தாலும்
கொங்கையில்லா மூப்புக் குமரியள்போ லானேனே 1314

[23]வாகுபெறச் செல்வம் வளமா யிருந்தாலும்
சாகந் தழைவில்லாச் சதிகேடி யானேனே 1315

பேரும் பிறவும் பெருங்கீர்த்தி யானாலும்
[24]ஆருமத்த பாவியென்று அந்திரம்போ லானேனே 1316

மென்மையுள்ள ராசன் விளங்கி யிருந்தாலும்
தனமில்லா [25]வாழ்வு சதிகேடி யானேனே 1317

பாரொாத்த கெங்கை பதியா யிருந்தாலும்

நீரத்த மீன்போல நெடும்பாவி யானேனே 1318

மெய்யான மங்கையென்று மேதினியோர் சொன்னாலும்
கய்யில்லா மங்கை கடும்பாவி ஆனேனே 1319

செப்பமுள்ள [26]காற்றில் செறிந்த நடுக்கடலில்
கப்பல் கவுந்த கடும்பாவி யானேனே 1320

சாயகை [27]மகிழச் சீதனம்பெற் றிருந்தாலும்
நாயக னில்லா நான்பாவி யானேனே 1321

கரிய கரும்பாலை காட்டிலே பற்றிவெந்த
எரிதண லூடே இந்தனம்போ லானேனே 1322

1296. வேங்கை எடுத்த வெறும்பாய்ச்சல் - புலி இரை நோக்கிப் பாய்வதே வழக்கம். இரையில்லாமல் பாய்ந்த புலி போல் என் வாழ்க்கை வீணாயிற்று என்கிறாள்.1297. செல்வம் இருக்கும் காலத்துத் தான்பிழைத்து மற்றவர்க்குத் தீங்கு நினைத்தவர் விரைவில் செல்வம் இழப்பார்கள். அதுபோல் கர்ணன் இருக்கும்போது அவனை மதியாமல் தான் மட்டும் வாழ்ந்து அவனை இகழ்ந்தவள் இன்று அவனையே இழந்தாள். 1298. பட்சி - பறவை. புள்ளரசு - கருடன். கருடனுக்கெட்டா பறவை போல என்வாழ்க்கை ஆனது. 1299 கலைகள் கற்றாலும், தமிழ் போன்ற கர்ணனைக் கல்லாத சீர்கேடி ஆனேன். 1300. வெள்ளம் போல் செல்வம் இருந்தாலும் வள்ளலுக்கு மட்டுமே புகழ் வரும். என்னிடம் எல்லாம் இருந்தும் ஒன்றையும் கொடுக்காததால் புகழ் இழந்தேன். 1301. ஆல் - ஆலமரம். பார் - பூமி. ஆலமரம் நிற்கும் பூமியை அதிர விட்டு ஆணிவேர் இழந்த மரம் ஆனேன். பூமியும் ஆணிவேரும் - கர்ணனுக்கு உவமை. 1302. கோல் - மரக்கொம்பு. வேலை - கடல். விருட்சம் - மரம். 1303. காண்டம் - நூலின் பகுதி. 1304. ஒளி வீசும் நவரத்தினங்கள் நிறைய இருந்தாலும் சூரியன் இல்லாத பூமி ஆனேன். 1305. சேதியா - வெட்டப் படாத இங்கு வடுப்படாத; குற்றமற்ற. நெறித்த - வருத்திய 1307. கற்றா -கன்றை ஈன்ற பசு. 1308. ஏரால் நன்றாக உழுதாலும் நீரில்லாத பயிர் போல் ஆனேன். 1309. சீர் பாய்ச்சி - ஆணி போட்டு. மெத்த - மிக. பார்பாய்ச்சலத்ததொரு. பம்பரம் -கயிறால் சுற்றி நிலத்தில் விடாத பம்பரம். 1310. பரம்பு - வயல்வரப்பு. பேடு - பெண்பறவை. 1311. கிடைக்கும் பொருளெனவே - புதையல் கிடைக்குமென்று. கீழ்ப்பார் முறிய வெட்டி - நீரூற்று அடைக்கும்படி வெட்டி. குடிக்கப் புனலற்றதொரு - குடிப்பதற்கு நீர் இல்லாத. கூபம் போலானேன் - கிணறுபோலானேன். புனல் - நீர். கூபம் - கிணறு. 1312. பவுசு - பெருமை. 1313. பொய்கை - குளம். அப்பு - நீர். 1314. பங்கம் - குறை. கொங்கை - மார்பு. 1315. வாகு - அழகு, ஒழுங்கு. சாகம் தழைவில்லா - பயிர் விளைச்சலற்ற. 1316. அந்திரம் - ஆகாயம் - வெட்டவெளி. 1317. மென்மையான கணவன் இருந்தும், செல்வம் இல்லாதவள் ஆனேன்.

சு.சொல் : 1. பாச்சலானேனே 2 அளைத்து மிகப்பிளைத்து 3. குளாங்கூடும் பச்சியிலே 4. பொற்பாச்சலானே 5. கண்ணவிழும் 6. கத்தபோ 7. தெள்ளுதமிள் 8. வெள்ளம்போல்ச் 9. வள்ளல்த்தான் 10. புகளுக்கு 11 பச்சி. 12. குடிசரம்ப் பெரிதாய் 13. லத்ததொரு கத்தா 14. எறுபாச்சி 15. நீர்பாச்ச 16 சீர்பாச்சி 17. பார்பாச்ச 18. கீள்ப்பார் 19. அத்ததொரு 20. கதவு அத்த 21. அந்திர 22 பளுத்து 23 வாகுபிர 24. ஆறுமத்த 25. வாள்வு. 26 காத்தில் 27. மகிளச்

*(taṉ nilaiyai vuvamai vāyilāyk kūṟutal)*

*pāṅkaka nampip patuṅkiuyir cāyttu*
*vēṅkai eṭutta veṟumpāycca lāṉēṉē*

*āṅkāla mellām aḻaittu mikappiḻaittu*
*tīṅku niṉaintavarkaḷ celvampō lāṉēṉē*

*koḷḷai yiṭappōyk kuḷāṅkūṭum paṭciyilē*
*puḷḷaracuk keṭṭāta poṟpāycca lāṉēṉē*

*kaḷḷaviḻum veṅkalaikaḷ kaṟṟapē rāṉālum*
*teḷḷutamiḻ ummaiyillāc cīrkēṭi yāṉēṉē*

*veḷḷampōl celvam mikuntē iruntālum*
*vaḷḷaltāṉ kīrtti varuvatupō lāṉēṉē*

*āṉiṟkum pārai atiraviṭṭu āṇiyillā*
*mūlam aṟutta mutalmarampō lāṉēṉē*

*kōli laṭarnta kuḷunta maram āṉālum*
*vēlai yaṭutta viruṭcampō lāṉēṉē*

*vēṇṭiya celvam mitamay iruntālum*
*kāṇṭa millāta karuttāyp pōṉēṉē*

*cōtit tilaṅkumaṇi tulaṅka yiruntālum*
*ātittaṉ illāta arumpūmi āṉēṉē*

*cētiya mūttamaṉṉar ceṅkōl muramaitappi*
*nītiyaṟṟa rācaṉ neṟittakuṭi āṉēṉē*

*ciṟakkum pukaḻukkuc cenkai yiruntālum*
*paṟakkum ciṟakaṟṟa paṭcipō lāṉēṉē*
*piṟakkum kukicaram peritā yiruntālum*
*kaṟakkappā laṟṟatoru kaṟṟāpō lāṉēṉē*

*ērpaycci metta iruntapayir āṉālum*
*nīrpaycca letta niṟaipayirpō lāṉēṉē*
*cīrpāycci metta ceyalāy iruntālum*
pārpaycca lattatoru pamparampō lāṉēṉē

*parivuṭaṉē kūṭip parampeṅkum mēyntu*
*piriyāmalē pirinta pēṭupō lāṉēṉē*

*kiṭaikkum poruḷeṉavē kīḻppār muṟiyaveṭṭi*
*kuṭikkap puṉalaṟṟatoru kūpampō lāṉēṉē*

*paṭaikkum pavucuṭaṉē pativā yiruntālum*
*aṭaikkak kaṭavaṟṟa antaravī ṭāṉēṉē*

*oppilāk keṅkaiyeṉṟu uyarkīrtti āṉālum*
*appillāp poykai arumpāvi yāṉēṉē*

*paṅkamillāk kaṉṉi paḻuttu iruntālum*
*koṅkaiyillā mūppuk kumariyalpō lāṉēṉē*

*vākupeṟac celvam valamā yiruntālum*
*cākan taḻaivillāc catikēṭi yāṉēṉē*

*pērum piṟavum peruṅkīrtti yāṉālum*
*ārumatta pāviyeṉṟu antirampō lāṉēṉē*

*meṉmaiyuḷḷa rācaṉ viḷaṅki yiruntālum*
*taṉamilla vāḻvu catikēṭi yāṉēṉē*

*parotta keṅkai patiyā yiruntālum*
*nīratta mīṉpōla neṭumpāvi yāṉēṉē*

*meyyāṉa maṅkaiyeṉṟu metiṉiyōr coṉṉālum*
*kayyillā maṅkai kaṭumpāvi yāṉēṉē*

*ceppamuḷḷa kāṟṟil ceṟinta naṭukkaṭalil*
*kappal kavunta kaṭumpāvi yāṉēṉē*

*cāyakai makiḻac cītaṉamper ṟiruntālum*
*nāyaka ṉillā naṉpāvi yāṉēṉē*

*kariya karumpālai kāṭṭilē paṟṟiventa*
*eritaṇa lūṭē intaṉampō lāṉēṉē*

1441. உகந்த - விரும்பிய. இன்மை - இப்போது. 1443. பிரமலெவி - பிரமன் தலையில் எழுதிய எழுத்து ஏகி - இறந்து. (உன்னுடைய விருப்பங்கள், இன்பதுன்பங்கள் எதுவும் இன்னும் நிறைவடையவில்லை. எனவே இப்போது நீ சாகக்கூடாது. உன் விதி முடிந்தபின் இறந்தால்தான் மோட்சம் என்கிறான்.) 1444 இவளை - பொன்னுருவியை. 1445. மெத்த - மிகவும்.

சு.சொல் : 1. மோச்சமில்லை 2. மணக்கவலை 3. விறும 4 தளுவி 5. மனமகிள்ந்து.

**(ippōtu iṟakkak kūṭatu enal)**

*uṉmaicolli karṇar ukantatoru peṇṇēkēḷ*
*iṉmaiyilē cāka icaiyātu kaṇṭāyē*

*eṉṉoṭē cettāl iruvarukkum mōṭcamillai*
*maṉṉulaki lēyiruntu maṉakkavalai viṭṭuviṭu*

*mēvi yiruntu pirama levimuṭintu*
*ēkiyē vantāl itaṅkoṭuppō muntaṉakku*

*vallatoru karṇaṉ vakaiyāka vārttaicolla*
*ellorum cammatikka ivaḷai maṉantirutti*

*meyppākavē taḻuvi metta maṉamakiḻntu*

**Karṇaṉ telling her not to follow him to death**

Karṇaṉ speaking thus, continued. 'Dearest of women!
You declared you will follow me;
But if you die, neither of us will get liberation.
Continue to be on earth leaving off your worry
And after living out the time appointed, as ordained by Piramaṉ
You come away from here, we'll give you a seat in heaven."
Thus with persuasive words, Karṇaṉ convinced her,
And all present approving, he did embrace Poṉṉuruvi in joy.

**(பாண்டவரைத் தேற்றுதல்)**

அஞ்சுபேர் தன்னை அடவுடனே தானிருத்தி
[1]பஞ்சவரே சொல்லுகிறேன் [2]பார்த்தனுட கய்யாலே
வெஞ்சமரில் சாக விறும லெவிப்படி[3]காண் 1446

என்னே பிரமன் [4]எழுத்தும் படிதப்பாது

நன்றாகப் போய் நற்பதமே [5]சேர்ந்தேன்காண் 1447

தமையன் வதையென்று சஞ்சலத்தை விட்டுவிடும்
சுகமாக அய்வரையும் [6]தோற்றமுட [7]னேதழுவி 1448

பூலோக மாண்ட பெருமாள் அருளாலே
மாயா பாசம் மனக்கவலை தான்தீர்த்து 1449

செங்கோல் [8]முறைமை செலுத்தி அரசாண்டு
பங்கயத்தோன் கட்டளையைப் [9]பாசமுறத்தீர்த்து 1450

[10]வைகுண்டம் சேர வருவீ ரென[11]மொழிந்து
மெய்யான கர்ணன் விரும்பியே சொன்னதற்பின் 1451

*1446 அடவுடனே - முறையாக. 1446 - 1451. "அர்ச்சுனன் கையால் போரில் மடிந்தது பிரமன் எழுதிய எழுத்து. நல்ல பதவியையே அடைந்தேன். அண்ணனைக் கொன்றோமென்ற கவலை வேண்டாம். கவலை தீர்ந்து மாயை பாசம் அகன்று, கண்ணன் அருளால் நீதியோடு அரசாண்டு, கண்ணன் கட்டளைகளைச் செய்து முடித்துப் பின்பு வைகுண்டம் வருவீராக" என்று பாண்டவரைக் கர்ணன் தேற்றுகிறான்.*

*சு.சொல் : 1 பஞ்சவரை 2. பாத்தனுட 3 கான் 4 எளுத்தும் 5. சேந்தேன்கான் 6. தோத்தமுட 7. னேதளுவி 8 முரைமை 9. பாசமுரத்தீத்து 10 வைய்குண்டஞ் 11. மொளிந்து*

## (Pāṇṭavarait tēṟṟutal)

*añcupēr taṉṉai aṭavuṭaṉē tāṉirutti*
*pañcavarē collukiṟēṉ pārttaṉuṭa kayyālē*
*veñcamaril cāka viruma levippaṭikāṇ*

*eṉṉē piramaṉ eḻuttumpaṭi tappātu*
*naṉṟākap poy naṟpatamē cērntēṉkāṇ*

*tamaiyaṉ vataiyeṉṟu cañcalattai viṭṭuviṭum*
*cukamāka ayvaraiyum tōṟṟamuṭa ṉētaḻuvi*

*pūlōka māṇṭa perumāḷ aruḷālē*
*māyā pācam maṉakkavalai tāṉtīrttu*

*ceṅkōl muṟaimai celutti aracāṇṭu*
*paṅkayattōn kaṭṭaḷaiyaip pācamuṟat tīrttu*

*vaikuṇṭam cēra varuvī reṉamoḻintu*
*meyyāṉa karṇaṉ virumpiyē coṉṉataṟpiṉ*

### Consoling the Pāṇṭavas

He then beckoned to the Pāṇṭavas in kindly love
And said to them: "O you Pāṇṭavas!
Listen to my words: It was Piramaṉ's writ,
That I should die in battle at the hands
Of my brother Aruccuṉaṉ and what Piramaṉ
Ordains, never goes wrong: as for me,
I went up happily to attain the divine feet.
No longer grieve in distress that you slew
Your elder brother." He then fondly hugged the Five
And said: "By the grace of Him who rules the world,
Cutting off all false attachments, and leaving off your anguish
Rule with righteous sceptre in hand, carrying out
The commands of the Lord seated in the lotus.
And later ascend to heaven to join me there
In Vaikuntam, the abode of the Lord!"

*(மற்றோரைத் தேற்றுதல்)*

*தாயாரையும் [1]மற்ற சனங்களையும் தான்[2]வாழ்த்தி*
*மாயத்தில் அம்மான் வெறுப்பு வேண்டாங்[3]காண* 1452

*என்றுசொல்லிக் கர்ணன் [4]இருந்தசனம் எல்லோர்க்கும்*
*நன்றி[5]பெற வேநினைந்து நாத னருள்பெற்றார்* 1453

*1452. மாயத்தில் .... காண். வஞ்சனை செய்தான் கண்ணன் என்ற வெறுப்பு வேண்டாம்.*

*சு.சொல் : 1. மத்த 2. வாள்த்தி 3. கான் 4. இருந்தசணம் 5. பிற*

***(maṟṟōrait tēṟṟutal)***

*tāyāraiyum maṟṟa caṉaṅkaḷaiyum tāṉvāḻtti*
*māyattil ammāṉ veṟuppu vēṇṭāṅkāṇ*

*eṉṟucollik karṇaṉ iruntacaṉam ellōrkkum*
*naṉṟipeṟa vēniṉaintu nāta ṉaruḷpeṟṟār*

*(பொன்னுருவி பெருந்திரு இருவரையும் தருமரிடம் ஒப்படைத்தல்)*

*[1]தன்மர் [2]தனையழைத்துத் தார்வேந்தர் [3]அங்கர்கோன்*
*பொன்னுருவி [4]கையும் பெருந்திருவாள் தன்கரமும்*
*மென்மையுள்ள [5]தன்மர்கை விதமாகத் தான்கொடுத்து* 1454
*காப்பாற்றிக் கொண்டு கருத்தா யிருங்களென்றார்* 1455
*அப்படியே தப்பாது அண்ணாவி யென்றுரைத்தார்*

*1454. தார்வேந்தர் - மாலையணிந்த கர்ணன்.*

**சு.சொல்** : *1. தண்மர் 2. தனையளைத்து 3. அங்கர்க்கோன் 4. கய்யும் 5 தன்மர்கையி.*

***(Ponnurvi Peruntiru iruvaraiyum Tarumaritam oppataittal)***

*tanmar tanaiyalaittut tārvēntar aṅkarkōn*
*ponnuruvi kaiyum peruntiruvāḷ tankaramum*
*menmaiyuḷḷa tanmarkai vitamākat tānkotuttu*
*kāppārrik kontu karuttā yiruṅkaḷenrār*
*appaṭiyē tappātu aṇṇāvi yenruraittār*

**Consoling the others and entrusting Ponnuruvi and Peruntiru into Taruman's hand**

Karnan then bowed to his mother and blessed the others,
Telling them not to hate their cousin Lord Krisnan
(For having caused his death by guile).
Beckoning to Taruman the Lord of the Aṅkas.
Took the hands of Ponnuruvi and queen Peruntiru
And placing them in gentle Tarumān's hands,
Entrusted them to his charge, bidding him
Take good care of them both; and Taruman
Promised that he will not fail in his charge.

*(கர்ணன் நான் போகவேண்டும் எனல்)*

*செப்பின கர்ணன் திசைநாலும் [1]தான்பார்த்து* 1456
*மேவி யிருந்த [2]வெஞ்சனத்தைத் [3]தான்பார்த்து*
*தாவும் மனக்கவலை சஞ்சலங்கள் வேண்டாங்[4]காண்* 1457

என்றுசொல்லிக் கர்ணன் இருந்த[5]துரி யோதனனை
நன்றிபெறக் [6]கையெடுத்து நான்போறே னென்றுசொல்லி 1458

1457. வெஞ்சனம் - மக்கள். சஞ்சலம் - கவலை.

சு.சொல் : 1. பாத்து 2. வென்ஞ்சனத்தை 3. தான்பர்த்து 4. கான் 5. திரியோதனனை

**(Karṇan nāṉ pōka vēṇṭum eṉal)**

*ceppiṉa karṇaṉ ticaiṉālum pārttu*
*mēvi yirunta veñcaṉattait tāṉpārttu*
*tāvum maṉakkavalai cañcalaṅkaḷ vēṇṭāṅkāṇ*

*eṉṟucollik karṇaṉ iruntaturi yōtaṉaṉai*
*naṉṟipeṟak kaiyeṭuttu nāṉpōṟē neṉṟucolli*

**Karṇaṉ saying he must go back**

And then Karṇaṉ turned his look to the directions four;
Saw the grief-stricken people gathered round him;
'Leave off all distress and agony,'
He said to them. He then turned to Turiyōtaṉaṉ
And said with folded hands: "Farewell, give me leave to go."

**(தையலை எடுத்துவிடு எனல்)**

மெய்வாய்த்த பெண்ணே மிகுத்ததொரு [1]கன்னியரே
[2]வைகுண்டம் போக வருஞ்சாட்டை வாங்கிவிடும் 1459

என்றுசொல்லக் கேட்டு இயல்பான [3]பெண்கொடியும்
கன்றி மனம்மேய கவலையெல்லாம் தானறுத்து 1460

1459. பெண், கன்னியர் - பொன்னுருவி. சாட்டை - கர்ணன் உடலைத் தைத்த நூல். 1460. பெண்கொடி - கொடி போன்ற பொன்னுருவி. கன்றி - வருந்தி, வாடி மேய - பொருந்திய அறுத்து - நீக்கி.

சு.சொல் : 1. கண்ணியரே 2 வைய்குண்டம் 3. பெண்ங்கொடியும்

**(taiyalai eṭuttuviṭu eṉal)**

*meyvāytta peṇṇē mikuttatoru kaṉṉiyarē*
*vaikuṇṭam pōka varuñcāṭṭai vāṅkiviṭum*

*eṉṟucollak kēṭṭu iyalpāṉa peṇkoṭiyum*

*kanri manammeya kavalaiyellām tānaruttu*

**(பொன்னுருவி கர்ணன் உடலைத் தைத்திருந்த சாட்டையை உருவுதலும், கர்ணன் கைலாசம் போதலும்)**

வெட்சித்துக் கொள்ளும் நாயகரே யென்றுசொல்லித்
[1]தைத்திருந்த [2]தையல் சாட்டை உருவிவிட்டாள் 1461

உருவி விட்டபின்பு உடல்சாய்ந்தான் அங்கர்கோன்
திருவிருக்கும் கண்ணர்பதம் [3]சேர்ந்திருந்திருந்தா ரம்மானை 1462

கர்ணன் நடந்து கைலாசம் [4]சேர்ந்தபின்பு
மன்னவர்கள் பஞ்சவர்கள் மானாள் தனை[5]யமர்த்தி 1463

அய்வருங் கூடி [6]அமர்த்தி அருகிருந்து 1464

நல்லதென்று சொல்லி நங்கையருந் தானிருந்தாள்
எல்லோருங் கூடி இருந்தனர்கா ணம்மானை 1465

1461 வெட்சித்து - மன்னித்து. நாயகர் - கணவர், தலைவர். இங்கு கர்ணன். 1463. மானாள் - மான்போன்ற பொன்னுருவி. அமர்த்தி - தேற்றி. 1464. அய்வர் - பாண்டவர்.

சு.சொல் : 1 தய்த்திருந்த 2. தய்யல் 3. சேந்திருந்தா 4 சேந்த 5. யமத்தி 6. அமத்தி.

**(Ponnuruvi karṇan uṭalait taittirunta cāttaiyai vuruvutalum, karṇan kailācam pōtalum)**

*leṭcittuk koḷḷum nāyakarē enrucollit*
*taittirunta taiyal cāṭṭai uruviviṭṭāḷ*

*vuruvi viṭṭapinpu uṭalcāyntān aṅkarkōn*
*tiruvirukkum kaṇṇarpatam cērntiruntā* **rammānai**

*karṇan naṭantu kailācam cērntapinpu*
*mannavarkaḷ pañcavarkaḷ mānāḷ tanaiyamartti*

*ayvaruṅ kūṭi amartti arukiruntu*

*nallatenru colli naṅkaiyarun tāniruntāḷ*
*ellōruṅ kūṭi iruntanarkā ṇammānai*

## Karṇaṉ asking Poṉṉuruvi to remove the stitches and Karṇaṉ returning to the abode of the gods

'O damsel true and faithful! dear queen!
Take away the stitches, so that I can return to Vaikuntam'
Said Karṇaṉ and Poṉṉuruvi, lithe as a liana
Grew sad again; but overcoming her sorrow,
She removed all the stitches from his wounds
Saying: "Take care of yourself, O husband mine!"
The stitches removed, the king of the Aṅkas fell back dead,
And went straight to the world of the Lord. (Ammāṉai)
And after Karṇaṉ walked up to Kayilai,
On earth below, the five Pāṇṭavas consoled Poṉṉuruvi
Graceful as a deer, and she became quiet and subdued,
In the company of all elders and well-wishers there. (Ammāṉai)

***(மாயவன் கர்ணன் உடலை எரிக்க வேண்டுதல்)***

*ஆதித்தன் [1]மகனை அங்கம் அடக்கவென்று*
*சோதித் திருமுகத்தான் துய்யதொரு மாயவனார்* 1466

*தன்மர் தனை[2]யழைத்துத் தகனப் படுத்துமென்று*
*உன்தமையன் தன்கடனை உள்ளபடி தான்முடித்து* 1467

*அங்கம் அடக்குவித்து அவசரமாய் வாருமென்றார்*
*சங்கையுற்ற மாயனுரை தப்பாமல் பஞ்சவர்கள்* 1468

*1466. ஆதித்தன் - சூரியன். மகன் - கர்ணன். அங்கம் - உடல். அடக்க - எரியூட்ட சோதி - ஒளிபொருந்திய. துய்ய - தூய்மையான. மாயவன் - கண்ணன். 1467. தன்மர் - தருமர். தகனப்படுத்தும் - எரியூட்டும். கடன் - இறுதிக் கடன். ஈமச்சடங்கு. 1468. அங்கம் - எலும்பு; உடல் சங்கை - மதிப்பு.*

*சு.சொல் : 1. மகனெ 2 யளைத்து.*

***(Māyavaṉ karṇaṉ uṭalai erikka vēṇṭutal)***

*ātittaṉ makaṉai aṅkam aṭakkaveṉṟu*
*cōtit tirumukattāṉ tuyyatoru māyavaṉār*

*taṉmar taṉaiyaḻaittut takaṉap paṭuttumeṉṟu*
*uṉtamaiyaṉ taṉkaṭaṉai uḷḷapaṭi tāṉmuṭittu*

*aṅkam aṭakkuvittu avacaramāy vārumeṉṟār*
*caṅkaiyuṟṟa māyaṉurai tappāmal pañcavarkaḷ*

(உடலை எரியூட்டி ஈமச்சடங்கு முடித்தல்)

விந்தை[1]பெறப் பஞ்சவர்கள் மெய்யா யடக்கவென்று
சந்தனக் கட்டை சதிராகத் தானடுக்கி 1469

இந்தனமும் மற்ற யெரிதுரும்பும் தானடுக்கி
மந்திர வேதம் உரைத்துமலர் மேவிவைத்து 1470

செந்தணலை மூட்டிச் சேந்ததொரு [2]நெய்சொரிந்து
வெந்தடக்கிப் பின்பு வேண்டுஞ் சடங்கறுத்து 1471

எள்ளுடனே [3]நீரிறைத்து எல்லாச் சடங்கறுத்து
தெள்ளியதோர் நீர்க்கடனும் [4]தீக்கடனும் தான்முகித்து 1472

யெல்லாச் சடங்கறுத்து [5]யேற்றமுள்ள தன்மருந்தான்
நல்லதொரு [6]மாயவரை வந்துகண்டா ரம்மானை 1473

1470. இந்தனம் - விறகு யெரிதுரும்பு - சுள்ளி. 1472. நீர்க்கடன் - எள்ளும் நீரும் இறைத்து இறுதிக்கடன் செலுத்துதல். தீக்கடன் - ஈமக்கடன். முகித்து - முடித்து என்பதன் பேச்சு வழக்கு.

க.சொல் : 1. பிற 2 நெயி 3 நீரிரைத்து 4. தீய்க்கடனும் 5. யேத்தமுள்ள 6. மாயவரெ

**(uṭalai eriyūtti īmaccaṭaṅku muṭittal)**

*vintaipeṟap pañcavarkaḷ meyyā yaṭakkaveṉṟu*
*cantaṉak kaṭṭai catirākāt tāṉaṭukki*

*intaṉamum maṟṟa yeriturumpum tāṉaṭukki*
*mantira vētam uraittumalar mēvivaittu*

*cantaṇalai mūttic cēntatoru neycorintu*
*ventaṭakkip piṉpu vēṇṭuñ caṭaṅkaṟuttu*

*eḷḷuṭaṉē nīriṟaittu ellāc caṭaṅkaṟuttu*
*teḷḷiyatōr nīrkkaṭaṉum tīkkaṭaṉum tāṉmukittu*

*ellāc caṭaṅkaṟuttu yēṟṟamuḷḷa taṉmaruntāṉ*
*nallatoru māyavarai vantukaṇṭā rammāṉai*

### The Lord directing that Karṇaṉ's body be cremated

The Lord pristine pure, with a face bright as flame,
Then called to Tarumaṉ to arrange for the cremation
Of the son of the Sun-God on a burning pyre.
"Do in proper ritual and form
The obsequies for your elder brother,
And come back after completing the ceremony,"
He instructed Tarumar. And scrupulously obeying
The command of the noble Lord,
The Five Pāṇṭavas made a funeral pyre,
Of sandalwood logs, piled up in order,
Along with dried firewood and faggots;
Mantras apt from the scripture chanted,
Strewing blossoms upon the pyre,
Kindling fire and pouring ghee upon the whole
They cremated the noble king of the Aṅkas:
And, after the burning was done, further rituals
Followed in due form: sesame seeds
Were scattered mixed with water,
As ordained in the ritual texts to satisfy
The manes of the dead,
Through water and fire; and after all this ended,
Noble Tarumar left the crematory
And went to Lord Kriṣṇṇa to report to him. (Ammāṉai)

*(அவரவர் இல்லம் செல்லல்)*

*[1]அந்நேரம் [2]பொன்னுருவி அய்வரையும் தான்[3]வாழ்த்தி* 1474
*நீண்டான் தனை[3]வாழ்த்தி [4]நீடூழி [5]வாழுமென்று*
*மாயவனார் தன்னருகே வந்துநின்றாள் தங்கையரும்* 1475
*அப்போது மாயவனார் அய்வரையும் [6]தானழைத்து*
*மெய்ப்பாகத் தங்கையரே வியாகுலத்தை விட்டுவிடும்* 1476
*[7]கன்னியரே யென்று [8]கருத்தா [9]யனுப்பிவைத்தார்* 1477

போயிருந்தாள் பொன்னுருவி பொன்னான மாளிகையில்
பொன்னுருவி தய்யல் போயொளி முடிந்தபின்பு 1478

[10]துரியோ தனன்முதலாய்ச் செய்யதொரு பஞ்சவரும்
அவரவர்கள் மாளிகையில் வந்திருந்தா ரம்மானை 1479

1475 நீண்டான் - நெடியோன் - திருமால். இங்கு கண்ணன். வாமனனாக வந்து மாவலியிடம் மூன்றடி மண் கேட்டுப்பெற்ற பின் உலகை அளப்பதற்காகத் திருவிக்ரமனாக, நெடியவனாக மாறியவன், திருமால்1475. வியாகுலம் - சஞ்சலம் - கவலை. 1478. தய்யல் - பெண்

சு.சொல் : 1 அண்ணேரம் 2. பொண்ணுருவி 3 வாள்த்தி 4 நீடூளி 5. வாளுமென்று 6. தானளைத்து 7. கண்ணியரே 8 கறுத்தா 9. யனுப்பு 10. திரியோ

### (avaravar illam cellal)

*an̲n̲ēram pon̲n̲uruvi ayvaraiyum tān̲vāḻtti*
*nīṇṭān̲ tan̲aivāḻtti nīṭūḻi vāḻumen̲r̲u*
*māyavan̲ār tan̲n̲arukē vantunin̲r̲āḷ taṅkaiyarum*
*appōtu māyavan̲ār ayvariyum tān̲aḻaittu*
*meyppākat taṅkaiyarē viyākulattai viṭṭuviṭum*
*kan̲n̲iyarē en̲r̲u karuttā yan̲uppivaittār*
*pōyiruntāḷ pon̲n̲uruvi pon̲n̲ān̲a māḷikaiyil*
*pon̲n̲uruvi tan̲man̲aiyil pōyoḷi muṭintapin̲pu*
*turiyotan̲an̲ mutalāyc ceyyatoru pañcavarum*
*avaravarkaḷ māḷikaiyil vantiruntā rammān̲ai*

### Everyone going back to his or her mansion

Pon̲n̲uruvi then hailed the Five Pāṇṭavas
And the lofty Lord Krisṇan̲, that they may live long!
She then went near the noble Lord, who beckoned
To the Five brothers and in their presence
Bade the queen leave off her sorrow
And sent her home with concern and care.
After Pon̲n̲uruvi went back to her golden palace
Turiyotan̲a and others, including the Five,
Each went back to his own mansion. (Ammān̲ai)

(கர்ணன் கதைப்பயன்)

கர்ணன் படைபோர் கருத்தாய் முடிந்ததுவே
[1]கிருபையுடன் கேட்டோர் கிளைகூடி [2]வாழ்ந்திருப்பார் 1480

ஆல்போல் [3]தழைத்து அருகதுபோல் வேரோடி
மூங்கில்போல் அன்ன[4]சுற்றம் முகியாமல் [5]வாழ்ந்திருப்பா 1481

நன்மை [6]பெறுவர் இமையோர் பதம்[6]பெறுவர்
பின்னை [6]பெறுவர் பெருமாளைப் போலிருப்பார் 1482

கயிலாச வாசல் கருணை பதம்11பெறுவர்
மெயிவாச லெங்கும் விளக்கொளியாய்த் தானிருப்பார் 1483

சேர்வார் பதம்[7]பெறுவார் செல்வந் தனையடைவார் 1484

பாடிப் படித்தோரும் பண்பு[8]தமிழ் கேட்டோரும்
நாடித் திருவிருந்தான் நற்பாதம் தான்சேர்வார் 1485

1480. கிருபை - கருணை. கிளை கூடி - சுற்றத்துடன் கூடி. 1481. ஆல் - ஆலமரம். தழைத்து - செழித்து. அறுகு - அறுகம்புல். மூங்கில்போல் - மூங்கில்கள் ஒரே கொத்தாக இணைந்து காணப்படும். 1482. இமையோர் - தேவர். 1485. திருவிருந்தான் - செல்வமாகிய இலக்குமி அமர்ந்த மார்பை உடைய திருமால்.

சு.சொல் :1. கிறுபை 2. வாள்ந்திருப்பார் 3. தளைத்து 4. சுத்தம் 5. வாள்ந்திருப்பார் 6. பெருவர் 7பெருவார் 8.. தமிள்.

## Karṇan̲ kataippayan̲

karṇan̲ paṭaipōr karuttāy muṭintatuvē
kirupaiyuṭan̲ kēṭṭōr kiḷaikūṭi vāl̲ntiruppār

ālpōl tal̲aittu arukatupōl vērōṭi
mūṅkilpōl an̲n̲acur̲r̲am mukiyāmal vāl̲ntiruppār

nan̲mai per̲uvar imaiyōr patamper̲uvar
pin̲n̲ai per̲uvar perumāḷaip pōliruppār

kayilāca vācal karuṇai patemper̲uvar
meyivāca leṅkum viḷakkoḷiyāyt tān̲iruppār

cērvār patemper̲uvār celvan tan̲aiyaṭaivār

pāṭip paṭittōrum paṇputamil̲ kēṭṭōrum
nāṭit tiruviruntān̲ nar̲pātam tān̲cērvār

### The benefit of listening to Karṉaṉ's story

Thus ends the story of the battle of Karṉaṉ;
Those who listen to it with interest
Will live prosperously with their kith and kin;
Luxuriant as a banyan tree and rooted as the harialli grass;
And lush as a clump of bamboos,
With their relations and agnates, they will flourish!
All good will accrue to them:
They will attain to the world of the winkless gods.
Benefits they will get more and more
Opulent as the great God Viṣṇu!
They will attain entry through the threshold of Kayilai.
In their mansions, they will shine bright as light!
They will acquire all wealth:
They will attain the feet of God!
All those who sing this Ammāṉai,
And listen to this Tamil work noble,
Are sure to reach the goodly feet divine
Of the Lord who has golden Lakṣmi enthroned in his heart!

### வாழ்த்து

*[1]வாழி மிக[1]வாழி மன்னவர்கள் தான்[1]வாழி*
*ஆழி தனில்துயிலும் ஆயனார் தான்[1]வாழி* 1486
*மாயவனார் தான்[1]வாழி மகாதேவர் தான்[1]வாழி* 1487
*எல்லோரும் [1]வாழி இப்புவியோர் தான்[1]வாழி*
*நல்லவரும் ராசாக்கள் மந்திரிமார் தான்[1]வாழி* 1488

*1486. ஆழி - கடல். பாற்கடல். 1487. மாயவன் - திருமால். மகாதேவர் - சிவன்.*

*சு.சொல் : 1. வாளி*

### vāḻttu

*vāḻi mikavāḻi maṉṉavarkaḷ tāṉvāḻi*
*āḻi taṉiltuyilum āyaṉār tāṉvāḻi*
*māyavaṉār tāṉvāḻi makātēvar tāṉvāḻi*

*ellōrum tāṉvāḻi ippuviyōr tāṉvāḻi*
*nallavarkaḷ rācākkaḷ mantirimar tāṉvāḻi.*

தனிப்பாடல்

விருத்தம்

கருத்துடன் கர்ணன் மீதில் கதைதனைப் படித்த பேரும்
கருத்துடன் சொன்ன பேரும் கருத்துடன் கேட்ட பேரும்
வருத்தமில் லாதி ருந்து வருவினை பாவம் போக்கி
திருத்தலங் கய்யி லாச நாதர்பதம் சேர்வார் தாமே

தனிப்பாடல் : கயிலாச நாதர் - சிவன்

## taṉippāṭal

**Viruttam**

*karuttuṭaṉ karṇaṉ mītil kataitaṉaip paṭittapērum*
*karuttuṭaṉ coṉṉa pērum karuttuṭaṉ kēṭṭa pērum*
*varuttamil lāti runtu varuviṉai pāvam pōkki*
*tiruttalaṅ kayyi lāca nātarpatam cērvār tāmē.*

## Benediction

Praise be, Oh, praise be, to the royal kings!
Praise be to the Lord slumbering in the ocean deep!
Praise be to Lord Kriṣṇaṉ! Praise be!
Praise be to Lord Mahātēvar!
Praise be to all! praise be to the people of the earth
Praise be to all good men, kings and ministers!
All those who read the story of Karṇaṉ with care,
All those who earnestly narrate the story,
And those listen to it with interest,
Will not have any worry; they will be relieved
Of the burden of all their past sins, till at last they attain,
Of a certainty, the feet of the Lord of holy Kayilai!

* * *

## இணைப்பு-1
## துணை நூல்கள்

### ஓலைச் சுவடிகள்


| | | | |
|---|---|---|---|
| 1. | கர்ணன் கதை சண்டை (அ) கர்ணன் படை போர், | ஆசியவியல் நிறுவனம், செம்மஞ்சேரி, சென்னை-119. | எண் 347 |
| 2. | பொன்னுருவி புலம்பல், | ஆசியவியல் நிறுவனம், செம்மஞ்சேரி, சென்னை-119. | எண் 1 ஏ |


### தமிழ் அச்சு நூல்கள்


| | | | |
|---|---|---|---|
| 1. | அகநானூறு, | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. | 1949 |
| 2. | அபிதான சிந்தாமணி, | ஆ. சிங்காரவேலு முதலியார், ஆசியன் எஜுகேஷனல் சர்வீஸ், டில்லி. | 1988 |
| 3. | அரங்கநாதக் கவிராயர் பாரதம், | கோவிந்தப்பிள்ளை, (பதி.), சென்னை. | 1902 |
| 4. | ஆதிபருவத்தாதி பருவம், | தி. சந்திரசேகர், (பதி.), மதறாஸ். | 1951 |
| 5. | உலக இலக்கியங்கள், | கா. அப்பாதுரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. | 1967 |
| 6. | ஏட்டில் எழுதாக் கவிதைகள், | செ. அன்னகாமு, | 1959 |
| 7. | கர்ணமகாராஜன் சண்டை, | புகழேந்திப் புலவர், பி. ரத்னநாயகர் அண்டு சன்ஸ், சென்னை. | 1817 |
| 8. | கர்ண மோட்சம், | Hanne M.de Bruin, (Translation), Leiden. | 1994 |
| 9. | கலித்தொகை (மூலமும், நச்சினார்க்கினியர் உரையும்), | இ.வை. அனந்தராமையர், (பதி.), தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். | 1984 |

| | | |
|---|---|---|
| 10. சந்திரபதன் கதை, | வா. நூ. கலீலுல்லா, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. | 1996 |
| 11. சாசனத் தமிழ்க்கவி சரிதம், | மு. இராகவையங்கார் ஆர். ஜி. பிரஸ், சென்னை. | 1937 |
| 12. சிலப்பதிகாரம்(மூலமும், அரும்பதவுரையும், அடியார்க்குநல்லாருரையும்), | உ. வே. சாமிநாதைய்யர், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1985. | 1985 |
| 13. சீவகசிந்தாமணி, | பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. | 1974 |
| 13. தமிழ் இலக்கிய வரலாறு, 13. 14. 15 ஆம் நூற்றாண்டுகள், | டி. வி. சதாசிவ பண்டாரத்தார், அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, அண்ணாமலை நகர். | 1957 |
| 14. தமிழ் நாட்டு மக்களின் மரபும், பண்பாடும், | சோமலெ., நேஷனல் புக் டிரஸ்ட், புதுடெல்லி. | 1961 |
| 15. தமிழ் வரலாறு, | ரா. இராகவையங்கார், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர். | 1979 |
| 16. தமிழர் நாட்டுப் பாடல்கள், | நா. வானமாமலை, என். சி. பி.. எச்., சென்னை. | 1964 |
| 17. திருவாசகம் | ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் (உ. ஆ.), ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை. | 1985 |
| 18. தேரோட்டி மகன் (ரேடியோ நாடகம்), | பி. எஸ். ராமையா, அமுத நிலையம் (பி) லிமிடெட், சென்னை. | 1957 |
| 19. தொல்காப்பியம் | க. வெள்ளைவாரணன், | 1983 |

| | | |
|---|---|---|
| (புறத்திணையியல்) | மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை. | |
| 20. தொல்காப்பியம் (பொருளதிகாரம்) இளம்பூரணர் உரை, | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. | 1953 |
| 21. நல்லாப் பிள்ளை பாரதம், | உ. முத்துராமலிங்கத் தேவர் (பதி.), ஆதிகலாநிதி அச்சுக் கூடம், சென்னை. | 1888 |
| 22. நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள் பகுதி I, | தே. லூர்து, பாரிவேள் பதிப்பகம், பாளையங் கோட்டை. | |
| 23. நாட்டுப்புற இயல் ஆய்வுகள், | ஆறு. இராமநாதன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை. | 1988 |
| 24. நாட்டுப்புற இலக்கிய வரலாறு, | ச. சண்முக சுந்தரம், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம். | 1988 |
| 25. நாட்டுப்புற இயல், | - do - | 1989 |
| 26. நாலாயிர திவ்வியப் பிரபந்தம், | கி. வேங்கடசாமி ரெட்டியார்(பதி.), திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை. | 1981 |
| 27. பத்துப்பாட்டு மூலம், | உ.வே. சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடு, சென்னை. | 1993 |
| 28. பதிற்றுப்பத்து (மூலமும் விளக்க உரையும்), | ஔவை. சு. துரைசாமிபிள்ளை (பதி.), சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. | 1950 |
| 29. பதினோராம் திருமுறை, | ஸ்ரீலஸ்ரீ. கயிலைமாமுனிவர் மணிவிழா நினைவு வெளியீடு, ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். | 1991 |
| 30. பரிபாடல் | புலியூர்க் கேசிகன், | 1997 |

(மூலமும் தெளிவுரையும்), பாரி நிலையம், சென்னை.

31. பாரத நூல்களின் திறனாய்வு, அ. விசுவநாதன், காரைக்குடி. 1979

32. பிங்கல நிகண்டு, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. 1970

33. புறநானூறு (மூலம்), உ. வே. சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடு, சென்னை. 1993

34. பொன்னுருவி மசக்கை, புகழேந்திப் புலவர், ஆர்.ஜி. பதி அண்டு கம்பெனி, சென்னை. 1874

35. மணிமேகலை, புலியூர்க் கேசிகன் (உ. ஆ.), பாரிநிலையம், சென்னை. 1997

36. முத்தொள்ளாயிரம், ரெ. முத்துக்கணேசன் (உ. ஆ.), முல்லை நிலையம், சென்னை. 1995

37. மூவர் தேவாரம்-தலமுறை (அடங்கல் முறை), வே. மகாதேவன் (பதி.), ஸ்ரீ காம கோடி ஆய்வுமையம், கும்பகோணம். 1988

38. மெய்க்கீர்த்திகள், பூ. சுப்பிரமணியம் (பதி.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. 1983

39. யாப்பருங்கலம் (பழைய விருத்தியுரையுடன்), மே.வீ.வேணுகோபாலப்பிள்ளை (பதி.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. 1998

40. வில்லிபாரதத்தில் கண்ணன், சு. வள்ளியம்மாள், வாணி பதிப்பகம், சென்னை. 1989

41. வில்லிபாரதத் திறவுகோல், ச. கு. கணபதி ஐயர், பாரதி அச்சுக் கூடம், மதுரை. 1940

42. வில்லிபாரதம், மர்ரே அண்டு கம்பெனி, 1959

| | | | |
|---|---|---|---|
| | 4 பாகங்கள் | சென்னை. | |
| 43. | வீரசோழியம், | க. ரா. கோவிந்தராஜ முதலியார் (பதி.), பவானந்தர் கழகம், சென்னை. | 1942 |
| 44. | வீரபாண்டிய கட்டபொம்மு கதைப்பாடல், | நா. வானமாமலை, மதுரைக் பல்கலைக் கழகம், மதுரை. | 1971 |
| 45. | ஸ்ரீ கிருஷ்ண சரித்ர விமர்சம், | வி. எஸ். ராமசாமி சாஸ்திரி (மொ.ஆ), மதுரைத் தமிழ்ச் சங்கம், மதுரை. | 1938 |
| 46. | ஸ்ரீ மகா பாரதம் ஆதி பருவம், | ஸ்ரீநிவாசாச்சாரியார் (மொ.ஆ.), திருவல்லிக்கேணி. | 1923 |
| 47. | ஸ்ரீ மகா பாரதம் உத்யோக பருவம், | கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகள் (மொ.ஆ.), கேசரி அச்சகம், சென்னை. | 1928 |
| 48. | ஸ்ரீ மகா பாரதம் கர்ண பர்வம், | டி. வி. ஸ்ரீநிவாசாசார்யார் (மொ.ஆ.), கேசரி அச்சகம், சென்னை. | 1933 |
| 49. | ஸ்ரீ மகா பாரதம் சபா பர்வம், | ஈ. ஸ்ரீநிவாசாசார்யார் (மொ.ஆ.), வைஜயந்தி பிரஸ், சென்னை. | 1910 |
| 50. | ஸ்ரீ மகா பாரதம் சாந்தி பர்வம், | - do - | 1912 |
| 51. | ஸ்ரீ மகா பாரதம் துரோண பருவம், | டி. வி. ஸ்ரீநிவாசாசார்யார் (மொ.ஆ.), கேசரி அச்சகம், சென்னை. | 1933 |
| 52. | ஸ்ரீ மகாபாரதம் பீஷ்ம பர்வம், | கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகள் (மொ.ஆ.), கேசரி அச்சகம், சென்னை. | 1929 |
| 53. | ஸ்ரீ மகா பாரதம் விராட பர்வம், | அ. வேங்கடாசாரியார் (மொ.ஆ.), வைஜயந்தி அச்சகம், சென்னை. | 1912 |

ஆங்கில அச்சுநூல்கள்


| | | |
|---|---|---|
| 1. A New history of Sanskrit Literature, | Krishna Chaitanya, Asia Publishing house, Bombay. | 1952 |
| 2. A study of Mahabharat, | R.V. Vaidya, Poona. | 1967 |
| 3. Balled Poetry, | M. Arunachalam, Gandhi Vidyalayam, Trichitrambalam. | 1976 |
| 4. History of Classical Sanskrit Literature, | M. Krishnamachariyar, Tirumalai-Tirupathi Devastanam Press, Chennai. | 1937 |
| 5. Indian Philosophy Volume II, | S. Radha Krishnan, George Allen, & Unwin Ltd., London. | 1948 |
| 6. Lord Sree Krishna, His life and Teachings Volume II, Mathura & Dwaraka Leela, | Makhan Lal Sen, Oriental Publishing Company, Calcutta. | 1955 |
| 7. On the meaning of the Mahabharata, | V.S. Sukthankar, The Asiatic Society of Bombay, Bombay. | 1957 |
| 8. The Mahabharata - A Criticism, | C.V. Vaidya, A.J. Cambridge & Co., London. | 1905 |
| 9. The Ramayana and the Mahabharata, | Ramesh.C.Dutt, J.N. Dent & Sons Ltd., Newyork. | 1898 |
| 10. Tamil Lexican Vol. I to VI, | Madras University, Madras. | 1982 |

# இணைப்பு-2

## சொல்லடைவு

(எண்-கண்ணி எண்)

## இணைப்பு-3

## பொன்னுருவி புலம்பல்

வந்து புகுந்திருந்தார் வயிரமணி மண்டபத்தில்
இந்து நுதலழகாள் ஏந்து தனத்தழகாள் 1
கொஞ்சுங் கிளிமொழியாள் கோகனக மார்பழகாள் 2
வண்ண மயிலருகே வந்துபுறம் சார்ந்திருக்கும்
அன்னம் விளையாடும் அவள்நடையைக் கண்டிருந்து 3
வஞ்சியிடை மின்னாள் வயிற்றழகு மாவிலைபோல்
கொஞ்சுங் கிளிமொழியாள் கோகனகப் பொன்னுருவி 4
பொன்னுருவி யந்நேரம் புண்டரிக மாடம்விட்டு
அந்நேரம் பொன்னுருவி அரைசர் சபைநடுவே 5
மானாரும் வந்துமிக மன்னன் படுகளத்தில்
தேனாரும் வண்மை திருவனையாள் தான்புலம்பி 6
வந்து புகுந்தழுதாள் வாய்த்த களந்தனிலே
அந்த மணிமாடம் அரைசு மிழந்தீரோ 7
உன்னைப்போ காதேயென்று உடன்விலக்கக் கேளாமல்
என்னைவிட்டு நீர்போக இயல்வோ வென்றழுதாள் 8
நட்புடைய நாகக்கணை நான்தொடுப்பே னென்றீரே
சொற்படியே நீருந் துணிந்து பொருகையிலே 9
தொட்ட கணையைத் திருமாலுஞ் சூதுசெய்து
பட்டுவிழப் பவளிகொண்டு வந்தா னென்றுசொல்லி 10
பொய்த்தலையைக் கட்டிப் பொருமென்று சூதுசெய்து
மெய்த்தலை தன்னை விசைய னொளிப்பதற்கு 11
தேடுதமிழ் விசையன் செய்யபடை வீடுதன்னில்
ஓடும்படை தூதர் ஓடவிட்டார் கண்டீரே 12
எடுத்துவந்து பொய்த்தலையை இயல்விசையன் தான்வாங்கி
தொடுத்தபுகழ் வில்லி சூதாக வேவிசையன் 13
மெய்த்தலையைத் தானொளித்து வெகுசாரிக் கோலமுடன்
பொய்த்தலையைக் கட்டியே பொருதா னருச்சுனனும் 14

தம்பிதன்னைக் கண்டு சலித்துச் சரந்தொடுத்தீர்
அம்புதான் சென்று அறிந்துமெள்ள ஓடிவந்து 15

மன்னா யெனையேவும் வாள்விசையன் தன்மேலே
இன்னமெனை யேவுமென்றான் எச்சில்தொடோ மென்றீரே. 16

யென்னவினை செய்தேன்நான் என்றழுது பொன்னுருவி
முன்னைவினை வந்து முடிந்ததுவோ வென்றழுதாள் 17

மன்னவர்க் கரசர்கோவே மகுடவர்த்தின னவரேறே
தென்னவரை உயர்த்தோன் சிறந்தநல்துணை வாவுந்தன் 18

அன்னையார் சொன்னவார்த்தை அகற்றவெளி தோயென்றோ
பொன்னகர் அறியஇன்று பொருதுநீர் மாண்டதென்றாள் 19

பொன்னுருவியும் பதறிப் புகழ்கன்னன் தன்னடியில்
மின்னு மிடியெனவே விழுந்தலறித் தானழுதாள் 20

வெத்தி விசகர்ணன் மிக்க சிரசுருள
மத்தியுள்ள பார்த்தன் பாசுபதந் தான்தொடுக்க 21

நன்றி யுடனுமக்கு நன்மணி யாம்புதல்வன்
பொன்றினா னென்றோ புதல்வன் விசகர்ணன் 22

மாண்டுவிட்டீர் மன்னவரேயென் மங்கிலிய மும்மிழந்தேன்
நீண்டானும் பார்த்தனுமாய் நிச்சயமாய்க் கொல்வரென்றே 23

முந்தஉரைத் தேனேஅந்த மொழியதனைக் கேளாமல்
வந்து விசையருட வாளியினால் மாளவென்று 24

இந்தயெழுத் தோபிரமன் எழுதினது முன்சிரசில்
வந்தவர்க்கும் ஏத்தவர்க்கும் வள்ளல்நீர் சொர்ணமதை 25

இப்புவியில் இப்படித்தான் ஈயவல்லார் சொல்லுமென்றார்
மற்பரியும் தோளானே மன்னவனே யுன்மேனி 26

சற்றசத நீர்குளித்து சவ்வாது புனுகணிந்து
மெத்தையின்மேல் நித்திரைதான் கொள்ளாமல் நீருமிங்கே 27

வானவர்கள் தானறிய மண்மேல் துயில்வானேன்
தானவரே நானடியாள் தான்குத்தஞ் செய்ததுண்டோ 28

சோறுகறி யானதிலே சொல்பிழைகள் வந்ததுண்டோ
மாறுபட மண்சுமந்த வள்ளலார் தாமறிவார் 29

வாசமுள்ள தூங்குமஞ்சி மணவறையி லேயிருக்க
நேசமுள்ள நோமணலில் நித்திரைசெய் வானேங்காண் 30

வாரமுடன் மணவறையில் மல்லிகைசெண் பகம்விரித்து
தாரமுகம் மகாணயென்னை தானங் கருந்திவிட்டு 31

கானகத்தி லெய்தக் கட்டளையோ மன்னவனே
என்னகத்தில் வாராமல் இங்கே கிடப்பானே(ன்) 32

தாசியர்கள் கன்னியர்கள் தமிழ்பாடி ஆடிவர
ஆதியரு ளாலே அரைசிருக்க வேண்டாமோ 33

மன்னர் புடைசூழ வாணர் கவிபாட
சொன்னமகு டந்தலையில் சூடா மணியிலங்க 34

நாற்றிசையுங் கீர்த்திபெற்ற நல்லோர் பெரியோர்கள்
காத்திருப்பார் தேடிக் கனமணி மேடையிலே 35

வந்தவரோ டங்கிருந்து மனுநீதி பேசாமல்
சுந்தரஞ்சேர் மன்னா சொகுசோ யிதுவுமக்கு 36

தூங்கும் நரசிப்ப ராசன்மேல் சொல்பயிலுங் கிள்ளையுடன்
ஓங்கு மொழிபேசி உடனிருக்க வேண்டாமோ 37

இந்தப் புழுதிமண்ணில் கிடக்க விதிவசமோ
எந்தன் சிரசில் எழுதியவா றிப்படியோ 38

பச்சைப் புனுகு பரிமளங்கள் உள்ளதெல்லாம்
இச்சையுடன் திமிர்ந்து இனிதிருக்க வாராமல் 39

சுத்தவெளி தனிலே சூழ நரிபேய்கள்
எத்திசையுங் காத்திருக்க இங்கிருக்க நீதியுண்டோ 40

சத்த சுரத்தோடுஞ் சங்கீதந் தன்னோடும்
நித்திரை செய்யாமல் நீருறங்க நீதியுண்டோ 41

தம்பி விசகர்ணன் தன்னுடனே சேனையெல்லாம்
நம்பி இருந்துவிட்டேன் நாயகரே நானுமெத்த 42

அம்புவி சேர்வேந்தன் அரியதுரி யோதனனும்
வம்பு செயவென்று வழங்கினா னும்முயிரை 43

எந்தன்மக னுந்தன்புதல்வ னேத்த விசகர்ணன்
வந்து சமர்க்களத்தில் மாண்டானே வென்றழுதாள் 44

ஆதிமுத லானகுரு வான துரோணரையும்
சோதினைக் கேடம்புவியில் சொல்லிச் சிரசரிந்தான் 45

வாரமுட னுங்கள்கிளை வாய்த்ததொரு வீடுமரை
பாராம லுங்கள்கிளை பறந்தோடிச் சங்கபதியாள் 46

கணவ னெனவுங் கண்டிருந்த தேத்தரைசும்
குணமறியா நூற்றுவரும் கோடிபல வேந்தர்களும் 47

அன்றுநல்ல மாயனார்க் காகுலந் தனைத்தான்
சென்றறுத்தாற் போலே சிரசறுத்தார் பஞ்சவர்கள் 48

சித்தந் தெளிந்து துரியோ தனப்பெருமாள்
மெத்தமகிழ்ந் திப்போர்க்கு விரையப்போ மென்றாரோ 49

அந்த மொழிகேட்டு அடியாள் சிறுமனையில்
வந்தீர் திருவெண்ணீறு வாங்கவென்று யென்கரத்தால் 50

அப்போது சொன்னேன் அடியாள் கனவுகண்டு
செப்பமுட னேஉனது திருவுளத்துக் கேத்துதில்லை 51

மைவளருங் கண்ணாள் மகனே இனியுமக்கு
பையரவம் பூண்ட பரமன் திருவுளத்தால் 52

ஐய மிடுவாரார் ஆற்றுவா ரென்றுயரம்
செய்து மிதுவகையோ சிவனே யெனவழுதாள் 53

பைகொண்ட நாகமதில் பள்ளிகொண்ட மாயவனார்
வைகுண்டம் போனீரோ மகனே யெனைத்தேடி 54

அப்போதே சொன்னேன் அரவக் கணைதொடுத்தால்
செப்பரிய பாத்தனுயிர் தெய்வலோ கம்புகுமே 55

அந்நாளில் சொன்னேனே அதுநீரும் கேட்டிலையே
இந்நா ளிறந்தீரே யென்றுபுலம்பி அழுதாள் 56

மோதி யருச்சுனன் முட்டிப் பொருதாக்கால்
சூதிற் பெரியவன்காண் தேர்விசையன் என்றேனே 57

காண்டா வனமெரித்தான் கையில் சிலையிருக்க
வேண்டாங்காண் என்று விலக்கினேன் கேட்டிலையே 58

அன்றா லிலையையெய்த அம்பொன்று தானிருக்க
வென்றியுள்ள குந்திமின்னாள் மிக்கவிர தம்முடிக்க 59

சென்றுதெய்வ லோகமதில் தெய்வேந் திரனிடத்தில்
அன்று பரிகலமும் அவன்தேவி மார்தனையும் 60

கொண்டு வரவெய்திக் கொடிய சிலையிருக்க
அண்டிப் பொருவார்களோ ஆனகாண் டீபனுடன் 61

நீண்டா னவன்தேர்க்கு நிலைப்பாக னாயிருக்க
மாண்டார் எலும்பணியும் மகாதேவர் வரத்தாலும் 62

காரிருள்போல் மலபிலங் கையருகே வந்தாலும்
போரில் அருச்சுனனைப் பொருதுவெல்லப் போகாது 63

என்றுநான் சொன்னேனே யென்வார்த்தை கேளாமல்
இன்றுபஞ்ச பாண்டவரை எதிர்த்துச் சமர்பொருது 64

அன்று பழிகூறும் அந்நாகம் தன்னாலே
கொன்று விசயனையுங் குருநாட்டை ஆள்வனென்று 65

வந்து சமர்க்களத்தில் மாண்டீ ரெனவழுதாள்
உந்தன்மகன் கருணன்தான் உடனே மாண்டானே 66

ஆண்டே யடியாள்கு ஆருதவி யென்றழுதாள்
பூண்ட பணியுமுந்தன் பொற்பணியும் நேரிலங்க 67

தென்னாளும் வண்மை துரியோ தனப்பெருமாள்
மன்னா உமக்கு மணிமுடியை வைத்தாரே 68

இந்நா ளளவும்நமக் கின்னமுதம் ஈய்ந்தாரை
பொன்னாரு மார்பா பொறுக்குதில்லை யென்மனது 69

குருகுலத்தி லென்றுங் கொடியசம ர்பொரவே
பொருவதற்கு நீர்தான் பொருந்தி வருகையிலே 70

சொன்னேன் வழக்காக யென்சொல்லைக் கேளாமல்
மன்னா உனது மணிமுடியுந் தோற்றாயே 71

இன்னாள் விசையனுடன் இசைந்து சமர்பொருது
பொன்னான மேனி புழுதிமணம் உண்டீரே 72

மன்னா விசையனுந்தான் மகனைவதைத் தாயெனவே
இன்னாள் மகனோ டிறந்தீரே யென்றழுதாள் 73

பூண்ட விசையனையும் பொருது தலையறுத்து
நீராண்ட ராச்சியத்தை நீராண்டு கொள்ளாமல்
மாண்டு விடுவார்களோ மன்னவரே நீருமின்று 74

அவத்தமாய் மாண்டீரே யரைசே யெனவழுதாள்
தவத்தால் பெரியமன்னா தாடாளா யென்கோவே 75

பூண்ட விதிவசமோ புண்ணியரே இப்பொழுது
பாண்டவரைக் கொன்று பகைதீர்த்துக் கொள்ளாமல் 76

இன்றுவந்து பேடிகையில் இளந்தலையாய் மாண்டீரே
என்றுசொல்லிப் பொன்னுருவி இரங்கி மிகவழுதாள் 77

பள்ளி யறையும் பளிங்குமா மண்டபமும்
தெள்ளிய பொற்றூணும் சிறந்திருக்கு மண்டபமும் 78

சந்தனப் பொற்றூணுஞ் சாதிலிங்க மண்டபமும்
தந்தனா வென்றுபெண்கள் தானிசல்கள் பாடிவர 79

கஞ்சன வேல்விழியார் கட்டியங்கள் கூறிவர
பஞ்சணை மேல்துயின்ற பசும்பொன் னுடலதுதான் 80

கழுகு நரிஓரி காத்திருக்க இப்புவியில்
புழுதி தனிற்புரள பொறுக்குமோ புண்ணியரே 81

என்று முகத்தறைந்து இரங்கி மிகவழுதாள்
கன்றி மனமேங்கிக் கவரிமான் கன்றதுபோல் 82

நின்று புலம்பியவள் நெடுமூச்சு தானெறிந்து
என்றும்மைக் காண்பே னென்றழுதாள் பொன்னுருவி 83

என்னைப் புலம்பவைத்து ஏகிநீர் போனதென்ன

உன்னைப் பிரித்திருக்க ஒருநாழி கைக்கரிதே 84

மன்றனைய மொய்குழலாள் மன்னர்கன்ன னுக்குரியாள்
குன்றனைய மென்முலையாள் கோகுலம்போ லேமறுகி 85

எனக்குதவி தானுமில்லை யென்செய்வே னென்றழுதாள்
தனக்குவினை வாரதுவைத் தானறியா மல்நீர்தான் 86

கூத்தன் சமர்க்களத்தில் கோவேநீர் தான்விலக
பாத்தனுடன் பொருது பட்டிறந்தீர் மன்னவரே 87

சற்றுநான் வாழச் சனியன்பொறுத் தானிலையே
குற்றமுறச் செய்தீரே குணமாங் குணக்கடலே 88

எந்நாளுஞ் சத்துருவாய் நின்றா னியல்விசையன்
அந்நா ளுரைத்தேனே அந்தவுரை கேட்டிலையே 89

மைவண்ணர் செய்த வகையறிய மாட்டாமல்
பொய்வண்ண மாகவொரு புன்கிழவ ரைப்போலே 90

கையில் தடியூன்றிக் கக்க லிருமலுமாய்
மெய்யில் குடைபிடித்து விழுவாரைப் போல்நடந்து 91

வந்தானே உம்மிடத்தில் வாங்கக் கவசமதை
அந்த உபாயம் அறியாமல் நீர்கொடுத்தீர் 92

மாயன்பல வேசமாகச் சமைந்து வந்து
வாயம்பல துரைத்தானென் மங்கலநா ணீந்தேனே 93

நாடறிய ஈசர்தந்த நல்லகூ டாமணியை
ஏடவிழும் மாயனம்மை யேய்த்துப் பறித்தானே 94

மன்னவரே நம்முடைய வச்சிராங்கிச் சுவடும்
என்ன வுபாயமதா யேய்த்துப் பறித்தானே 95

அத்தனையும் நீர்கொடுத் தறியாம லன்னையர்க்கு
பித்தர்மே லாணையிட்டீர் பிராணசர மொன்றெனவே 96

மண்தனை யுண்டுமிழ்ந்த மாய னருகிருந்து
கொன்றாலென் செய்வேன் கொலைக்களத்தில் கூடநின்று 97

நண்ணார் புரமெரித்த நாதன்தா ளோயிதுதான்

விண்ணோர்கள் தானறிய உன்மேனி புழுதிபட 98

என்றோ பிரமன் எழுதினதும் உன்சிரசில்
இன்றோ ஏன்மறந்தீர் என்றழுதாள் பொன்னுருவி 99

அலையில் துரும்பானேன் ஆவி சருகானேன்
சிலையில் பெரியமன்னா சிவனே யெனவழுதாள் 100

உலையில் மெழுகதுபோல் உருகுதே யென்மேனி
தலையில் எழுத்திதுவோ சங்கரனார் சொற்படியோ 101

உள்ளமிது கல்லோ உருகாம லென்னைவிட்டு
எள்ளளவு முள்ளம் இரங்காம லேபோரில்
மெள்ளவந்து போர்தனிலே வீரமுட னிற்கயிலே 102

சல்லியன்தான் தேரூரச் சமர்க்களத்தி லேஉனக்கு
வல்லியன் தார்புயனே மாட்டாமல் நின்றாரே 103

மாத்தரச ரும்மை வளைந்து பொருகையிலே
வேத்தரசர் பார்த்தனும்மை விரைந்துதான் கொன்றானோ 104

பாத்தா லுமக்குப் பரமனொளிந் தேயெழுதி
நாத்திசையும் கீர்த்திகொண்ட நாரணந்தான் வந்தாலும் 105
ஆயிரத்தெட் டண்டம் அசுரர்படை வந்தாலும் 106

இலங்கைப் பதிக்கரசன் இரணியன்தான் வந்தாலும்
திலங்குபுகழ் வாளிக்கெதீர் தொல்புவியி லுண்டாமோ 107

தம்பியென்று நீரவனைச் சமர்க்களத்தி லேயறிந்து
வெம்பிக் கணைநாகம் விட்டீர் ஒருசரந்தான் 108

அந்தக் கணைநாகம் மாயனுட மாயமென்று
வந்துதே மீளவந்த வாளிதனை நீர்தொடுத்தால் 109

வன்னமிகு மாயன் மலர்ப்பாதஞ் சேர்ந்தாலும்
யென்னவிதங் கொண்டாலு மீசரியுடஞ் சென்றாலும் 110

சென்று விசயனுட சிரம்பிடுங்கி னாலொழிய
நன்றியுள்ள நாகமது நமரிடத்தில் வாராதே 111

அந்தக் கணையதனை ஐவர் தனக்காக
வந்தக்கணை யெய்யாமல் வாளியெச்சி யென்றுவிட்டீர் 112

மல்லமருங் கையானே வாளியுடன் வில்போட்டு
செல்லனைய கையானுந் திறமாக நிற்கையிலே 113

அய்யோ விசையா அதிவீர மோஇதுதான்
மெய்யாக யெய்துகொன்றா யென்வேந்தர் சூடாமணியே 114

காரையொத்த தோளானே கன்னரே யென்றழுதாள்
ஆரையெதுத் தாலுமெனக் கயனெழுத்து தப்பாதே 115

பாசமுட னும்மோடே பஞ்சணைமே லேயிருந்து
ஆசையுத்து வாழ அயன்பொறுத்தா னில்லைஐயோ 116

அரசெறியு மார்பாஉன் னழகு திருவடியை
விரகறியும் மேதினியில் வேந்தே யுனைக்காண்போர் 117

மன்னா உன்மேடை மணிமதிலுங் கோபுரமும்
என்னையும் நீர்மறந்து இப்போ ரறியமதில் 118

எண்ணித் துணிந்து யிறந்தீர் சமர்க்களத்தில்
மண்ணில் கிடக்க வசமாச்சோ உன்னுடல்தான் 119

உன்னைப்போல் வேந்தரிந்த உலகுக்கு வாயாது
தன்னைத்தவ றாதவனே சற்குணமே மாமுடியை 120

பொன்னை வழங்கிஇந்தப் பூவுலகி லேத்தவர்க்கு
என்னை மருவி இருந்தமன்னா யென்றழுதாள் 121

அன்பா யுடனிருந்து ஆசையுற்று வாழ்ந்திலனே
பொன்பரவு மேனி புழுதிபட மண்மீதில் 122

ஈனும் வயறு இரங்கிக் குடிபோக
நானுமிருப் பேனோயென் னாயகமே யென்றழுதாள் 123

தென்னன் திரியோ தனப்பெருமாள் தனக்கீந்த
அன்னம் புழுக்கதுவு மதுமாத்த வந்தீரோ 124

மன்று தனில்மத்த வலிமைசெய் தானேபாத்தன்
அன்று துரியோதன னரசு வாண்டதினால் 125

கண்டிருந்து வேதன் கருத்துள்ளே தானினவாய்
உண்டிரு நீபுழுவை யென்று விடைகொடுத்தார் 126

அன்ன மொருபிடியை அமுதுசெய்ய மத்தமுது
பின்னைப் புழுவாய் நெளியு மரசனுக்கு 127

இந்தப் படியே இருந்தரசைத் தானாண்டு
அந்தப் பொருப்பிலுள்ள அரசர் தனையடக்கி 128

ஆளும் படியே யரசாண் டிருக்கையிலே
வாழ்வு வரவே வருகஎன நினைந்து 129

உன்னி யிடித்து உலகங் கிடுகிடென
மின்னி முழங்கியிந்த மேகங் கருத்திருண்டு 130

மாரி பொழிய மதனிரதி போல்பெருகி
வாரி யெருமுகமாய் வந்துவெள்ளந் தான்கூடி 131

காடுஞ் செடியும் கற்கும் பலமரமும்
மேடுங் கரைத்து விண்ணில்வெள்ளம் பெருகிவர 132

ஆனை கரடிபுலி ஆளிசிங்கம் மான்மரைகள்
சேனைத் திரளெனவே சேர உருட்டி வெள்ளம் 133

வெள்ளத்தின் மேலேநீர் வீற்றிருந்த பெட்டகமும்
வள்ளத் திருக்குழலும் வார்காதில் குண்டலமும் 134

கண்டெடுத்துச் சூதன் கடுக வவர்மனையில்
கொண்டுபோய் வைத்திருந்து குறியழகு கண்டவுடன் 135

வேதன் விதியாலே வேந்தனிவ னாரேனவே
சூதன் வளத்தனுப்ப பரசூ ராமனிடத்தில் 136

கீர்த்தியுள்ள வில்தொழில் கீதமாய்ப் படிக்கையிலே
பார்த்தனுக்காய் விட்டுணுவும் பார்மீதி லேதோன்றி 137

ஆசாரி யன்தனையும் அங்கரனே உந்தனையும்
பேசா துறவாகிப் பிணக்கிட்டா னேமாயன் 138

அந்த மொழியுடனே அரவக் கொடியோன்முன்
வந்தீரே யப்போது மன்ன னெடுத்தழைத்து 139

எங்கிருந்து வந்தீர்நீர் என்னுடைய தம்பியரே
அங்கரசர் கோவேநீ ஆரிடத்தி லேயிருந்தாய் 140

ஆத்தோடே வந்தேன் அண்ணாவி யென்றுரைத்து 141

என்னைநீர் மணம்புணர்ந்து யிருந்தரை சாளும்நாளில்
உன்னையு மிழந்துநானும் உயிர்த்தமொன் றறியாநாளில் 142

அன்னையாம் குந்தாதேவி ஆத்தாள் மைந்தனென்ன
பின்னைநான் மகிழ்ந்துநன்றாய்ப் பிரிசமுத் திருந்தேனென்றாள் 143

அந்நாளு மும்மை அறிந்தேனே யாமாகில்
முன்னாமுன் நானும் முகமறிய மாட்டேனே 144

ஆசைமிகப் பூண்டு அன்பா யுடனிருந்து
வாசமிகும் பூவணைமேல் மகிழ்ந்துநலம் பாராட்டி 145

சேர்ந்துநலம் பாராட்டிச் செல்வனே யும்முடனே
வாழ்ந்து முகியேனோ மன்னவனே யென்றழுதாள் 146

சோதி முகத்தழகும் துலங்கு குறியழகும்
ஆதி யருளால் அடியாளினி காண்பதெப்போ 147

தேய்பிறை போலநெத்தித் திருவழகும் மார்பழகும்
வாயழகு மும்முடைய வயிரப் பணியழகும் 148

எண்ணும் இருகரத்தில் இரத்தினவிர லாழிகளும்
நண்ணும்படி யுன்னழகை நான்காண்ப தெக்காலம் 149

ஆடை யுடையழகும் ஆலிலைபோ லேவயிறும்
கோடைவெறுப் பில்லாத குளுந்த முகத்தழகும் 150

என்றுநான் காண்பே னெனவழுதாள் பொன்னுருவி
குன்றுருவ வேல்வாங்கும் குமாரர் அழகுடைய 151

அருமைப் பெருமாளே அங்கர்கோ னேயுனது
பெருமைத் தனங்களெந்தப் பிறப்பிலே காண்பதினி 152

தந்திர முடையவேந்தே தாரணி புரக்குமார்பா
இந்திரன் வேதன்மாலும் இமையவர் மெச்சுந்தீரா 153

அந்தரத் தரசர்கோவே ஆதவன் மைந்தாஉன்னை
இந்துநுதல் குந்தாதேவி மைந்தனென் றறிந்திலேனே 154

ஐயோ குருநாடு ஆளுவதும் போதாமல்
வையகமீ ரேழுலகும் வாங்க மனதிலுன்னி 155

என்று சிவனா ரிடத்தில் அவதரித்து
சென்று வரம்வாங்கித் திரும்பவரப் போனீரோ 156

ஐயோ விசையா அறிந்திருந்தும் மாயனுரை
மெய்யாகக் கேட்டுமிந்த மேதினியோர் கொண்டாடும் 157

மன்னவரைக் கொல்ல மனம்வந்து தோவுமக்கு
நன்றிசேர் கன்னனிந்த நாகபா சந்தனையும் 158

உன்னைக் குறித்தல்லோ ஒருசரமென் றாணையிட்டு
பின்னைமனம் வையாமல் பிரமாணஞ் செய்தாரே 159

அந்தநன்றி சற்றும் அறிந்திலையே நீவிசையா
உன்தமையன் தருமன் உரைத்திலையோ அண்ணரென்று 160

பாவி விசையாநீ பாராமல் மைந்தனையும்
ஆவி மருகவேநீர் அறிந்திருந்து கொன்றீரே 161

தம்பி விசகர்ணா தார்வேந்தே உன்தகப்பன்
நம்பியிருந் தாரேஇந்த நாட்டுக் கரைசுவைக்க 162

பெரிய தகப்பனுரை பேச்சுந்தான் மாறாமல்
அரிதாய் அருச்சுனன்கை அம்பால் மடிந்தீரே 163

என்மகனே தம்பி இசைந்த விசகர்ணா
கன்மமோ தீவினையோ காண்டா வனமெரித்தான் 164

அண்ணர் மகனென்று அறியாமலே விசையன்
விண்ணோர் அறிய மேதினிமேல் கொன்றானே 165

நின்று புலம்பி நெடுமால் தனைநினைந்து
சென்று விழுந்து புரண்டழுதாள் பொன்னுருவி 166

பிரிசமுத் திருந்தேன்நானும் பேருல காளும்தீரர்
வரிசையத்த யிவர்க்கெல்லாம் வந்துமுன்னுதித்த
வேந்தேஉன்னை 167

தெரிசித்து வாழும்நாளில் சீர்பெறு சிங்கம்போல்
அரியுனைச் சதித்தானென்றே ஆயிழை அலறிவீழ்ந்தாள் 168

பாவி சிவனே பரப்பிரம னேயெனது
ஆவி மெலிந்தே னயன்மாலே யென்றமுதாள் 169

அடையலர்கள் மெச்சுமெங்கள் அங்கர்கோ னையுமின்று
இடைபரந் தாமா யெழுதி முடித்தாயோ 170

அய்யோ பிரமாவே அங்கர்கோன் தன்சிரசில்
பொய்வாழ் விதென்றோ பொறித்தீ ரெனவழுதாள் 171

கண்ணான மன்னவனைக் காசினியில் எந்நாளும்
எண்ணிறைந்த காலம் இருக்கவிதித் தாயிலையோ 172

நாற்றிசையும் கீர்த்திகொண்ட நளினத்திரி யோதனனை
போற்றி யிருந்ததுக்கோ போனீர் சிவலோகம் 173

சரத்தால் பெரியமன்னன் தாடாளன் அங்கர்கோன்
உரத்துப் பொருதால் ஒருத்தரெதிர் இல்லையென்றே 174

வந்து சதித்தீரே வள்ளலே யென்றழுதாள் 175

கல்லைப்பெண் ணாக்கிய காயாம்பூ மேனியனே
வில்லை முறித்து விதுரன் மனம்வேறாக்கி 176

முடிவற்ற சேனைகளும் மூற்கை பலதுமறிய
அசுவத் தாமாவை அவற்குப் பகையாக்கி 177

எந்தன் கணவன்மே லியல்விசைய னையேவி
வந்து கொல்லுமென்று மாயன் உரைத்தானே 178

தென்னன்துரி யோதனனார் சேனைக்கு மென்னுடைய
மன்னவனார் கன்னனுக்கு மாயன்பகை யாயிருந்து 179

மல்லுக் குத்தவந்த வாலியைக் கொன்றாற்போல்
வெல்லும் படியே விசையன் தனையேவி 180

காண்டா வனமெரித்தான் கையில் சிலையாலே
மாண்டாயே யென்கணவாயென்று மறுகிப் புலம்பலுற்றாள் 181

ஆதி சிவனே அயன்மாலே யென்றனுக்கு
வேதியர்கள் சொல்படியோயென் விதிவசமோ யென்றழுதாள் 182

பன்னுதமிழ் பாடி பாவலர்கள் வந்திருந்தால்
என்னமதி சொல்லி இசம்பிடுவே னென்கோவே 183

முன்னாள் விதியோ முதியோர்கள் சொல்படியோ

இன்னா ளிறக்கவென்றோ ஈசன் எழுத்துமுறை 184

ஆதித்தன் மைந்தாவுன் அழகு திருவடிவை
கண்ணாரக் கண்டு கலந்து மிகக்கூடி 185

பாவித் திருக்கப் பரமன்விதித் தானிலையே 186

ஐயோ சிவனே அருளுமையே யென்றழுதாள்
மெய்யே பதறி விழுந்தழுது மென்சொல்வாள் 187

முன்னிருந்து மாண்டமுடி வேந்தர்க ளைப்போல
உன்னை நினையாம லுலகிலர சாண்டாரோ 188

மாயனே நீயறிய வையகத்தி லேயிருந்து
தாயில்லாப் பிள்ளை தவித்ததுபோ லானேனே 189

கீர்த்தியுள்ள நாட்டில் கிரேதா உகந்தனிலே
சாத்துமறை நால்வேதஞ் சகலகலை யும்கத்து 190

அரிநமச் சிவாயமென்ற அஞ்செழுத்தை யுந்தவிர்த்து
இரணியனும் பூவுலகில் இருந்தரைசு தானாண்டான் 191

மாயரே நீரறிந்து வலிமை மிகப்பெருத்து
ஆயரே நீரு மவன்மேலே வர்மம்வைத்து 192

புகலு மிடந்தனிலும் பொருதுவெல்லக் கூடாமல் 193

என்று வரங்கொடுத்த ஈசுரனார் தாமறிய
நன்றியுள்ள மாயவரே நடந்தீர் வனம்பதியில் 194

சோதி மருள்வந்து துலங்கும்வையம் மூடுமுன்னே
ஆதி யருள்கதிரோன் அரைநாழி கைதனிலே 195

மடைவாயி லரவதுபோல் வந்திருந்தீர் மாயவரே
நடையில் அவனுயிரை நாம்வாங்க வேணுமென்று 196

சிங்கமெனச் சீறிச் சினந்தவன்தன் வல்லுயிரை
அங்கம் பிளந்தீ ரவன்போலென் மன்னவனும் 197

தீங்குதான் செய்தாரோ திருமாலே உன்தனக்கு
வாங்குவளைக் கையானேயென் மன்னவனைக் கொன்றீரோ 198

அந்த யுகங்கழித்து ஆனதிரேதா யுகந்தனிலே 199
தம்பி கும்பகர்ணன் தானு மிந்திரசயித்து
கம்ப மதயானை இலங்கைக்கிறை யேமுண்டெனவே 200
உண்டெனவே யென்று உலகங் கிடுகிடென்ன
அண்டரெல்லாம் போத்த அரக்க னரைசிருந்து 201
உண்டோ உனக்குமிந்த உலகு தனிலெதிரி
கண்டோ மிலையெனவே காசினியை யாண்டிருந்தான் 202
உந்தன் விதிப்படியா லுன்னூ ரயோத்திவிட்டு
வந்தாய் யோக வனந்தனிலே மாதுடனே 203
அந்த வனந்தனிலே ஆசரி மகன்தவசை
தந்திரமாய் இளையோன் தவசை யழித்துவிட்டான் 204
கொண்டுவந்தாள் மதுவைக் கொடியாள் மகன்தனக்கு
கண்டாள் மகன்மாண்ட களத்தி லரக்கியுந்தான் 205
கொண்டாள் சுருவமதைக் கொற்றவர்கள் மாலேத்த
சுண்டாள மாமுனிவோர் தானு மயலேற 206
வந்தாமுன் மாடத் தருகேதான் வல்லரக்கி
சுந்தரஞ்சேர் மன்னா துணையாவே னென்றுரைத்தாள் 207
அந்த மொழிகேட்டு ஆயரே யப்பொழுது
சுந்தரமாய்ப் பாதியுண்டு தம்பியிடம் போடீயென்றீர் 208
அந்த உரைகேட்டு அரைசேயுன் பாதியென்று
இந்திர லோகத்தை எடுத்தா ளரக்கி 209
அட்ட திசையறிய அரக்கர் பதியழிய
வட்ட முலையோடு வாயொடு மூக்கரிந்தார் 210
அந்த உரைகொண்டு அறிவித்தாள் ராவணற்கு
இந்த உலகுதனில் எனக்குவல்லா ருண்டோயென்று 211
பண்டே விதிமுறையாய்ப் பரமனிட்ட கட்டளையால்
தண்டா மரைத்திருவை யுன்சன்னதியில் வாழ்மயிலை 212
கந்தமருஞ் சோலையிலே காவல்வைத்தா னென்றுசொல்லி

வந்தெடுத்துக் கொண்டே பொய்வாளரக்கன் மாய்கையினால் 213

அன்றநுமான் தன்னைவிட்டு அரக்கர் பதியழித்து
சென்றிலங்கை வேந்தனையுஞ் சேனாபதிதனையும் 214

கொன்றுழக்கி லெட்சுமியைக் கூட்டிவந்தீர் மாயவரே
நன்றுபுகழ் மாயவரே என்னாயகனு மிப்புவியில் 215

அந்த அரக்கனைப்போல் ஆயரே அங்கர்கோன்
இந்த உலகமதி லென்னகுத்தம் செய்தார்காண் 216

மன்னவனே யும்முடைய மலர்ப்பாதம் போற்றாமல்
என்னகுத்தஞ் செய்தார்காண் இப்படிநீர் செய்தீரே 217

வெற்றியுள்ள பூவுலகில் மேதினியி லிராசாக்கள் 218

அரிச்சந்திரன் தானும் ஆனமனை யாருடனே
வரிச்சந்த மணக்க மன்னர் அயோத்தியிலே 219

ஒருசொல்லும் வாசகனா யுலக மரசாண்டு
பரிசுத்தமாய்ச் சந்திர பதியுடனே வாழ்கயிலே 220

வெத்தியுள்ள பூவுலகில் மேதினியி லேநண்ணும்
சத்தியுடன் வாழ்ந்து தானு மிருக்கலையோ 221

அண்டர் பதிக்கரசே ஆயரே யென்னுடைய
தண்டமிழ்சேர் மன்னவரே தானுமர சாண்டிருந்தார் 222

சச்சந்த னென்றொருவன் தாரணியைத் தானாண்டு
உச்சந்த மாகயிந்த உலகி லரைசாண்டு 223

அசையா மனிதர்க்கு ஆறிலொன்று தான்வாங்கி
விசையமா தேவியுடன் வீற்றிருந்து வாழ்கலையோ 224

பாரின்மே லாசையுற்றுப் பாருலகை யாளாமல்
காரியக் காரனந்தக் கட்டியக் காரன்றன்னையும் 225

நாடுதனை நீயாளும் நானரசா யுள்ளிருப்பேன்
தாடாளன் நல்லதென்ன சகலகட் டியக்காரன் 226

பாருலகை யாண்டந்தப் பார்வேந்த யிக்குமவன்
ஏருரையு மாயவரே னார்ரண்டு நினைந்தானே 227

உண்ட சோத்துக்கு உடனே வினைவளர்த்து
தண்டா மரைமார்வன் சந்தான ராசாவைக் 228

கொல்லவென்று சொல்லியவன் கூறினான் கட்டியனும்
நல்லபுகழ் மந்திரிதான் ராசாவுக்கும் உரைப்பான் 229

அன்றுநான் சொன்னேனே அறிந்திலையே நீயரசே
இன்றுமுன் தேவியவள் இங்கிருக்க வேண்டாங்காண் 230

நன்றியுள்ள மன்னவனே நான்போறே னென்றவுடன்
வென்றியுள்ள மின்னாள் விசயமா தேவிதன்னை 231

அன்னத்தின் மேலிருத்தி ஆகாசம் போமெனவே
வன்னத் திருநுதலை வாக னனுப்பிவிட்டான் 232

அந்தமின் னாள்புவியி லாகாசம் போனதற்பின் 233

கொன்றானே கட்டியனுங் கோமான்சச் சந்தனைத்தான்
அன்றோர் புரமெரித்த அரனார் அறியவேதான் 234

அந்த அரைசனையும் அடக்கியதோர் காடதிலே
வந்தாள் அரைசனுட மனைவி சுடுகாட்டில் 235

நின்று புலம்பி நெடுமூச்சு கொள்கையிலே
அன்று பகையறுக்க அரனார் திருவருளால் 236

வந்து பிறந்தானே வடிவழகன் சீவகனும்
அந்த உலகிலருள் வாணிகன் தானொருவன் 237

வருசமொரு குழவி மாளுதே யென்றுசொல்லி
கருதி மனதிலுன்னிக் காலனே யென்றழுதான் 238

இன்றிந்தப் பிள்ளைதனை யான்புதைப்பே னென்றுசொல்லி
நன்றியுடன் வணிகன் நடந்தானே காடதிலே 239

வணிகன் வரவுகண்டு மாதா அவ்வையாரும்
அணியாய் எதிர்நடந்து அப்பாயீ தேதெனவே 240

தந்தை புதைத்திருந்தால் தாரணியி லேஇகழ்ச்சி
உந்தனுக்குப் பிள்ளை இருக்கு மெனஉரைத்தாள் 241

இந்தமக னேராக ஈரொன்பதின் புராணம்
அந்தமுடன் கலைகள் அறுபத்து நான்கதுவும் 242

கொண்டுவந்த ஆள்தனக்குக் குத்தம் பலதுரைத்து
வண்டமிழோர் கொண்டாட மங்கை மன்றேற 243

இன்னபடி யாள்தனக்கு இயல்பு களுமுரைத்து
மன்னர் மனமகிழ மனவியென்ற தத்தையுடன் 244

சாந்து புனுகுடனே சந்தனங்குங் குமம்திமிர்ந்து
வாழ்ந்து இருக்கலையோ மாயவரே நீரறிய 245

மானேந்து கையான் மகாதேவர் தாமறிய
ஆனைதனை விலகியிட அரிவையர்மே லாசையுற்று 246

மணமாலை சூட்டியந்த வையகத்தில் சீவகனும்
குணமாலை தன்னுடனே கூடி யிருக்கலையோ 247

நாடறிய வையகத்தில் நல்லதொரு பெண்கொடியாள்
ஏடவிழும் பூங்குழலும் இருவிழியும் உருவழகும் 248

அசைந்த இருதனமும் அன்னமின்னார் மெல்லியலும்
புசங்கள் அசைந்திடவே பொருநுதல்வேர் சிந்திடவே 249

காமசர மூடாமட கன்னிய ரிசைபாட
கேம சரியுடனே இருப்புத்து வாழலையோ 250

நாத னருளாலே நல்லதொரு சீவகனும்
வேதன் விதிப்படியால் மன்னர் பதுமையுடன் 251

வாழ்ந்து மிருக்கலையோ மாயவரே நீரறிய
வேந்தர் திடுக்கிடவே மேலான சீவகனும் 252

வரிசையுடன் நன்றாக வாழ்ந்திருக்கு மன்னாளில்
விரைசேரும் மண்டலத்தில் விற்கனக மாலையென்றும் 253

காசினியிலே தோன்றிக் காமனென்ற சீவகற்கு
ஆசரிய முண்டாய் அவளைமணஞ் செய்யலிலியோ 254

பச்சை புழுகு பரிமளங்கள் உள்ளதெல்லாம்
இச்சையுடன் திமிர்ந்து இருக்குமந்த நாளையிலே 255

புத்திரிக் களித்து போர்வேந்தன் சீவகனும்
சத்தி விமலையுடன் தான்வாழ்ந் திருக்கலையோ 256

ஆர மிலங்க அழகு பணியிலங்க
கோரஞ் சுமந்தவிழிக் கொம்பே மருங்கினிடை 257

பாரஞ் சுமக்கப் பயந்துகுடி போனார்காண்
வாரஞ் சுமந்தமுக மங்கைசுர மஞ்சரியை 258

சச்சந்தன் மைந்தனவன் தானவள்மேல் மோகமுற்று
கச்சுப் பொருமுலையாள் கன்னிசுர மஞ்சரியை 259

அச்சப் படாமல் அவளை மணம்புணர்ந்து
உச்சந்த மாக உலகில் இருக்கலையோ 260

திக்கெட்டும் போற்றத் திசைநாலும் சேசேயென
நற்கெட்டும் பூமுலையார் நாடகங்க ளாடிவர 261

துலக்கமுள்ள மன்னன் தொல்புவியில் சீவகனும்
இலக்கணையார் தன்னோடு மிருந்துமிக வாழலையோ 262

இப்படியே மன்னன் இருநான்கு தேவியுடன்
ஒப்பமுடன் வாழ்ந்து உலகுதனை யாளவென்று 263

தகப்பன் தனைவதைத்த கடன்கட்டி யன்தனையும்
உற்பத்தி யாக உறுபூசல் செய்தவனை 264

வஞ்சகன் கட்டியனை வாணாள் தனைவதைத்து
நெஞ்சில் துயர்நீங்கி நெடுநாள் அரசாண்டான் 265

மன்னவனார் மாண்டார் மகனிருந்து சீர்மைந்தன்
தென்னவனைப் போலே சிறந்திருந்து வாழலையோ 266

நன்றியுள்ள மன்னரையும் நல்லபுகழ் மைந்தனையும்
கொன்றீ ரொருகளத்தில் கோவிந்தா வென்றழுதாள் 267

இப்படியே கொன்றீர்காண் என்கோவே யென்றழுதாள்
சொல்படியே மாயனுரை சொல்மறுக்க மாட்டேன்காண் 268

வென்றியுள்ள வில்லி விசையாவுன் வாளியினால்
நன்றியுள்ள பூவுலகில் நமசிவாய மறிய 269

பொன்றிவிழக் கொன்றீரே போர்வேந்தே யென்றழுதாள்
கன்றி மனம்பதறி கையை முகத்தறைந்து 270

இந்த உலகமதி லெவனோ ஒருத்தன்
வந்து பிறந்துமிந்த வையகத்தை யாண்டிருந்தான் 271

ஆறணியுஞ் செஞ்சடையார் அம்பலவா ணர்பதத்தை
நீறணிந்து நித்தம் நினையா திருந்தாரோ 272

அன்று புரமெரித்து ஆனை தனையுரித்தீர்
மன்று தனிலாடு மகாதேவரே நீர்தானோ 273

வெண்மையுள்ள கண்ணனனைத்தான் விசையாஉன் கையாலே
உண்மையுடன் கொல்லுமென்றோ உத்தேசம் வைத்தீர்காண் 274

அன்றுநல்ல சோலையிலே அழகுபூங்கா வனத்தில்
நின்றுதவஞ் செய்ததுவை நீரறிந்து பார்த்தனுக்கு 275

வென்றியுள்ள கர்ணனைத்தான் விசயாநீ கொல்லுமென்று
நன்றியுள்ள பாசுபதம் நாயகரே நீர்கொடுத்தீர் 276

கங்கை சடைக்கணிந்து காமன் தனையெரித்து
மங்கை யிடப்பாகம் வைத்தருளும் ஈசுரரே 277

மன்னவரில்லாத மனைவியிருந் தாவதுண்டோ
தென்னவனார் மாண்ட செருக்களத்தி லென்னுயிரை 278

சண்டன் மறலி சமனி சமனயேவி
அண்டர்க்கு நாயகமே அழைத்துவிடு மென்றுரைத்தாள் 279

மாடமணி மேடைகளும் மன்னர்மணி மண்டபமும்
ஆடரங்கு மாளிகையும் ஆனசித்திர சாலைகளும் 280

மந்திரிகள் சூழ வாணர் கவிபடிக்க
இந்திர லோகம்போல் இருந்தரசு மாண்டீரே 281

கந்தன் அழகுடைய கன்னரே யென்னுயிரை
உம்மோடே சாயு முத்தமரே யென்றழுதாள் 282

உந்தன் சிலையழகும் ஒப்பழகும் இப்புவியில்
காண்பேனா வென்று கதறினாள் பொன்னுருவி 283

தான்பாவி யானேனோ தன்மனது வேறாச்சோ
நான்பாவி மைந்தனையும் நன்றாய் இழந்தேனே 284

மான்கரத்தி லேந்து மகாதேவர் தன்னருளால்
நான்தா னிருப்பேனோயென் நாயகரே யென்றழுதாள் 285

பூவில்லாக் காவானேன் புனலில்லாத் தூரானேன்
பாவில்லா நற்கவிபோல் பாரிழந்த பூடானேன் 286

தேசமேழு கடலும் தேவர்களுந் தானறிய
ஓசையில் லாத ஒளிமணிபோ லானேனே 287

அதிர உலகளந்த அச்சுதரே நீரறிய
கதிரோன் உதயமில்லாக் காவானேன் மாயவரே 288

என்னுடைய மைந்தனையும் ஏத்தமுள்ள மன்னரையும்
உன்னுமுன்னே கொன்றீரே உலகளந்த மாயவரே 289

குன்றனைய தோளானே கொற்றவரே யென்றழுதாள்
கன்றி முகம்வாடிக் கலங்கினே னென்றழுதாள் 290

வாசமுள்ள மின்னே மலரேயென் கண்மணியே
ஆசையுள்ள மன்னவரேயெனக்கு ஆருதுணை யென்றழுதாள் 291

பொன்னே நவமணியே புருசாகாத் தோன்நீயே
உன்னை யிழந்தன்றோ உயிரிழந்தே னென்றழுதாள் 292

தம்பிமார் அய்வருந்தன் தாள்பணிந்து போற்றிநிற்க
அம்புவி யாள்வேந்தே அரைசாண் டிருந்திலையே 293

பழுதற்ற சீர்வடிவே உன்பாரத் திருமேனி
கழுகுக் கிரையாகக் கண்தூங்கக் காரணமேன் 294

மாலையிடும் மார்பாஉன் மணிமுடியுங் காணாமல்
ஆலையி லிட்டகரும் பானேனே யென்றழுதாள் 295

செம்பொன் திருமுடியும் சிறந்தமுத்தின் பல்லழகும்
அம்பத்துக் கண்டும் அயர்ந்து மிருப்பேனோ 296

வருவேனான் என்னுடைய வாணாள் தனைப்போக்கி
அரைசே யெனையழைத்தால் ஆகாதோ வென்றழுதாள் 297

நேசமுள்ள கண்மணியே நினைவழிந்தே னுன்னாலே
பாசமுட னென்னைப் பருந்தாடல் கண்டீரே 298

ஆசையுள்ள தம்பி அருச்சுனன்தன் கையாலே
கூசாம லேயிது கொடியசினந் தீர்த்தானோ 299

அவனி முழுதும் அரசளித்த மன்னவனோ
பவனி வருகையிலே பார்த்து மிருந்தாரோ 300

பாச மறந்தாவி பதறிஉயிர் போகுதய்யோ
தேசம் எழுகடலும் சிறப்பா யலங்கரித்து 301

நேரில் பவனியண்ணர் துரியோ தனன்வைத்து
காரியக் காரருடன் காவலருஞ் சூழ்ந்துவர 302

ஆடல் கொடிபறக்க அரைசர் நெருங்கிவர
கூடப் பவனிவருங் கொற்றவனே யென்றழுதாள் 303

அறுபத்து முக்கோடி ஆனைபரி தேர்க்காலாள்
மறுபத்து ராசாக்கள் வந்து பதம்பணிய 304

இருந்து செலுத்தி இராச்சியத்தை ஆளாமல்
பருந்துக் கிரையாகிப் பதறியுயிர் போவாரோ 305

பச்சைமாலே நீர்தான் பண்பாக என்னுடைய
இச்சையுள்ள மன்னவனை யேன்கொன்றீ ரென்றழுதாள் 306

ஆயரே அங்கர்கோன் தீயகுத்தஞ் செய்தாரோ
மாயனே அய்வருமென் மன்னவனைக் கொன்றாரே 307

கஞ்சன் தனைவதைத்துக் காசினியில் பாரதப்போர்
பஞ்சவர்க்கு மூத்ததொரு பார்வேந்தர் கன்னரைத்தான்
நெஞ்சு துணிந்தே நெடுமாலே கொன்றீரே 308

பாரி லரசாண்ட பார்வேந்தர் மன்னவரை
வாதுசொல்லிக் கொன்றீரே மன்னவரே யென்றழுதாள் 309

அந்த மொழிகேட்டு அச்சுதனும் வந்துநின்று
கந்த மருங்குயிலே கன்னியரேயான் சொல்லக்கேள் 310

உந்தன் கணவ னுடன்பிறந்த பஞ்சவர்கள்
வந்துகொன்றா லென்செய்யலாம் வாழ்மயிலே என்றுரைத்தார் 311

பஞ்சவர்கள் அய்வருந்தான் பாராள வேதுணிந்து
வெஞ்சமரில் உன்னுடைய வேந்தனையும் கொன்றார்கள் 312

